


# கிருஷ்ணப்பருந்து

## 36

“என்னோட பித்ருக்களே... நான் கேள்விப்படுறதெல்லாம் உண்மையா இருக்கக்கூடாதே!” காரியஸ்தரிடமிருந்து குமாரன் தம்பியின் திருமண யோசனையைப் பற்றிக் கேள்விப்பட்ட குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பூஜையறை வாசலின் முன்பாக நின்று உரத்த குரலில் முறையிட்டார். அந்தத் தாயுள்ளம் வெந்து கொண்டிருந்தது. பயங்கரக் கனவு கண்டு திடுக்கிட்டதுபோல் அவரது உடல் நடுங்கியது.

மகனுக்கு இப்படியொரு மனமாற்றம் ஏற்படக் கூடுமென்று அவர் கனவில்கூட நினைத்ததில்லை. மாந்திரீகப் பதவியேற்ற நிமிடத்திலிருந்து சாத்வீகனாக வாழத் தொடங்கியிருந்த தனது மகன், அவனது முன்னோர்களைக் காட்டிலும் சிரேஷ்டமான மாந்திரீகனாகி விட்டான் என்று நம்பினோம்.

கருடசேவையின் ஆரம்ப கட்டத்திலேயே கருட பகவான் அவனை அனுக்கிரகித்தார். அபூர்வமாக மட்டுமே தரிசனமளிக்கும் கிருஷ்ணப்பருந்து தொடர்ச்சியாக இந்த வீட்டின் சுற்றுப்புறத்தில் காட்சியளிக்கத் தொடங்கியபோது பெருமிதத்துடன், காரணமற்ற பயமும் தன் மனத்தில் குடியேறவே செய்தது. மகனது பக்தி இவ்வளவு கடுமையாக இருக்க வேண்டாமே என்றுகூட நினைத்ததுண்டு.

கருட சேவையுடன் ஹனுமானையும், பகவதியையும் அளவற்ற பக்தியுடன் சேவித்து அவர்களுடைய அனுக்கிரகங்களையும் பெற்ற குமாரன், ஒரு யோகியைப் போல் நடந்து கொண்டான். முறைப்படியான பூஜைகள், விதிப்பிரகாரமான

உபவாச விரதங்கள் போன்றவற்றைக் கடைப்பிடிப்பதில் எவ்வளவு எச்சரிக்கையாகவும், உற்சாகத்துடனும் ஈடுபட்டான்!

கடவுள் பக்தியின் வற்றாத நீருற்று இதயத்திலுள்ளவரையில் ஒரு பக்தனின் மனம் பெண் விஷயத்தில் திசை மாறுமா? உக்கிரமான சாதகங்களின் பலனாகக் கைவரப்பெற்ற மனோபலம் ஒரு பெண்ணின் முன்னால் சட்டென்று குன்றிப்போகுமா?

மணிமங்கலத்து கேசவன் நாயரது மகள் சிறந்த அழகி என்பது உண்மை. அவளது உடம்பில் குடியேறிய உபாதையை விரட்டிய நாளில்தானே தன் மகனது மனம் இளகத் தொடங்கியது! இருந்தாலும் அது இவ்வளவு தூரத்திற்கு வரும் என்று ஒருபோதும் எதிர்பார்க்கவில்லை!

மாந்திரீகனானாலும் குமாரன்தம்பி திருமணமாகாத இளைஞன்தானே? இளமைக்கே இயல்பான சஞ்சலங்கள் கண நேரமாவது அவன் மனத்தைப் பாதிப்படைய வைத்திருக்கலாம். பலிக்கல்லைவிட உறுதியான ஆண் மனத்தையும் அசைத்து விடக்கூடிய வல்லமையுள்ள பெண்ணழகு அவனுடைய மனத்திற்குள் குரங்காட்டம் ஆடியிருக்கும். பக்தியில் ஈடுபட்டு சரணம் தேடினால், மனம் நிர்ம்மலமாவதுடன் மாயமான சுகநினைவுகளிலிருந்து விடுபடவும் செய்யும். இப்படியெல்லாம் தான் நடக்குமென்று நினைத்தோம்.

தனது நினைப்புகளும், கணிப்புகளும் தவறிவிட்டிருக்கிறது. கடந்த சில நாட்களாகத் தனது மகன் பூஜை மற்றும் மாந்திரீகக் கர்மங்களை நடத்தி வந்தது பிரம்மச்சரியத்தை மறந்த நிலையில்தான் என்கிற உண்மை, பயங்கர உருவம் தாங்கிவந்து தனக்கு முன்பாக நிர்வாண நாட்டியமாடுகிறது! இதையெல்லாம் கவனிக்க முடியாமல் தன் கண்களின் பார்வையே பறிபோயிருக்கக் கூடாதா என்று ஆசைப்பட்டது, சுயவிமர்சனத்தில் ஊறிய அந்தத் தாய்மனம்!

குமாரனின் ஒவ்வோர் அசைவையும் சந்தேகக் கண்களுடன் பார்த்துக் கொண்டிருந்த, இந்தத் தறவாட்டைச் சேர்ந்த மற்ற கிளை உறுப்பினர்களுக்கு-உறவினர்களுக்கு இதைவிட மகிழ்ச்சியான செய்தி வேறு என்ன இருக்கிறது? பரம்பரை



மாந்திரீகப் பதவி பெற்ற ஒருவன் மணமகனாகப் போகும் வேடிக்கையைச் சொல்லிக் கேலிப்பட்டாக வெடிக்க அவர்களுக்கு அருமையானதொரு சந்தர்ப்பமல்லவா கிடைத்திருக்கிறது. ஜபம், பூஜையென்று சன்னியாச வாழ்க்கை வாழ்ந்து வந்த மாந்திரீகன், பிரம்மச்சரியத்தின் பர்ணசாலையிலிருந்து மணமேடைக்குத் தாவும் காட்சியைக் கண்டு உறவு ஜனங்கள் வாய்விட்டுச் சிரிக்கும்போது அவர்களைக் குற்றம் சொல்ல முடியுமா? அவர்களது பக்கம்தானே ஊராரும் சேர்ந்து கொள்வார்கள்!

உறவினர்களும், ஊராரும் நையாண்டி செய்வார்கள் என்பதைவிட ஆபத்தான காரியமல்லவா-பாரம்பரியமாகக் காத்துவரும் புனிதமரபுகள் தலைகீழாக விழுந்து நொறுங்குவது? புத்தூர் தறவாட்டைச் சேர்ந்த எந்த ஒரு மாந்திரீகனும் திருமணம் செய்து கொண்டதாகக் கேள்விப்பட்டதுகூட இல்லை. திருமணம் செய்து கொள்ள வேண்டும் என்று தோன்றும்போது மாந்திரீகப் பதவியைத் துறக்க வேண்டுமென்பது முறை.

ஒருவேளை மாந்திரீகப் பதவியிலிருந்து விலக குமாரன் தீர்மானித்திருக்கிறானோ? அப்படி அவன் நினைத்திருந்தால் அதில் தனக்கு எந்தவிதமான வருத்தமும் கிடையாது. அருகதையுள்ள யாராவது ஒருவருக்கு மந்திரோபதேசம் நல்கிய பிறகு அவன் திருமணம் செய்து கொள்ளட்டும். இதில் அபவாதத்திற்கு இடம் கிடையாது. பாரம்பரியம் களங்கமடையாது. ஆசாரத்தை மீறுதல் என்பதும் இல்லை. எனவே அதனால் ஏற்படும் தோஷ பலன்களைப் பற்றி யோசித்துக் கவலைப்படவும் வேண்டியதில்லை.

வடக்குவீட்டு சேகரனுக்கே குமாரன் மந்திரோபதேசம் கொடுக்கட்டும். பழைய வைராக்கியத்தையும் கோபத்தையும் இந்த நேரத்தில் பொருட்படுத்த வேண்டியதில்லை. சேகரனும் இந்தத் தறவாட்டைச் சேர்ந்தவன்தானே? பரமபக்திமானாகவும், பண்டிதனாகவும் இருந்த வைரமனைப் போற்றியின் மகனும்கூட. முன்கோபக்காரன் என்பதைத் தவிர, எந்தவிதமான கெட்ட பழக்கமும் இல்லாதவன். நல்ல இளைஞன். குமாரனின் வயதுதான் அவனுக்கும். இந்தத் தறவாட்டின் மாந்திரீகனாவதற்கு எல்லாவித யோக்கியதைகளும் உள்ளவன்.

விளக்கேற்றுவதற்காகக் கொட்டாரத்திற்குப் போயிருக்கிற குமாரன் திரும்பி வரட்டும். அவனது உத்தேசம் என்ன என்பதை முதலில் அறிய வேண்டும். அதன் பிறகு தன்னுடைய கருத்தைத் தெரிவிக்க வேண்டும்.

எப்படி இருந்தாலும் புத்தூர் தறவாட்டின் மகத்தான மாந்திரீகப் பாரம்பரியம் களங்கமடைய தான் அனுமதிக்க முடியாது. குடும்பத்தின் கா்மஸித்தி அழிந்து போகக்கூடாது. தேவன் நாராயணன் மாமா, சாத்துமாமா, பப்பு போன்ற புண்ணிய ஆத்மாக்களை வேதனையடைய விடக்கூடாது. தறவாட்டின் ஆராதனா மூர்த்தியான கிருஷ்ணப்பருந்திற்கு கோபம் ஏற்படும்படிச் செய்யக்கூடாது. மங்குப்பாட்டி மீது ஆணையாக, பித்ருக்கள் மீது ஆணையாக, கருடபகவான் மீது ஆணையாக, இந்தத் தறவாட்டின் மீது ஆணையாக!

"என்னம்மா நடுமுற்றத்தில நின்னுட்டுக் கனவு காண்றீங்களா என்ன?" வீட்டிற்குள் நுழைந்த குமாரன்தம்பி ஆச்சரியக் குரலில் கேட்டான்.

சுற்றுப்புறச் சூழலுக்கு மீண்டுவந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி நடுமுற்றத்திலிருந்து கிழக்குப்புறத் தளத்திற்கு வந்தார். மகனுக்கு நேராக நின்றுகொண்டு அவர் கூறினார்: "உன்கிட்ட நான் சில விஷயங்கள் பேசணும். அங்கயே உட்கார்."

"கருடத் தியானத்தை முடிச்சுக்கிறேனே" என்றபடி அவன் நழுவிப் பூஜையறைவாசலை நோக்கிச் சென்றான்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் கோபம் சட்டென்று தலைக்கேறியது. "உன்னோட பொல்லாத கருடத் தியானம்! இன்றைய தியானம் கொஞ்ச நேரங்கழிச்சே நடக்கட்டும். முதல்ல நீ இங்க வா!"

தாயின் உணர்வு மாற்றம் மகனை வியப்படைய வைத்தது. ஒருபோதும் கோபத்திற்கு அடிமையாகாத, சாந்தமே இயல்பான தாயின் மனக்கட்டுப்பாடு கைமீறிப்போயிருக்கிறது. காரியஸ்தன் மூலமாகத் தன் திருமணத்தைப் பற்றித் தெரிந்திருக்க வேண்டும்.



மனத்திற்குள் ஏற்பட்ட திகைப்பு, குழப்பம் போன்றவற்றைக் கட்டுப்பாட்டிற்குள் கொண்டு வந்தவனாக அவன் அம்மாவை நெருங்கினான்.

"உட்கார் அப்படி!" தரையில் விரித்திருந்த பாயை, அவரது விரல் சுட்டிக்காட்டியது. மகன் உட்கார்ந்தான். மகனுக்கு அருகிலேயே தாயும் உட்கார்ந்தார்.

சற்றுநேரம் இருவரும் பேசவில்லை. அம்மாவிடமிருந்து உயர்ந்து கொண்டிருந்த வெப்பப் பெருமூச்சுகளில் ஒளிந்திருக்கும் கேள்விகளுக்கு, மகனது பெருமூச்சுகள் பதிலளிக்க முயன்றன.

நீண்டு நின்ற மௌனத்திற்கு குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் தழுதழுத்த குரல் விடை கொடுத்து அனுப்பியது: "நீ கல்யாணம் பண்ணத் தீர்மானிச்சிருக்கிற இல்லையா, குமாரா?"

"ஆமாம்!" தலைகுனிந்தபடி பணிவான குரலில் மகன் மந்திரித்தான்.

"நல்லா யோசனை செஞ்சுதான் இந்த முடிவுக்கு வந்திருக்கிறயா?"

"ஆமாம்!"

"மாந்திரீகப் பதவியை யாருக்குக் கொடுக்கப் போற?"

அம்மாவின் கேள்வி மகனைத் திடுக்கிட வைத்தது. பயத்தில் மிரண்டுபோன குழந்தை மாதிரி அவன் அம்மாவை மிரள மிரளப் பார்த்தான்.

"மாந்திரீகப் பதவியை நீ யாருக்குக் கொடுக்கப் போறேன்னு கேட்டேன்!" அம்மாவின் கேள்வி மறுபடியும் எழுந்தது.

"யாருக்கும் தரப்போறதில்லை. இப்போ அதுக்கென்ன அவசியம்?"

மகனது எதிர்க்கேள்வி அம்மாவைக் கோபம் கொள்ள வைத்தது. கோபம் கடுமையான வார்த்தைகளாக வெடித்துச் சிதறியது. "திமிர் பிடித்தவனே, தேவை இருக்கிறதாலதான்

கேக்குறேன்! மாந்திரீகனுக்குத் திருமணம் விலக்குங்கிறது தறவாட்டு முறைன்னு உனக்குத் தெரியுமில்லையா? தெரியலேன்னா இப்பத் தெரிஞ்சுக்க. கல்யாணத்திற்கு முன்னால வடக்குவீட்டு சேகரனுக்கு நீ மந்திரோபதேசம் கொடுக்கணும். புரிஞ்சதா?"

"சேகரனுக்கா... நம்மளோட விரோதிக்கா?"

"விரோதி நண்பனாகறதும், நண்பன் விரோதியாவதும் மனுஷ வாழ்க்கையில சாதாரணமா நடக்கிறதுதானே குமாரா? சேகரனுக்கு மந்திரோபதேசம் நல்க உனக்கு மனசில்லேன்னா, உன் மருமகன் கொச்சுராமனை மாந்திரீகனாக்கு."

"ரொம்ப நல்லாருக்கு! பதிமூணு வயசான சின்னப் பையனை மாந்திரீகனாக்குறதா? அம்மா என்னை மன்னிச்சிடுங்க. நான் சாகறதுவரையில. நான்தான் இந்தத் தறவாட்டு மாந்திரீகன்! கல்யாணம் பண்ணிட்டா மந்திரஸித்தி இல்லாமப்போயிடும்கிற நம்பிக்கை உண்மையில்ல. மங்குப் பாட்டியின் கணவரிடமிருந்து தானே நமது தறவாட்டிற்கு மந்திரஸித்தி கிடைச்சிருக்கு? மாந்திரீகனும், கருடசேவகனுமான கேளுநாயர் முத்தாத்தா (முப்பாட்டன்) பிரம்மச்சாரியாவா இருந்தார்?"

மகனது நியாயவாதத்தைக் கடுமையாக மறுப்பது போல் அவர் இரண்டு காதுகளையும் பொத்திக் கொண்டார்.பிறகு அலறல் குரலில் மகனைக் கடிந்தார்: "டேய், குருத்துரோகி! நாக்கை அடக்கிப் பேசு. கருட சேவகனுக்குத் தாம்பத்திய வாழ்க்கை கூடாது. கிருஷ்ணப் பருந்து எப்படிச் சட்டுன்னு காட்சியளிக்குதோ, அதே போல் சட்டுன்னு கோபங்கொள்ளவும் செய்யும்கிற சத்தியத்தைப் புரிஞ்சுக்க. ஆபத்தை வலிய வரவழைச்சுக்காதே, குமாரா!"

"நான் வெறும் ஒரு கருடசேவகன் மட்டுமில்ல... கிருஷ்ணப் பருந்தைவிடச் சக்தியுள்ள மூர்த்திகளையும் உபாசிக்கிறேன். முடியலேன்னா, கருட சேவையை ஒதுக்கி வைச்சுட்டுப் போகிறேன். அவ்வளவுதான!"

"டேய் மகாபாவி! இந்தத் தறவாட்டின் முதல் தெய்வமே கிருஷ்ணப்பருந்துதான். ஓலைச்சுவடிகளையெல்லாம் படிச்சு மற்ற



மூர்த்திகளை நீ உபாசிக்கிறதுல தவறு ஏதுமில்லை. ஆனால், நம்முடைய பிரத்தியக்ஷ (கண்கண்ட) தெய்வமான கிருஷ்ணப் பருந்தை நீ மறந்துட்டா அதனோட விளைவு, அழிஞ்சுபோறதுதான்!"

"என்னைச் சபிக்கிறீங்களா அம்மா?"

"நான் உன்னைச் சபிக்கிறதா? எந்த ஒரு தாயாலயும் பெற்ற பிள்ளையைச் சபிக்க முடியாது. அப்படியே சபிச்சாலும் அது பலிக்காது! அதிகமா நான் எதையும் சொல்ல விரும்பலை. ஆனா ஒண்ணு, மணிமங்கலம் கேசவன் நாயரோட மகளை நீ கல்யாணம் பண்றதானால் மாந்திரீகப் பதவியை விட்டுடணும்!"

"அம்மா, உங்க ஆசைப்படி எதுவும் நடக்கப் போறதில்லை. கல்யாணம் செய்றதால ஏற்படுற விளைவுகளை நான் ஏத்துக்கிறேன். மற்றொரு குடும்ப உறுப்பினரை மாந்திரீகனாக்கி விட்டு, வெறும் ஒரு பார்வையாளனா மாற என்னால முடியாது."

அம்மாவை ஒருகணம் உற்றுப் பார்த்த பிறகு அவன் எழுந்து பூஜையறைவாசலை நோக்கி நடந்தான். ஒற்றைக் காலில் நின்று கருட சேவையை ஆரம்பித்தான்.

*"க்ஷிப ஓம் ஸ்வாஹா"* கருட பஞ்சாக்ஷரீ மந்திரம் முழங்கியது.

'அம்மாவை ஒதுக்கித் தள்ளிட்டுக் கருடனைத் திருப்திப்படுத்துற முயற்சியா?' குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி யோசனையில் ஆழ்ந்தார். கருடசேவகன் என்பவன் தாய்மீது பக்தியுடன், பணிவுள்ளவனாகவும் இருக்க வேண்டும் என்பதல்லவா பிரமாணம்! தாய்க்காகத் தன் சொந்த வாழ்க்கையையே பலியிடத் தயாரான தியாகியல்லவா கருட பகவான்! சாத்து மாமா சொல்லியிருந்த கதை ஞாபகத்துக்கு வந்ததும் உடல் சிலிர்த்தது. தாயைத் தெய்வமாகப் போற்றிய கிருஷ்ணப்பருந்தின் தேவலோகப் பயணக் கதை, எந்த ஒரு மகனும் தெரிந்திருக்க வேண்டிய கதை. தாயன்பை விளக்கும் கதை!

சிறந்த பதிவிரதையான கத்ரு மற்றும் குழந்தைகளான நாகங்களின் பணியாளாக இருந்தார், கருட மாதாவான வினதை.

இந்தச் சமயத்தில்தான் நிகழ்ந்தது கருடனின் பிறப்பு. அம்மாவை வேலைக்கார வேலையிலிருந்து முற்றிலுமாக விடுவிப்பதுதான் தனது பிறப்பின் நோக்கம் என்று கருதிய தாய்பக்தனான கருடன், அதற்கான முயற்சிகளைத் தொடங்கினார். தேவலோகத்திலிருந்து அமிர்தம் கொண்டு வந்து தந்தால் வினதையை, வேலைக்காரப் பதவியிலிருந்து அனுப்பி விடுவதாக கத்ருவும் மற்ற நாகங்களும் ஒப்புக்கொண்டன. அம்மாவை வணங்கிவிட்டு, தந்தையான கஸ்யபனை மனத்தில் பிரார்த்தித்தவாறு கருடன் தேவலோகத்தை நோக்கிப் பறந்தார்.

வலுவான சிறகடியோசை ஈரேழு பதினாலு உலகங்களையும் நடுங்க வைத்த சாகசமான பயணம். அமிர்தத்தைக் கவர்ந்து செல்வதற்காக மிகப்பலசாலியான கருடன் பறந்து வருகிறார் என்கிற விவரத்தை பிரகஸ்பதியிடமிருந்து தெரிந்து கொண்ட தேவேந்திரன், தேவர்களுடன் இணைந்து அமிர்தக் கலசத்திற்குக் காவல் நின்றான். சிறகடித்துப் பறந்துவந்த கருடன், தேவர் கூட்டத்தை எதிர்த்துத் தீரத்துடன் போரிட்டார். தேவேந்திரனையும், தேவர் கூட்டத்தையும் அவர்களது உதவிக்கு வந்த சூரிய, சந்திரர்களையும் பரிதாபப்படும் அளவிற்குத் தோல்வியுறச் செய்த பக்ஷிராஜா, தேவேந்திரனின் வஜ்ராயுதத்தைத் தூள் தூளாக நொறுக்கினார்.

அமிர்தக் கலசத்திற்குப் பாதுகாப்பாக வைக்கப்பட்டிருந்த அத்தனை யந்திரங்களும், ஆயுதங்களும் நொறுக்கப்பட்ட பிறகு அமிர்தக் கலசத்தை அலகில் பத்திரமாக எடுத்துக் கொண்டு, சூரிய வெளிச்சத்தை மறைத்தபடி பறந்துவரும் கருடனின் தீரத்தைக் கண்டு மகிழ்ந்த மஹாவிஷ்ணு, கருடனை ஆசீர்வதிக்கவும் செய்தார். 'அமிர்தம் பருகாமலேயே கிருஷ்ணப்பருந்திற்கு அமரத்துவம் உண்டாகட்டும்!' என்று வரம் அளித்தார்.

களங்கமற்ற தாயன்பின்-தாய்பக்தியின் அடையாளமாக அவதாரமெடுத்த கிருஷ்ணப்பருந்தை சேவிக்கும் மாந்திரீகனும் தாயன்பு உள்ளவனாக இருக்க வேண்டுமென்பது மரபு. ஆனால், தன் மகனோ? தாயின் வார்த்தையை ஒதுக்கித் தள்ளுகிறான்.



"என்னுடைய பித்ருக்களே! பார்க்கக் கூடாததையெல்லாம் பார்ப்பதற்கு இவளை விட்டு வைக்காதீர்கள். இந்தத் தறவாடு தகர்ந்து போவதற்கு முன்பாக இவளை உங்களிடம் அழைத்துக் கொள்ளுங்கள். இவளுக்கு வாழ்க்கையே போதுமென்றாகி விட்டது!" நடுங்கும் கைகளைக் கூப்பிக்கொண்டு அவர் பிரார்த்தித்தார்.

# 37

விடியற்காலை வேளையில் புத்தூர் வீட்டின் தென்புறப் படிப்புரை வழியாக வந்த மணிமங்கலத்து கேசவன் நாயருக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவே இல்லை. முற்றப் பகுதி முழுவதும் ஏராளமான மனிதர்கள். விஷம் தீண்டியவர்கள், காக்கை வலிப்பு நோயாளிகள், துர்த்தேவதைகளின் தொல்லைகளுக்கு ஆளானவர்கள், தாயத்துகளுக்காக வந்திருப்பவர்கள் என்று பல்வேறு காரணங்களுக்காக வந்திருக்கும் பல்வேறு வகையான மனிதர்கள்... வயதான ஆண்-பெண் கூட்டம். எல்லோரும் மாந்திரீகனைச் சந்திப்பதற்காக வரிசையாகக் காத்திருந்தனர்.

கேசவன் நாயர் சற்றுநேரம் முற்றப் பகுதியிலேயே நின்றார். வந்திருப்பவர்கள் எல்லோரும் மாந்திரீகனைச் சந்தித்து விடை பெற நேரம் அதிகமாகும் என்று தோன்றியது. உடனே வீட்டிற்குத் திரும்புவதுதான் நல்லது. மத்தியானத்திற்குப் பிறகு வரலாம். அமைதியான சூழ்நிலையில் பேசவும் செய்யலாம்.

வந்த வழியே திரும்பி நடக்க முற்பட்ட போதுதான் புத்தூர் வீட்டுக் காரியஸ்தனான சங்குசார் அவரைப் பார்த்தார்.

"அட, யார்... கேசவன் நாயரா? நல்ல வேலை செய்றீங்க! இவ்வளவு தூரம் வந்துட்டு அம்மச்சியைக்கூடப் பார்க்காம திரும்பிப் போறதா? வாங்க... வாங்க! அம்மச்சி வடக்குப் புறத்தில இருக்குறாங்க" சங்குசார் பணிவுடன் அவரை அழைத்துக் கொண்டு வடக்குப் புறமாக நடந்தார்.

வெளிப்புறத் திண்ணையில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி வந்தவரை ஊன்றிப் பார்த்தார்.

"கேசவன் நாயர்தானே?"

"ஆமாங்க...!"

"உட்காருங்க."

திண்ணையில் கிடந்த மனைப்பலகையில் அவர் உட்கார்ந்தார். வெற்றிலைப் பெட்டியை அவர் பக்கமாகத் தள்ளி வைத்துவிட்டு, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி சொன்னார்: "ஊறவைச்ச பாக்குதான் இருக்கு. வெற்றிலையும் கொஞ்சம் பழுத்தது. புகையிலை வடக்குப் பகுதியிலிருந்து வந்திருக்கிறது. இதெல்லாம் உங்களுக்குப் பிடிக்குமான்னு தெரியாது."

"இனிமேல் எல்லாம் பிடிச்சுத்தானே ஆகணும்" ஒரு வெற்றிலையை எடுத்து நரம்பைக் கிள்ளியபடி கேசவன் நாயர் புன்சிரிப்புடன் பதிலளித்தார்.

"அதெல்லாம் கூடாது... மனசுக்குப் பிடிக்காத எதையும் விரும்பக் கூடாது கேசவன் நாயரே... அது ஆத்ம வஞ்சனை!" முகத்திலடித்ததுபோல் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கூறினார்.

கேசவன் நாயரின் முகம் வெளுத்தது. உட்பொருள் இல்லாமல் வெறுமொரு வேடிக்கை என்ற முறையில் தான் கூறிய வார்த்தைக்கு, அம்மணி தவறாகப் பொருள் கொண்டிருக்கிறார் என்று அவருக்குப் பட்டது. மாந்திரீகனான மகன் திருமணம் செய்வதில் அம்மாவுக்கு உடன்பாடில்லை என்பதை சங்குசார் ஏற்கெனவே கோடிகாட்டியிருந்ததை நினைவுகூர்ந்தார். மிகுந்த கவனத்துடன் இவருடன் பேசவேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டார்.

"ரெண்டு பேரோட ஜாதகங்களுக்கும் நல்ல பொருத்தம் அம்மச்சி" கேசவன் நாயர் நேரடியாக விஷயத்திற்கு வந்தார்.

"கேசவன் நாயருக்கு ஜோஸ்யமும் தெரியுமோ?"

"ஓரளவுக்கு... போதாக்குறைக்கு கிழக்கேடத்து வாரியாராசான்கிட்டவும் காட்டினேன். திருவாதிரைக்காரனும், பூரட்டாதிக்காரியும் தம்மில் கணப் பொருத்தம் மட்டுமில்ல, மற்ற பொருத்தங்களும் நல்லா இருக்கு. இரண்டு ஜாதகங்களிலும் பாபக் கிரகங்கள் கிடையாது" சட்டைப் பையிலிருந்து ஒரு காகிதத்துண்டை எடுத்து விரித்துப் பார்த்தபடி அவர் மேலும் தொடர்ந்தார்: "குமாரன் தம்பியின் நட்சத்திரம் திருவாதிரையாளாலும் ஏகாதசி தினத்திலல்லவா பிறந்திருக்கார்? ஏகாதசி ஜாதகம் முதல் தரமானது!"



"முதல்தரம் என்றால்?" கேசவன் நாயரது ஜோதிடப் புலமையைச் சோதித்துப் பார்க்கும் மட்டில் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கேட்டார்.

எனவே தன்னுடைய ஜோதிடப் புலமையை வெளிப்படுத்துவதென்று கேசவன் நாயரும் தீர்மானித்தார். ஒரு தேர்ந்த ஜோதிடரைப்போல் ஒரு சுலோகம் சொன்னார்:

"தேவபிராமணப் பக்தி நிறைந்தவன்

குணசாலி, சதாசாரம் பேணுபவன்

வளமான செல்வம் உடையவன், வித்வான்

குணபதி எல்லாம் ஒத்துவரும் ஏகாதசிப் பிறப்பானால்"

"உங்களுக்கு ஜோஸியத்துல நல்ல ஞானம் இருக்கு. பானுமதியோட ஜாதக பலத்தையும் சொல்லுங்க..."

"அதுதான் சுவாரஸ்யமே! துவாதசி தினம்தான் அவ பிறந்தது. ரொம்பவும் விசேஷமான நாள். பலனைக் கேளுங்க:

நிர்மலன் பூஜ்யன் விஷ்ணுபக்தன் பிரபு

லோக வந்தியவான், நற்கர்மங்கள் புரிபவன்,

தானம் செய்வபன், ஆளும் வல்லமை மிக்கவன்.

இத்தனையும் பிறப்பு துவாதசியானால் உண்டு."

குலுங்கிச் சிரித்தபடி அவர் தொடர்ந்தார்: "ஆண் ஜாதக பலன்தான்னாலும், பெண் ஜாதகத்திற்கும் இதுதான் பலன்."

கேசவன் நாயரை ஊன்றிப் பார்த்தபிறகு குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கேட்டார்: "நீங்க சொன்னதெல்லாம் ஜன்மதின விசேஷங்கள். ஜன்ம நட்சத்திரங்களின் பலனையும் சொல்லுங்க கேட்போம்."

கேசவன் நாயர் துணுக்குற்றார். முற்றிலும் எதிர்பாராத கேள்வியை அம்மச்சி கேட்டிருக்கிறார். நட்சத்திர பலன்கள் கூறும் சுலோகங்கள் தனக்குத் தெரியாது. ஆனால், தெரியாதென்று சொல்வது தன்மானக் குறைவுபோல் அவருக்குத் தோன்றியது.

"சரியாக ஞாபகமில்லை அம்மச்சி!" என்று நழுவும் விதத்தில் பதிலளித்தார்.

"அப்படின்னா கேட்டுக்கங்க் கேசவன் நாயரே... திருவாதிரை நட்சத்திரத்தின் பலன்களை" முற்றத்தில் எச்சிலை நீட்டித் துப்பிவிட்டு, வாயைக் கொப்பளித்த பிறகு ராகத்தில் பாடத் தொடங்கினார்:

"தீய செயல் புரிவதில் சிரேஷ்டன், பயனற்றவன், கோபக்காரன்,

பாவத்தை விரும்புபவன், மற்றவர்களுக்குத் தொல்லை தருவதில் நாட்டமுள்ளவன், கொடியவன்,

தீய கர்மங்களில் ஈடுபாடுமிக்கவன், சபலமுள்ளவன், தரித்திரவான்,

ஹிம்சன் ஆதிரையை நட்சத்திரமாகக் கொண்டவன்."

கேசவன் நாயரின் தலைமீது இடி விழுந்தது போலிருந்தது. ஆனால், குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியோ எந்த விதமான உணர்ச்சி மாற்றத்தையும் வெளிக்காட்டாமல் பூரட்டாதி நட்சத்திரத்தின் பலன்களையும் பாட்டாகப் பாடினார்:

"துயரசாலி, செலவாளி, பெண்பித்தன், வாயாடி,

தர்மம் செய்பவன், பக்தியில்லாதவன்,

நினைத்ததை எப்பாடு பட்டும் சாதிப்பவன்,

பூரட்டாதிக்காரன் இப்படித்தான்!"



வாயடைத்துப் போய் உட்கார்ந்துவிட்ட கேசவன் நாயரை வெற்றிப் பெருமிதத்துடன் பார்த்த அந்த மூதாட்டி சொன்னார்: "பலன் ஆணுக்குச் சொல்லப்பட்டிருந்தாலும் பெண்ணுக்கும் பலன் இதுதான்."

"நட்சத்திர பலன் எல்லாரையும் ஒரே மாதிரி பாதிக்கும்னு சொல்ல முடியாது"-கேசவன் நாயர் நழுவப் பார்த்தார்.

"அப்படின்னு நானும் சொல்லலையே கேசவன் நாயரே... நட்சத்திர பலன் எப்படி இருந்தாலும் தெய்வாதீனமுள்ளவங்களுக்கு நன்மை உண்டாகும்."

"ஆமாம்... அதுதான் உண்மை"-கேசவன் நாயரது முகம் தெளிவடைந்தது.

"சரி, இனி சாப்பிட்ட பிறகு மிச்சத்தைப் பேசலாம்"-குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி விருந்தாளியை உபசரிப்பதில் ஆர்வம் காட்டினார்.

"குமாரன்தம்பியின் கர்மங்கள் எப்போ முடியும்?"-சாப்பிட்ட பிறகு கேசவன் நாயர் கேட்டார்.

"மத்தியானமாயிடும். எல்லா வெள்ளிக் கிழமையும் இதுதான் நிலைமை"-குஞ்ஞுக்குட்டிதங்கச்சி பதிலளித்தார்.

பூஜையறை வாசலில் பூஜை மற்றும் கர்மங்கள் சுறுசுறுப்பாக நடைபெற்றுக் கொண்டிருந்தன. மணியோசை, மந்திரத் தொனிகளுக்குத் தாளம் போட்டன. கேசவன் நாயர் காதுகளைக் கூர்மையாக்கிக் கவனித்துக் கொண்டிருந்தார்.

'எப்போது பார்த்தாலும் மந்திரவாதம் செய்து கொண்டிருக்கும் ஒருவனது மனைவி என்கிற பதவி தன்னுடைய ஒரே மகளுக்கு என்னவிதமான தாம்பத்திய சுகத்தை வழங்க முடியும்?' என்ற சிந்தனை அவர் மனத்தை நோக வைத்தது. இப்போது அதைப் பற்றி யோசித்து என்ன பயன்? பானுமதியைத் திருமணம் செய்து கொடுப்பதாக வாக்களித்து விட்டோம்! விதிப்படிதான் எதுவும் நடக்கும். விதியுடன் சமரசமாவதுதானே புத்திசாலித்தனம்!

மத்தியாளம் வரை சங்குசாருடன் புத்தூர். வீட்டின் சுற்றுப்புறத்தில் சுற்றியலைந்த கேசவன் நாயர், தறவாட்டுக் கொட்டாரத்தையும் பார்த்தார். அவர் திரும்பி வந்த பிறகும்கூட குமாரன்தம்பியின் மாந்திரீகக் கர்மங்கள் முடிவடையவில்லை.

"தம்பியை நான் அப்புறமா பார்த்துக்கிறேன். உண்மையைச் சொன்னா நான் அம்மச்சியைப் பார்க்கத்தான் வந்தேன். கல்யாண காரியத்தைப் பத்தி நாம இதுவரையில எதையும் பேசவே இல்லை"- கேசவன் நாயர், குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியை நெருங்கி, பணிவான குரலில் கூறினார்.

"கல்யாண காரியத்தைத்தான் நீங்களும் குமாரனும் சேர்ந்து தீர்மானிச்சுட்டீங்களே? அதுக்குப் பிறகு நான் என்னத்தை சொல்ல?"

"இருந்தாலும் அது முறையாகுமா? அம்மச்சியின் அனுக்கிரகமில்லாம கல்யாணம் நடக்குமா?"

"கல்யாணம் செய்யப் போறவன் என் மகனாகிப் போய்ட்டானே. அவன் செய்றது பாவம்னு தெரிஞ்சே நான் அவனை ஆசிர்வதிப்பேன். அவன் கூட்டிட்டு வர்ற பெண்ணை, என் சொந்த மகளைப் போலப் பார்த்துப்பேன்"-அவரது விழிகள் நீரால் நிறைந்தன.

"எல்லாம் விதி அம்மச்சி! என் ஒரேமகளை ஒரு மாந்திரீகனுக்குக் கல்யாணம் செஞ்சு கொடுக்க வேண்டியிருக்கும்னு நான் கனவிலகூட நினைச்சதில்லை" கேசவன் நாயரது கண்களும் நீரால் நிறைந்தன.

"எனக்கு ஒரே ஒரு விஷயத்திலதான் வருத்தம். தறவாட்டு ஆசாரப்படி இந்த வீட்டு மந்திரவாதிங்கிறவன் பிரம்மச்சாரியா இருக்க வேண்டியவன். அதுக்குச் சாத்தியமில்லாதபோது மாந்திரீகப் பதவியை விட்டுடணும். ஆனா, குமாரன் அதுக்கு ஒப்புக்கலை.' அதனால மாந்திரீகப் பதவியை, இந்தக் குடும்பத்தின் மற்றொருவருக்குக் கொடுத்துடுன்னு. கேசவன் நாயரே, நீங்க அவன்கிட்டச் சொல்லணும்" கண்களில் கண்ணீர் வழிய அவர் வேண்டினார்.

கேசவன் நாயர் அதற்குப் பதில் சொல்லவில்லை. மாந்திரீகப் பதவி மட்டும்தான் குமாரன்தம்பிக்கு உள்ள ஒரே யோக்கியதை.



அதைக் கைவிடுமாறு, தான் உபதேசிப்பதா? அது ஒருபோதும் நடக்காது!

"இந்த மாசத்திலேயே வர்ற ஒரு முகூர்த்தத்தில கல்யாணத்தை வெச்சுக்கலாமில்லையா?" அவர் பேச்சை மாற்றினார்.

"அதையெல்லாம் நீங்களும், குமாரனும் சேர்ந்து தீர்மானிச்சா போதும். ஆனா, எந்தவிதமான ஆர்ப்பாட்டமுமில்லாம இந்தக் கல்யாணத்தை நடத்தணும்கிறது மட்டும்தான் என்னோட ஒரே நிபந்தனை."

"என் அபிப்பிராயமும் அதுதான் அம்மச்சி. என்னோட சொந்தக்காரங்களுக்கும் இந்தக் கல்யாணத்துல அவ்வளவா ஈடுபாடு கிடையாது. இந்தச் சூழ்நிலையில எளிமையா கல்யாணத்தை நடத்துறதுதானே உசிதம்?"

கேசவன் நாயர் புறப்படத் தொடங்கியபோது குமாரன்தம்பியின் மாந்திரீகக் கர்மங்கள் முடிவடைந்திருந்தன. அவன் கிழக்குப்புற முற்றத்திற்கு வந்தான்.

"நான் கிளம்பலாம்னு நெனைச்சேன்..." கேசவன் நாயர் பேச்சைத் தொடங்கினார்.

"அம்மாகிட்ட பேசிட்டீங்களா இல்லையா?" குமாரன்தம்பி தாழ்ந்த குரலில் கேட்டான்.

"பேசிட்டேன். அம்மச்சிக்கு இந்த விஷயத்தில எந்தவிதமான அபிப்பிராய வித்தியாசமும் கிடையாது. கல்யாணத்தை இந்த மாசத்திலேயே நடத்தலாமில்லையா?"

"நடத்திடலாமே" குமாரன்தம்பி சந்தோஷக் குரலில் பதிலளித்தான்.

குமாரன்தம்பியும், காரியஸ்தரும் தென்புறப் படிப்புரை வரை கேசவன் நாயரைப் பின்தொடர்ந்தனர்.

"நான் ஒரு ரகசியத்தைச் சொல்லணும்" கேசவன் நாயர் திரும்பி நின்று குமாரன்தம்பியிடம் சொன்னார். இதைக் கேட்டதும் சங்குசார் அங்கிருந்து நழுவினார்.

குமாரன்தம்பியுடன் நெருங்கி நின்று கேசவன் நாயர் மந்திரித்தார்: "குடும்பஸ்தனாகப் போறீங்க. பழைய மாதிரி பரோபகாரமா இனிமேலும் இருக்கக் கூடாது. மந்திரவாத வேலைகளுக்குத் தகுந்தபடி பணம் வாங்கணும்."

"ஐயோ, அது கூடாது! இந்தத் தறவாட்டு மாந்திரீகன் தட்சிணைகூட வாங்கக்கூடாதுங்கிறது நியதி."

"இந்தத் தறவாட்டு மாந்திரீகன் கல்யாணம் பண்ணிக்கலாமா என்ன?"

பதில் சொல்ல முடியாத கேள்வியைச் செவிமடுத்த குமாரன்தம்பி திடுக்கிட்டான். மௌனமாகத் தலை தாழ்த்தி நிற்கும் தம்பியின் தோளில் தன் வலது கரத்தை வைத்த கேசவன் நாயர் அன்புடன் உபதேசிக்கத் தொடங்கினார்: "இதெல்லாம் நாமே ஏற்படுத்திக்கிட்ட நடைமுறைகள். பிரம்மச்சாரியான மந்திரவாதிக்குப் பணம்ங்கிறது ஒரு பொருட்டே இல்லை. ஆனா, குடும்பஸ்தனான மாந்திரீகனுக்குப் பணம்தான் முக்கியம். கௌரவமா வாழ்றதுக்கு கண்டிப்பா பணம் தேவை. இங்க வர்றவங்ககிட்டேருந்து ஒரு சின்னத் தொகையைத் தட்சிணையாக வாங்கினாலே போதும், நல்ல வருமானமாக இருக்கும். செய்த வேலைக்குக் கூலி வாங்குறதை அதர்மம்னு சொல்ல முடியாது."

கேசவன் நாயர் விடை பெற்றார். சிந்தனைகளில் மூழ்கிவிட்ட குமாரன்தம்பிக்கு, தான் இதுவரை இழந்து போனதைக் குறித்துத் திடுமென்று ஞானோதயம் ஏற்பட்டது. 'இத்தனை நாள்களாகத் தட்சிணை வாங்காமல் இருந்ததன் மூலம் எவ்வளவு பெரிய தொகையை இழந்து விட்டிருக்கிறோம்? பானுமதியின் அப்பா சொல்வது சரிதானே... அதில் என்ன தவறு? செய்த வேலைக்குக் கூலி வாங்குவது அதர்மமாகுமா? இது என்ன கடவுளுக்கே பொறுக்காத அநீதியா என்ன?

எல்லாம் வல்ல கடவுளே கூலி வாங்கவில்லையா? கடவுள் சன்னிதியிலும் காணிக்கைப் பெட்டி இல்லையா? ஆடம்பரமாக வாழவேண்டுமானால் பணம் ஏராளமாகத் தேவைப்படும்தான்.



நான் இனிமேல் பழைய ஆளல்ல. மீதமுள்ள நாள்களை பழையபடியே பாழாக்க நான் தயாராக இல்லை.

தனக்குப் பதவி மட்டும் போதாது; பணமும் வேண்டும். தான் சரியாக முயற்சி செய்தால் குறைந்த காலத்திற்குள்ளேயே நாராளமாகச் சம்பாதிக்க முடியும். இந்த ஊரிலேயே மிகப் பெரிய பணக்காரனாகிவிட என்னால் சுலபமாக முடியும்!'

கைகளிலிரண்டிலும் தங்கக் காப்புகள் அணிந்து, கால்களில் தங்கக் கொலுசுகள் போட்டு கழுத்தில் எத்தனையோ பவுன்கள் எடையுள்ள தங்க மாலைகளையும், பூத்தாலியையும் அணிந்து வெட்கத்துடன் நிற்கும் பானுமதியை மனதிற்குள் கற்பனை செய்து பார்த்த குமாரன்தம்பிக்கு கட்டுப்படுத்த முடியாத மகிழ்ச்சி தோன்றியது.

"பானு... உன்னை நான் தங்கத்தாலேயே மூடுவேனடி!" அவனுடைய உதடுகள் அவனையும் மீறி உச்சரித்தன.

## 38

"க்ஷுத்ர (மோசமான) மந்திரப் பிரயோகங்களையெல்லாம் மூட்டை கட்டி வைச்சுட்டு, இனிமேலாவது ஈஸ்வர பூஜையைத் தொடங்கக் கூடாதா? இதோட பலன்களை அனுபவிக்க வேண்டியவங்க நானும் என் குழந்தைங்களும்தான். இப்பவே வீடு துடைச்சு வைச்ச மாதிரி இருக்கு. காலாகாலத்தில வயல் வேலைகளைக் கவனிக்கவோ, வேலை வாங்கவோ உங்களுக்கு நேரமே இல்லை. இவ்வளவு நாளா இந்த துர்மந்திரவாதத்தைச் செஞ்சு செஞ்சு அப்படி என்னத்தை சேத்து வெச்சிருக்கீங்க? ஒரு வேலை செய்யுங்க... முதல்ல என்னையும் குழந்தைகளையும் கொன்னுடுங்க. அப்புறம் ராத்தியும் பகலும் சர்ப்பக்காவில உட்கார்ந்து மனுஷங்களுக்குத் தொல்லை கொடுங்க. உங்களுக்கு

துணையா வடயக்ஷிணி கூடவே இருக்கே" ராமன் பட்டத்திரியின் மனைவி பொரிந்து தள்ளிக் கொண்டிருந்தாள்.

"உன்னோட உபதேசமெல்லாம் எனக்குத் தேவை இல்லை. என் உபாசனா மூர்த்திகளை நான் கைவிட மாட்டேன். தூரக்காட்டு இல்லத்தோட மந்திரஸித்தியைப் பத்தி உனக்கு என்ன தெரியும்? முட்டாள்!" பட்டத்திரியும் கோபத்தில் கத்தினார்.

அன்று அமாவாசையும் வெள்ளிக்கிழமையும் இணைந்த நாள். பூஜைக்கான பொருள்களுடன் மாலை நேரத்தில் சர்ப்பக்காவை நோக்கிப் புறப்பட்ட கணவனை வழிமறித்த உமாதேவி அந்தர்ஜனம் (அந்தர் ஜனம் என்பவர்கள் 'வீட்டில் இருப்பவர்கள்' அதாவது வீட்டிற்கு வெளியே வராதவர்கள்) தன் மனத்திலிருந்த மொத்த உணர்வுகளையும் கொட்டிக் கவிழ்த்தாள்.

அந்தர்ஜனத்தின் கண்ணீரைக் கண்டு கலங்கக் கூடியதா ராமன் பட்டத்திரியின் கடினமான இதயம்? தீயகர்மங்கள் புரிபவரும், கொடூரமானவருமான அவருக்கு வாழ்க்கையில் ஒரே ஒரு லட்சியம்தான் இருந்தது. அதாவது துர்த்தேவதைகளை விரல் நுனியில் வைத்துக் கொண்டு, மோசமான மந்திரவாதக் கர்மங்களைச் செய்வது!

தன் கணவர் செய்யும் மோசமான மந்திர கர்மங்களைக் கண்டு வருடக் கணக்காக மனம் நொந்து கொண்டிருப்பவள் இந்த அந்தர்ஜனம். தாங்கவே முடியாது என்கிற நிலை ஏற்படும்போது கணவனிடம் இவ்வாறு சண்டை போடுவாள். இதனால் எந்தவிதமான பலனும் கிடையாதென்று அவளுக்கும் தெரியும். இருப்பினும் தனது முயற்சியை அவள் கைவிட்டதே இல்லை.

கணவனின் தீயநடவடிக்கைகளுக்கு மௌனசாட்சியாக இருக்கவேண்டியிருந்த சம்பவங்களை மனக்குமுறலோடு அவள் நினைவுகூர்வாள். வடயக்ஷிணியுடன் உறவு கொள்வதுடன், வசியப் பிரயோகத்தின் மூலமாக எத்தனையெத்தனை அப்பாவிப் பெண்களை இல்லத்திற்கு வரவழைத்து காமக் கேளிக்கைகளில் ஈடுபட்டிருக்கிறார்? அக்னி சாட்சியாக மணமுடித்த



அந்தர்ஜனத்தின் கண்ணுக்கு முன்னாலேயே மற்ற பெண்களுடன் உறவு கொள்ளக் கிஞ்சித்தும் தயங்காத பெண்பித்தன் அவர். இல்லத்தின் பொருளாதார நெருக்கடிகளுக்கு நடுவிலும் இன்னொரு மனைவியையும், ஏராளமான வைப்பாட்டிகளையும் காப்பாற்றி வரும் மோசமான தன் கணவனின் நடவடிக்கைகள் சகிக்கக் கூடியதல்ல. மூன்று குழந்தைகளை நினைக்கும்போது தற்கொலை செய்து கொள்ளவும் அவளுக்கு மனம் வரவில்லை.

அழுது கலங்கிய கண்களுடன் தனக்கு முன்பாக நின்று கொண்டிருந்த மனைவியை ஒதுக்கித் தள்ளிவிட்டு ராமன் பட்டத்திரி சர்ப்பக்காவை நோக்கி நடந்தார். அவருடைய முகத்தில் கோபம் பொங்கி வழிந்தது.

மந்திர மண்டபத்தில் நுழைந்த பட்டத்திரி ஹோம குண்டத்தைத் தயார் செய்தார். பூஜை மற்றும் ஹோமத்திரவியங்களை அதனதன் இடத்தில் வைத்தார். விளக்குகளை ஏற்றினார்; பந்தங்களைக் கொளுத்தினார்.

தன்னுடைய எதிரியான குமாரனை அழிப்பதற்காகத் தொடங்கிய பூஜை இதுவரை பல்வேறு காரணங்களால் தடைபட்டுக் கொண்டே வந்துள்ளது. ஆனால், இந்த முறை அவ்வாறு தடைபடாமலிருக்க, எல்லாவிதமான முன்னேற்பாடுகளும் செய்யப்பட்டிருந்தன.

வடயக்ஷிணியும் தூமாவதியும், தான் கூப்பிட்டவுடன் வந்து விடுவார்கள். இருப்பினும் அவர்களையும் நல்லபடியாக மகிழ்ச்சிப்படுத்த வேண்டியுள்ளது. மிகவும் கடுமையான செயல்களை அல்லவா அவர்கள் மூலமாக நடத்த வேண்டியிருக்கிறது.

தூமாவதியை மகிழ்ச்சியடையச் செய்து குமாரனது சித்தியின் வீட்டிற்கு அனுப்ப வேண்டும். வடயக்ஷிணியை வசப்படுத்தி புத்தூர் வீட்டிற்கும் அனுப்ப வேண்டும். குமாரனையும், அவனது உறவினர்களையும் அழிப்பதுதான் தனது லட்சியம்!

பட்டத்திரி தனது உடைகள் மற்றும் கௌபீனத்தை அவிழ்த்துத் தூரத்தில் எறிந்தார். நிர்வாண உடலுடன் மந்திரஜபம்

செய்தால் தூமாவதி அதிக மகிழ்ச்சியடைந்து ஓடி வருவாள் என்று நினைத்தார். ஆடவர்களின் நிர்வாணம் வடயக்ஷிணிக்குப் பிடித்தமான விஷயமும்கூட.

எனவே கண்களை மூடி தூமாவதியைத் தியானிக்கத் தொடங்கினார்.

*அத்யுச்சாமலினாம் பராகில*
*ஜனோத்வேகாவஹாதுர்ம்மனா*
*ரூக்ஷாக்ஷி த்ரிதயா விசாலவதனா*
*ஸூர்யோதரீ சஞ்சலா*
*ப்ரஸ்வேதாம்பு சிதாக்ஷுதாகுலதனு:*
*க்ருஷ்ணாதிருக்ஷப் பிரபா*
*ஜேயாமுக்தகுசா சதாப்ரிய கலிர்-*
*தூமாவதி மந்த்ரிணா*

(உயரமான உடல், கசங்கிய உடைகள், எவருக்கும் வெறுப்பேற்படுத்தும் நடவடிக்கைகள், கடின இதயம், பயங்கரமான விழிகள், பெரிய முகம், சஞ்சல மனம், வியர்வை வழியும் உடல், சதா பசியுடன் உள்ள நிலை, கறுத்த நிறம், அவிழ்ந்து அலைந்து புரளும் தலைமுடி ஆகியவற்றுடன் காட்சியளிக்கும் தூமாவதியைத் தியானிக்கிறேன்.)

தியானத்திற்குப் பிறகு எள்ளால் ஹோமத்தைத் தொடங்கினார். பத்தாயிரம் தடவை ஹோமித்தார். ஹோமத்தின்போது *'தும் தும் தூமாவதி ஸ்வாஹா'* என்கிற மந்திரத்தை உருவிட்டுக் கொண்டே இருந்தார்.

தொடர்ந்து கறுப்புக் கடுகையும் உப்பையும் கலந்து ஹோமத்தைத் தொடர்ந்தார். *'தும் தும் தூமாவதி ஸ்வாஹா'* என்ற மந்திரத்தையே அப்போதும் உருவிட்டுக் கொண்டிருந்தார்.

ஹோமம் முடிவடைந்ததும் மேற்புறமிருந்து ஒரு பெரிய நெருப்புக் கோளம் மந்திர மண்டபத்திற்குள் விழுந்தது. பட்டத்திரியின் முகம் தெளிவடைந்தது. *'தும் தும் தூமாவதி ஸ்வாஹா'* -அவர் முன்னைவிட ஆவேசத்துடன் மந்திர ஜபத்தைத் தொடர்ந்தார்.



நெருப்புக் கோளம் உடைநது சிதறியது. அந்தரத்தில் தீப்பொறிகள் தெறித்துப் பரவின. சட்டென்று புகைப்படலம் ஒன்று தென்பட்டது. புகைப்படலத்திற்குள் தூமாவதியின் உருவம் தெளிவடைந்து வந்தது. படிப்படியாகப் புகை விலகத் தொடங்கியது.

கலைந்து புரளும் தலைமுடியுடன் ஹோமகுண்டத்திற்கு முன்பாக நின்று அலறல் தொனியில் குரல் எழுப்பிக் கொண்டிருந்தது, உக்கிரப் பிசாசினியான தூமாவதி.

தூமாவதியை வணங்கிய பட்டத்திரி, தன்னுடைய நெற்றியைக் கருங்கல் தரையில் ஓங்கி மோதினார். நெற்றியிலிருந்து ரத்தம் பீய்ச்சி அடித்தது. வலதுகைச் சுண்டு விரலால் ரத்தத்தை வழித்தெடுத்து ஹோம குண்டத்தில் சொட்டவிட்டு, பக்தியுடன் ஜபித்தார். *'தும் தும் தூமாவதி ஸ்வாஹா!'*.

துர்த்தேவதை துள்ளிக் குதித்தது. தன்னுடைய ஆராதனா மூர்த்தி மகிழ்ச்சியடைந்திருக்கிறது என்று புரிந்து கொண்ட மந்திரவாதி தாழ்மையான குரலில் வேண்டிக்கொண்டார்: "குமாரனின் மருமகனைத் தொலைத்துக் கட்ட வேண்டும். அதற்காக நீங்கள் கொச்சுபுத்தூர் வீட்டிற்கு எழுந்தருள வேண்டும்!"

"ரக்ஷஸை அனுப்புகிறோம்!"- தூமாவதி

"அது போதாது... தேவியே அங்கு எழுந்தருள வேண்டும்."

"சரி, உன் விருப்பப்படியே செய்கிறேன்" பயங்கரமான ஓர் அலறலுடன் தூமாவதி மறைந்தது.

பட்டத்திரிக்கு உற்சாகம் கரை புரண்டோடியது. வடயக்ஷிணி பூஜையின் முன்னோட்டமாக தியான சுலோகம் சொன்னார்:

*அருண சந்தன வஸ்த்ரவிபூஷிதாம்*
*ஸஜல தோயதுல்யன நூரும்ச*
*ஸ்மரக ரங்க த்ருசம் வடயக்ஷிணீம்*
*க்ரமுக நாகலதா தளயுக்கராம்*

தொடர்ந்து சிவப்பு அலரிப் பூக்களால் இரண்டாயிரம் முறை ஹோமித்தார். ஹோமிக்கும் வேளையில்,

*ஏஹ்யேஹி யக்ஷி யக்ஷி*
*மஹாயக்ஷி வடவ்ருக்ஷனிவாசினி!*
*ஸீஹ்ரம் மே ஸர்வ ஸௌக்யம்*
*குரு குரு ஸ்வாஹா*

என்கிற மந்திரத்தை உருவிட்டுக் கொண்டிருந்தார்.

ஹோமம் முடிவடைந்தபோது நெய்த்திரி ஏற்றி வைத்து ஜபத்தைத் தொடர்ந்தார்: *"ஏஹ்யேஹி யக்ஷி யக்ஷி மஹாயக்ஷி வடவ்ருக்ஷனிவாஸினி! ஸீஹ்ரம் மே ஸர்வ ஸௌக்யம் குருகுரு ஸ்வாஹா!"*

அதோ கால் சிலம்பொலி கேட்கிறது! பட்டத்திரியின் முகம் தெளிவடைந்தது. எழுந்து நின்று கைகளைக் கூப்பினார். புன்னகை சிந்தியபடி முன்பாக நின்று கொண்டிருந்தது பேரழகு வடிவமான வடயக்ஷிணி. திருநெற்றியில் ரத்தச் சந்தனக் கீற்றணிந்து, பேடைமான் விழிகளில் காம மையெழுதி, பவழ அதரங்களில் புன்னகைப் பூவை மலரவைத்து, கணுக்கால் வரை நீண்டு கிடக்கும் கார்கூந்தலுடன், மார்பிலிருந்த தங்கக் கலசங்களை தாளத்திற்கேற்ப அசைத்துக் கொண்டு கவர்ச்சிகரமான தோற்றத்தில் தரிசனம் அளித்துக் கொண்டிருந்தது, இஷ்ட தேவதையான யக்ஷித்தாய்!

மாந்திரீகனின் நெற்றியில் முத்தாகத் திரண்டு நின்றிருந்த ரத்தத் துளியைத் தன் நாக்கை நீட்டி உறிஞ்சிய வடயக்ஷிணி மந்திரித்தது:

"சுரதம்!"

"உங்கள் ஆசீர்வாதப்படியே!"-காமவேட்கை நிரம்பிய பட்டத்திரி வடயக்ஷிணியுடன் இணைந்தார்.

ராஸலீலை முடிந்தவுடன் பட்டத்திரி தளர்ச்சியடைந்தார். படுத்த நிலையில் தளர்ச்சியின் ஆற்றாமையுடன் அவர் வேண்டிக் கொண்டார்: "மாந்திரீகனான குமாரனைத் தொலைத்துக் கட்ட வேண்டும்."

"உடனடியாக நடக்கிற காரியமல்ல அது!"-வடயக்ஷிணி பதிலளித்தது.




"என்ன! தேவி நினைத்தால்கூட அவனை அழிக்க முடியாதா? அவனுடைய பிரம்மச்சாரியம்தான் அழிந்து விட்டதே! கிருஷ்ணப்பருந்து அவனிடமிருந்து விலகப்போகும் நேரம் இது. ஹனுமானுக்கும் அவனிடம் அதிருப்தி ஏற்பட்டிருக்கிற வேளையும்கூட."

"உண்மைதான். ஆனால், ஏற்கெனவே அங்கு ஒரு யக்ஷி வசித்துக் கொண்டிருக்கிறாள். யக்ஷி குடியிருக்கும் இடத்தில் நான் நுழைய மாட்டேன்!"

பட்டத்திரிக்குக் கோபம் ஏற்பட்டது. "வாழ்க்கையைப் பணயம் வைத்து உங்களுடன் உறவு கொண்டதற்கு நீங்கள் எனக்குத் தரும் பிரதிபலன் இதுதானா?"

"கோபப்படாதே... தகுந்த நேரம் வரும்போது நான் கண்டிப்பாக உதவுகிறேன்" வடயக்ஷிணி மறைந்தது.

எழுந்திருக்க முடியாமல் அந்த நிலையிலேயே அவர் படுத்துக் கிடந்தார். அசாதாரண மனோபலமுள்ள மாந்திரீகனாக இருந்ததால்தான் இதுவரை எத்தனையோ முறை வடயக்ஷிணியுடன் கூடிய பிறகும் தன்னால் உயிருடன் இருக்க முடிகிறது என்பதை நினைவுகூர்ந்தார். மனோதிடமும், உடல் வலுவும் இல்லாதிருந்தால் யக்ஷியுடன் கூடும் முதல் முறையிலேயே அவர் பிணமாகி விட்டிருப்பார். இதெல்லாம் எப்படி இருந்தாலும் யக்ஷியுடன் கூடும்போது கிடைக்கும் சொர்க்கசுகமே அலாதியானதுதான். பட்டத்திரி பெருமூச்செறிந்தார்.

குமாரனை அழிப்பதற்காக, தான் நடத்திய கடைசி முயற்சி இது. இந்த முயற்சியும் தோல்வியடைந்தால்...? அத்துடன் குமாரனின் எதிர்த்தாக்குதலுக்கு ஆளாகவும் நேர்ந்தால் என்னாவது...?

கூடாது! அதற்கு மேல் அவரால் யோசிக்கவே முடியவில்லை. உண்மையிலேயே இது ஒரு வாழ்வா சாவா போராட்டம்தான். இரண்டில் ஒன்றைப் பார்த்து விடுவது என்ற வெறி.

தன்னுடைய சதிச்செயல்கள் குறித்து குமாரனுக்கு ஏதாவது தெரிந்திருக்குமா? அதாவது முன்னொரு தடவை ரக்ஷஸை

ஏவிவிட்டதை அவன் அறிந்து கொண்டது போல் இவற்றையும் தெரிந்து கொண்டிருப்பானோ?

இருக்காது. அப்படி நடக்க வாய்ப்பே கிடையாது! இன்று காலையில் சோழியைப் பரப்பி பிரஸ்னம் பார்த்தபோது குமாரனுக்கு இறையருள் வலுக்குன்றிக் கொண்டிருப்பதாகத் தெரிந்தது. பிரம்மச்சரியத்தை இழந்தபோதே அவன் கிருஷ்ணப்பருந்தின் அதிருப்திக்கு ஆளாகி விட்டான். ஏறத்தாழ ஞானதிருஷ்டியையும் இழந்து விட்ட மாதிரிதான்.

ஜோதிடம் தவறாவதில்லை. பிரஸ்னம் வைப்பதிலும் இதுவரையில் தனக்கு தவறு நேர்ந்ததில்லை. பயப்பட வேண்டிய அவசியமேயில்லை. "குமாரன் மண்ணைக் கவ்வப்போவது உறுதி. அவன் புதுமாப்பிள்ளையாகப் போவதே அவனுடைய ஆபத்திற்கு ஆரம்பமாகத்தான்!" பட்டத்திரி அட்டகாசமாக வாய்விட்டுச் சிரித்தார்.

நிலவிளக்குகளில் எண்ணெய் வற்றியது. எண்ணெயில்லாத திரிகள் கண்களைச் சிமிட்டின. தீப்பந்தங்கள் அணைந்தன. ஹோமகுண்டத்தின் புகையும் அடங்கி விட்டிருந்தது.

யக்ஷிக்காவை இருள் விழுங்கியது. கூரிருட்டில் சிக்கிக் கொண்ட பட்டத்திரி வடவால் (வட+ஆல்) மரத்தடியில் மயங்கிக் கிடந்தார்.

## 39

"புத்தூர் வீட்டு மந்திரவாதி புதுமாப்பிள்ளையாகப் போறாராம்!"-ஊரே ஒட்டுமொத்தமாக அதிசயப்பட்டது.

ஆகாயம் இடிந்து விழுந்திருந்தால்கூட இப்படி அதிசயப்பட்டிருக்க மாட்டார்கள். நள்ளிரவில் சூரியன் உதித்தால்கூட இந்த அளவுக்கு வியப்படைந்திருக்க மாட்டார்கள்.



பிரம்மச்சரியம் உட்பட மிகவும் கடினமான விரதங்கள்தான் புத்தூர் வீட்டுப் பரம்பரைக்கே அபூர்வமான மந்திரஸித்திகளை வழங்கிவருகிறது என்பது நாட்டோரின் நம்பிக்கை.

"கலிகால விசேஷம்ங்கிறதைத் தவிர வேறு என்னத்தைச் சொல்ல?"

"உலகமே அழியப் போகுது."

"புத்தூர் தறவாட்டின் அழிவு காலம்நெருங்கிடுச்சு..."

"புத்தூர் வீட்டு மந்திரவாதிக்குப் பைத்தியம்; வெறும் பைத்திமியல்ல காமப்பைத்தியம்!"

"அந்தக் குடும்பத்திலிருக்கிற வேற யாராவது ஒருத்தருக்கு உபதேசம் செஞ்ச பிறகு அவர் கல்யாணம் செஞ்சுக்கட்டுமே."

"தம்பியின் மந்திரஸித்திகள் எல்லாம் இத்தோட தீர்ந்தது. இனிமேல் யாரையாவது விஷம் தீண்டினால் எங்க கொண்டு போறது? ஆவி உபாதை ஏற்பட்டால், அதிலிருந்து மீட்டுத்தர இந்தப் பகுதியில இனி யார் இருக்காங்க?"

ஒவ்வோர் இண்டு இடுக்கிலும் குமாரன்தம்பியின் கல்யாணம் சர்ச்சைக்குரிய விஷயமானது.

ஒரே ஒருவருக்கு மட்டும் இதில் எந்தவிதமான கூச்சமோ, வருத்தமோ ஏற்படவில்லை. மௌனமாக இருந்தார். ஒருவரை மட்டும் இந்த அவமானம் பாதிக்கவில்லை. அந்த நபர் வேறு யாருமில்லை சாட்சாத் குமாரன்தம்பியேதான்!

"ஊரார் என்ன வேண்டுமானாலும் சொல்லட்டும். வீட்டாரும் உறவினரும் எப்படி வேண்டுமானாலும் எதிர்க்கட்டும். என்னை இந்த முயற்சியிலிருந்து தடுக்க யாராலும் முடியாது சங்குசாரே"- குமாரன்தம்பி சங்குசாரிடம் வீம்பாகப் பேசிக் கொண்டிருந்தான்.

"உங்களோட மந்திரஸித்திகள் எதுவும் குறையவோ, அழியவோ போறதில்லை. பொறாமைக்காரங்க பேசிட்டுப் போகட்டும்" காரியஸ்தரும் அவனை ஆதரித்துப் பேசினார்.

புத்தூர் தறவாட்டின் மற்ற கிளை உறவினர்கள் மொத்தப் பேரும் தங்கள் தங்களது கருத்து வேறுபாடுகளையெல்லாம் மறந்து களீக்கல் வீட்டு சேகரன்தம்பியின் பின்னால் அணி திரண்டனர். களீக்கல் வீட்டுச் சவுக்கையில் நாள் தவறாமல் இதைக் குறித்து விவாதங்கள் நடைபெற்றன. தறவாட்டு மாந்திரீகனுடைய திருமணம் எப்படியும் நடக்கக்கூடாது. மீறி நடப்பதாக இருந்தால், கொட்டாரம் மற்றும் அனுபோகப் பொருள்களை அவனிடமிருந்து கைப்பற்ற வேண்டும். இதுதான் அந்த விவாதங்களின் முடிவில் ஏற்பட்ட தீர்மானமாக இருந்தது.

யார்யார் எப்படியெல்லாம் ஆலோசனைகள் நடத்தினாலும், என்னவெல்லாம் தீர்மானித்தாலும் அவை எதுவும் தன்னை எந்த விதத்திலும் கட்டுப்படுத்தாது என்கிற உறுதியில் இருந்தான் குமாரன்தம்பி. மாந்திரீகப்பதவியை கைவிடாத வரையில் வேறொருவர் மாந்திரீகராகும் பிரச்சினையே எழமுடியாது. அதேபோல் தனது கட்டுப்பாட்டிலுள்ள கொட்டாரம் மற்றும் பொருள்களை தனது மரணம் வரையில் வேறு யாரும் சொந்தமாக்கிக் கொள்ள முடியாது. இது தொடர்பான பழைய நிகழ்ச்சியை சேகரன் மறந்திருக்க மாட்டான். அதையும் மீறி அவற்றைக் கைப்பற்ற அவனோ, அவனது கூட்டமோ முயற்சி செய்தால், அதை முறியடிக்கும் வல்லமை தனக்கு உண்டு. மற்றவர்கள் நினைப்பது போல் தன்னுடைய ஸித்திகள் எதுவும் வலுவற்றுப் போய் விடவில்லை. இப்போது தான் அழைத்தாலும் கிருஷ்ணப்பருந்து காட்சியளிக்கவே செய்கிறது.

தைரியத்தை குமாரன்தம்பி இழந்து விடவில்லை. பயத்தின் சன்னமான கீற்றுக்கூட அவன் மனத்தைத் தொடவில்லை. எப்படிப்பட்ட எதிர்ப்பையும் சமாளிப்பதற்குள்ள தைரியத்தை அவன் பெற்றிருந்தான்.

அன்று மதியத்திற்குப் பிறகு களீக்கல் வீட்டுச் சவுக்கையில் சேகரன் தலைமையின் கீழ் அந்தப் பாரம்பரியத்தைச் சேர்ந்தவர்கள் ஒன்று சேர்ந்தனர்.



மாலை நேரம் வரையில் அந்த விவாதம் தொடர்ந்த போதிலும் அவர்கள் எந்தவிதமான தீர்மானத்திற்கும் வர முடியவில்லை.

"நாம இப்படிச் சத்தம் போட்டுச் சர்ச்சை செஞ்சு என்ன பிரயோஜனம்? நம்மால ஒரு தீர்மானத்திற்கு வர முடியலையே?" சேகரன்தம்பி ஏமாற்றத்தை வெளிப்படுத்தினான்.

குமாரன்தம்பியின் முறையற்ற போக்கைக் கண்டிப்பது, விமரிசிப்பது என்பதைத் தவிர குடும்பத்தின் பரம்பரைச் சொத்தான மாந்திரீகப் பதவியைக் காப்பாற்ற என்ன வழி என்பதை யாராலும் சொல்ல முடியவில்லை. கொட்டாரம் மற்றும் சொத்துக்களைக் கைப்பற்ற வேண்டும் என்பதை வீறாப்புடன் வாதிட்டார்களே தவிர, அதற்கான வழிமுறைகள் எதையும் அவர்களால் கண்டறிய முடியவில்லை.

குமாரன்தம்பியுடன் இதைப் பற்றி நேரடியாகப் பேசி ஒரு முடிவுக்கு வரமுடியாது. அது பிரயோஜனப்படாது. அது அவர்களுக்கும் தெரியும். என்னதான் நடந்தாலும் மந்திரவாதிப் பதவியை விட்டுத் தரப்போவதில்லை என்பது குமாரன்தம்பியின் உறுதியான நிலை. பலப்பரீட்சை நடத்தி மாந்திரீகப் பதவியைக் கைப்பற்றுவதும் சாத்தியமில்லை. எனவே மாந்திரீகனிடமிருந்து கொட்டாரத்தையும் சொத்துக்களையும் கைப்பற்ற என்ன வழி என்று தீவிரமாக யோசித்தனர்.

"குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியைச் சந்தித்து இதைப் பற்றி விவாதித்தால் என்ன?" என்று ஒருவர் கேட்டார். அதை சேகரன் தம்பி ஒதுக்கித் தள்ளினான்.

"தாய் சொன்னால் கேட்கக்கூடியவனல்ல அவன்" தனக்கு நேர்ந்த முன் அனுபவத்தை வைத்து சேகரன்தம்பி உறுதியான குரலில் கூறினான்.

"எல்லோரும் ஒன்று சேர்ந்து பலாத்காரமாகப் பொருள்களைக் கைப்பற்றினால் என்ன?" என்றொரு யோசனை கூறப்பட்டபோது, சேகரன்தம்பி வாய்விட்டுச் சிரித்தான். முன்னொரு தடவை இதற்காக முயன்றபோது குடும்ப உறுப்பினர்கள் யாரும் தனக்கு

உதவவில்லை. அதனால் அவமானபபட்டது தானும் தன்னுடைய மூன்று மைத்துனர்களும்தான். அவன் வருத்தத்துடன் அந்தக் காட்சியை நினைவு கூர்ந்தான்.

அந்தச் சம்பவத்தை நினைக்கும்போது இதயம் நடுங்கியது. கருடபக்தனுக்கு உதவுவதற்காக கருட பகவான் முன்வரவில்லையா? குமாரன்தம்பி அழைத்தால் இப்போது கிருஷ்ணப்பருந்து வராது என்ற நினைப்புதான், இவர்களை இப்படிப் பேச வைத்திருக்கும்.

அவர்களது நினைப்பு உண்மையில்லை என்பது ஒரு புறம் இருக்கட்டும். கொட்டாரம் மற்றும் சொத்துக்களைக் கைப்பற்றுவதாகவேகூட இருக்கட்டும். அதனால் தறவாட்டு மாந்திரீகஸித்தியை எப்படிக் காப்பாற்ற முடியும்? தானே முன்வந்து குமாரன்தம்பி வேறொருவருக்கு வழங்கினால்தானே அது சாத்தியமாகும்? கொட்டாரம் மற்றும் சொத்துக்களைவிட குடும்பச் சொத்தான மாந்திரீக ஸித்தியை நிலைநிறுத்துவதுதானே முக்கியம்?

சிந்தனையில் மூழ்கி அமைதியாகிவிட்ட சேகரன்தம்பியின் முகத்தைப் பார்த்தவாறு மற்றவர்களும் மௌனமாக இருந்தனர்.

திடுமென்று பார்வதிதங்கச்சியின் குரல் அங்கு உயர்ந்தது: "நீங்கள் எல்லாருமா போய் மகேஸ்வரி அக்காவைப் பார்த்துப் பேசுங்க."

சுற்றுப்புறத்தின் தன்மை மாறியது. சேகரன்தம்பி சுயஉணர்வு பெற்றான். எல்லோரது கண்களிலும் எதிர்பார்ப்பு நிழலிட்டது. அரங்கம் மீண்டும் உயிர் பெற்றது.

"அம்மா சொன்னதுதான் சரி. மகேஸ்வரிப் பெரியம்மா பிடிவாதம் பிடிச்சா குமாரன்தம்பி பணிஞ்சிடுவான். நாம இப்பவே கொச்சுபுத்தூர் வீட்டிற்குப் போவோம். அம்மாவும் நம்மளோட வரட்டும்" சேகரன்தம்பி உற்சாகமடைந்தான்.

"நான் வரணுமா என்ன?" பார்வதிதங்கச்சி நழுவப் பார்த்தார்.

"அம்மாவும் வந்தே தீரணும்" சேகரன்தம்பி வற்புறுத்தினான். மற்றவர்களது கருத்தும் அதுவேதான்.



"சரி, உங்க விருப்பம் அதுதான்னா, இருட்டுறதற்கு முன்னாலேயே நாம புறப்படலாம்"-பார்வதிதங்கச்சி ஒப்புக் கொண்டார்.

இரவின் முதல் ஜாமம் முடிவடையவில்லை. கொச்சுபுத்தூர் வீட்டின் கிழக்குத் தளத்தில் நிலவிளக்கிற்கு முன்பாக உட்கார்ந்து 'நாராயணியாமிருதம்' வாசித்துக் கொண்டிருந்தார் பக்தையான மகேஸ்வரிதங்கச்சி. புராணப் பாராயணம் செய்து கொண்டிருந்த சிறிய பாட்டியின் இருபுறங்களிலும் இரண்டு பேரக்குழந்தைகளும் அமர்ந்திருந்தனர்.

மஹாவிஷ்ணுவின் அவதாரங்களைக் குறித்த பாடல் வரிகளை அவர் படித்துக் கொண்டிருந்தார். பாடலை வாசித்து முடித்தபின் அந்த வரிகளின் அர்த்தத்தைக் குழந்தைகளிடம் விவரித்தார்:

"சாந்தமான இயல்புடையவர்களுக்கே மஹாவிஷ்ணுவின் அருள் கிட்டும். சகுனியின் மகனான சுரன் சாந்தகுணம் கொண்டவனல்ல. பரமசிவன் அவனுக்கு வரம் தந்தபோது, அவன் துரோகச் சிந்தையுடன் சிவனுக்கு நேராகப் பாய்ந்தான். ஆனால், அந்த முரடன் சிவபெருமானுடைய வாக்குச் சாதுரியத்தாலேயே அழிந்தான். ஸரஸ்வதி நதிக்கரையிலிருந்த முனிவர்கள், பிருகுமுனிவர் மூலம் மும்மூர்த்திகளில் யார் முழுமையான மகத்துவம் வாய்ந்தவர் என்று விசாரிக்கத் தொடங்கினர். விஷ்ணுதான் அப்படிப்பட்டவர் என்பது தெளிவாகியது."

அடுத்த பகுதியை வாசிக்க முற்பட்டபோது கிழக்குப்புற முற்றத்தில் யாரெல்லாமோ வந்திருப்பது தெரிந்தது. புத்தகத்தை மூடிவைத்துவிட்டு முன்புறத்திற்கு வந்தார்.

கதவைத் திறந்த அவர் மகிழ்ச்சியடைந்தார். கருத்து வேறுபாடு கொண்டு விலகியிருந்த உறவினர்களில் பெரும்பாலானோர் வந்திருக்கின்றனர்.

"வாங்க, வாங்க! எல்லாரும் உள்ளே வாங்க" வந்தவர்களை வரவேற்றார்.

கொச்சுபுத்தூர் வீட்டின் கிழக்குப்புற அறையில் வந்தவர்கள் எல்லாரும் அமர்ந்தனர். சின்னச்சின்னக் காரணங்களுக்காக விரோதம் பாராட்டிவந்த உறவினர்கள், நட்பின் ஒளிக் கீற்றுகளுடன் வந்திருப்பதாகவே உறவை நேசிக்கும் மகேஸ்வரித் தங்கச்சிக்கு தோன்றியது.

“நம்ம தறவாட்டில ஏற்பட்டுள்ள சண்டை சச்சரவை நீக்க, நம்மளோட பித்ருக்கள் மனம் கனிஞ்சிருக்கிறதாத் தோணுது பார்வதி. இப்பத்தான் என் நெஞ்சு மகிழ்ச்சியால நிறைஞ்சிருக்கு” மகேஸ்வரி தங்கச்சியின் கண்களிலிருந்து ஆனந்தக் கண்ணீர் வழிந்தது.

“நாம பரஸ்பரம் கோபிச்சிட்டிருக்கிறதாலதானே தறவாட்டின் புண்ணியம் அழிஞ்சிட்டிருக்கு. பழசையெல்லாம் மறந்துட்டு, இனிமேலாவது நாம ஒத்துமையா இருந்தாகணும்.”-பார்வதி தங்கச்சி துயரக்குரலில் தொடர்ந்தார்: “புத்தூர் தறவாட்டின் மாந்திரீகஸித்தியை அழியவிடாமப் பாதுகாக்கிறது நம் எல்லாருடைய தேவையும்கூட. ஒவ்வொரு காலகட்டத்திலும் இருந்த மாந்திரீகனோட பிரம்மச்சரியம்தானே மந்திரஸித்தி அழியாம இருக்கிறதோட ரகசியம். நம்ம குமாரன் பாரம்பரிய வழக்கத்தை மீறி கல்யாணம் பண்ணிக்கப் போறான். தறவாட்டு மாந்திரீகன் கல்யாணம் பண்ணிக்கிட்ட கதையைக் கேள்விப் பட்டிருக்கீங்களா? கல்யாணம் பண்ணிட்டு குடும்பஸ்தனாகறது தான் அவனோட ஆசைன்னா, அவன் இந்தக் குடும்பத்துல இருக்கிற யாராவது ஒரு ஆண்பிள்ளைக்கு மந்திரோபதேசம் பண்ணிட்டு, என்ன வேணும்னாலும் செஞ்சுட்டுப் போகட்டும். அதுக்கு அவன் தயாரா இல்லேன்னு தெரியுது. நம்ம தறவாட்டைக் காப்பாத்தணும்னா, மகேஸ்வரி தங்கச்சி மனசு வெச்சாத்தான் நடக்கும். நீங்க கொஞ்சம் கடுமையா நடந்துக்கிட்டா குமாரன் ஒப்புக்குவான்னு தோணுது. என்னோட மகன் சேகரனை மாந்திரீகனாக்க அவன் விரும்பலேன்னா, அவனோட சொந்த மருமகன் கொச்சுராமனுக்காவது மந்திரோபதேசம் செஞ்சு வெக்கட்டும். புத்தூர் தறவாடு சாம்பலாயிடக் கூடாதுங்கிறதுதான் என்னோட ஆசை!”

வெளிறிய புன்சிரிப்புடன் மகேஸ்வரிதங்கச்சி பேசினார்: “என் வார்த்தைகளை குமாரன் மதிக்கமாட்டான் பார்வதி.



உபதேசங்களால அவனோட மனசை மாத்த முடியாது. நம்ம தறவாட்டின் மாந்திரீகஸித்தி முடிவடையப் போகுது. எல்லாம் விதின்னு ஆறுதலடையறதைத் தவிர வேற வழியில்லை.”

மகேஸ்வரித் தங்கச்சியின் வார்த்தைகளுக்கு உடன்படாத மாதிரி சேகரன்தம்பி கேட்டான்: “புத்திசாலியான நீங்களே இப்படிப் பேசினா எப்படிப் பெரியம்மா? தறவாட்டையே அழிக்கிறதுக்கு திட்டமிட்டே ஒருத்தன் நடந்துக்கும்போது விதின்னு பேசி நாமெல்லாம் சும்மா இருக்கிறதா? அழியணும்னு நினைக்கிறவன் அழிஞ்சுட்டுப் போகட்டும். அவனால மற்ற நிரபராதிகளும் அழியணுமா என்ன?”

“கோபப்படாத சேகரா. தறவாட்டின் வெறும் ஒரு உறுப்பினன் மட்டுமா குமாரன்? இந்தத் தறவாட்டின் மாந்திரீக ஸித்தி இப்ப அவன் கிட்டத்தான் இருக்கு. அவன் மனசு வைச்சா மட்டுமே அது மற்றொருவருக்குக் கிடைக்கும். தான் அழியறதா இருந்தா... தன்னோட இந்தத் தறவாடும் அழியணும்கிறதுதான் அவன் எண்ணம். இந்த நிலையில நாம என்னதான் செய்ய முடியும்? சண்டைபோட்டு மந்திரஸித்தியைத் தட்டிப் பறிச்சுட முடியுமா என்ன? நீங்க எல்லாரும் என்ன நினைக்கிறீங்கன்னா, நான் சொன்னால் அவன் கேட்க மாட்டானான்னுதான். நேத்துவரை நானும் அப்படித்தான் நினைச்சிருந்தேன். ஆனால்...” அந்த வாக்கியத்தை முடிக்காமல் மகேஸ்வரிதங்கச்சி முந்தானையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டார்.

“என்ன நடந்தது அக்கா?” பார்வதித் தங்கச்சி துயரம் தோய்ந்த குரலில் கேட்டார்.

“நேத்து நான் தறவாட்டுக்குப் போய் குமாரன்கிட்டப் பேசினேன். என் கண்ணீரை மட்டுமல்ல, அவனுடைய சொந்தத் தாயார் சிந்தின கண்ணீரைக் கண்ட பிறகும் அவன் மனம் இரங்கலை. அவன் மணிமங்கலத்து கேசவன் நாயரோட மகளைக் கல்யாணம் செய்யப் போறதையும், கல்யாணம் செஞ்சபிறகும் மாந்திரீகப் பதவியை விட்டுவிடப் போறதில்லைன்னும் உறுதியாக சொல்லிட்டான் சொந்தச் சுகம் மட்டும்தான் அவனோட லட்சியம். தறவாடு

அழிஞ்சா அழியட்டுமேன்னு சொல்கிறவன்கிட்ட உபதேசம் செஞ்சு மனசை மாத்திட முடியுமா என்ன?" மகேஸ்வரிதங்கச்சியின் தொண்டை கரகரத்தது. கண்கள் நீரால் நிறைந்தன.

"தறவாட்டுக் காரியம் கிடக்கட்டும். அனுஷ்டானம் தவறுற மாந்திரீகனது கதி அதோகதியாகும்கிறதையே அவன் நினைச்சுப் பார்க்கலையே!" தாங்க முடியாத கோபத்துடன் சேகரன் தம்பி பேசினான்.

துயரம் கலந்த சிரிப்புடன் மகேஸ்வரித் தங்கச்சி சென்னார்: "வினாசகாலே விபரீதபுத்தி. குமாரன் அவனையே மறந்துட்ட மாதிரிதான் நடந்துக்கிறான் சேகரா. என்ன மாதிரியான ஆபத்தெல்லாம் வரப் போகுதோ, கடவுளுக்குத்தான் தெரியும்."

"இருந்தாலும் அந்த மணிமங்கலத்து கேசவன் நாயர் இந்த அளவுக்கு அறிவில்லாதவராகிப் போயிட்டாரே! தன்னோட சொந்த மகளைப் பலியிட ஒரு தந்தை தயாராயிருக்கிறாரே! இதை என்னன்னு சொல்ல?" பார்வதிதங்கச்சி நம்பமாட்டாதவராகப் பேசினார்.

"மகளோட எதிர்காலத்தைவிட அவர் பெரிசா மதிக்கிறது கௌரவத்தைத்தான்னு சொல்லணும். புத்தூர் தறவாட்டுல திருமணத் தொடர்பு ஏற்படுத்திக் கொள்றது அவரோட அந்தஸ்தை உயர்த்தும்னு அவர் நினைக்கலாம். இல்லேன்னா தன் ஒரே மகளை ஒரு மந்திரவாதிக்குக் கல்யாணம் செஞ்சு வைக்க விரும்புவாரா?" மகேஸ்வரிதங்கச்சி கேட்டார்.

வந்தவர்கள் விடைபெற்றுப் பிரிந்தனர். இதயம் விநாடிக்கு விநாடி கனமேறிக் கொண்டிருப்பதாக உணர்ந்த மகேஸ்வரி தங்கச்சி மறுபடியும் புராணப் பாராயணத்தில் கவனத்தைத் திருப்பினார். அப்போது கொச்சுராமனிடமிருந்து களங்கமற்ற ஒரு கேள்வி எழுந்தது. "சின்னப் பாட்டி, குமாரமாமாவோட கல்யாணம் என்னிக்குப் பாட்டி?"

"பாட்டிக்குத் தெரியாதுடா குழந்தை" மகேஸ்வரிதங்கச்சி சுவாரசியமில்லாமல் பதிலளித்தார்.

"குமாரன்மாமா கல்யாணம் பண்ணிட்டா அப்புறம் கொச்சுராமன் மாந்திரீகனாவானா பாட்டி?" ராஜம்மாவுக்குச் சந்தேகம்.



"ரெண்டு பேரும் போய் புஸ்தகத்தை எடுத்துப் படியுங்க" மகேஸ்வரிதங்கச்சி குழந்தைகளை அதட்டினார்.

புராணப் பாராயணத்தில் மூழ்கிய மகேஸ்வரிதங்கச்சி ராஜம்மாவின் சத்தமான சிரிப்பைக் கேட்டுப் பின்புறமாகத் திரும்பிப் பார்த்தார். அவருக்கும் சிரிப்பு வந்தது.

பூஜையறை வாசலில் ஒற்றைக் காலில் நின்று கொண்டிருந்தான் கொச்சுராமன். அவனது உதடுகள் அசைந்து கொண்டிருந்தன. முகத்தில் மிடுக்கான தோரணை. நடுநடுவே *"க்ஷிப ஓம் ஸ்வாஹா"* என்று தெளிவாக உச்சரித்தான். அவனது உடல் மற்றும் உதட்டு அசைவைக் கண்டு ராஜம்மா விழுந்து விழுந்து சிரித்தாள்.

மகேஸ்வரிதங்கச்சியின் முகத்திலிருந்து சிரிப்பு சட்டென்று மறைந்தது. அவர் விசும்பத் தொடங்கினார்.

புத்தகத்தைக் கீழே வைத்துவிட்டுப் பூஜையறையை நோக்கிப் பாய்ந்த அவர் கொச்சுராமனை நெஞ்சோடு சேர்த்து அணைத்தார்.

"என்னோட செல்லமே, குழந்தைப் பருவத்திலேயே உனக்கு மாந்திரீகனாக ஆசை! குலத்துரோகியான உன் தாய்மாமாவோ யாருக்கும் மந்திரோபதேசம் தராம அட்டூழியம் செய்றான். நீ மாந்திரீகனாக மாட்ட செல்லமே. நம்ம தறவாட்டின் ஸித்திகள் எல்லாம் அழிஞ்சுடணும்கிறது தெய்வ சாபமோ என்னவோ?" மகேஸ்வரிதங்கச்சி துயரத்துடன் சொன்னார்.

## 40

மதிய உணவிற்குப் பிறகு தென்புறத் தளத்திலிருந்த சப்ரமஞ்சக் கட்டிலில் அமர்ந்து ஓலைச்சுவடிகளை வாசிக்கத் தொடங்கிய குமாரன்தம்பியின் அருகே சென்ற குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சற்றுக் கோபமாகக் கேட்டார்: "ஓலைச்சுவடிகளை

எல்லாம் படிச்சு முடிச்சபிறகு ஏன் இன்னும் கொட்டாரத்துக்குள்ள திரும்பக் கொண்டு போய் வைக்கலை?"

அம்மாவின் கேள்வி மகனைத் திடுக்கிட வைத்தது. குற்ற உணர்வு மனத்தை உறுத்தியது. அம்மாவிடம் என்ன பதில் சொல்வது என்று யோசித்தான்.

மாந்திரீகப் பயிற்சி முடிந்தவுடன் ஓலைச்சுவடிகளை எடுத்த இடத்திலேயே வைப்பதுதான் இதுவரையிலான வழக்கம். மந்திரோபதேசம் தந்தபோது பப்புமாமா கட்டளை இட்டதும் அப்படித்தான். சமீபத்தில் தன்னிடம் அசரீரியாக எச்சரிக்கை செய்தபோதும் அதைச் சொல்லியிருக்கிறார்.

ஐந்து சுவடிகளில் நான்கை மனப்பாடம் செய்து, அதிலுள்ள மந்திரதந்திரங்களைப் பிரயோகம் செய்து வெற்றிபெற்று விட்டோம். ஐந்தாவது சுவடியை வாசித்ததைத் தவிர, அதிலுள்ள மந்திரங்களை சாதகம் செய்து ஸித்தி பெறவில்லை.

துர்த்தேவதைகளை உபாசிக்கும் மந்திரங்களடங்கிய அந்தச் சுவடியை இப்போதுதான் மனப்பாடம் செய்து கொண்டிருக்கிறோம். கல்யாணத்திற்குப் பிறகு இந்த மந்திரங்களைப் பிரயோகித்து வெற்றிபெற வேண்டும். துர்மந்திரவாதம் என்பதற்காக அவற்றை ஏன் ஒதுக்கித் தள்ளவேண்டும்? எதிரிகளை அழிப்பதற்காகத் துர்மந்திரவாதம் நடத்தலாம் என்று விதியே உள்ளது.

வசியம், கட்டுதல், த்வேஷணம், உச்சாடனம், மாரணம் போன்ற கிரியைகளின் மூலமாக எதிரிகளை அழிப்பதற்கான மந்திரங்களைப் பற்றியும், அவற்றைப் பிரயோகித்து வெற்றி பெறுவதற்கான அனுஷ்டான முறைகள் பற்றியும் விவரமாக விளக்கும் சுவடி அது.

தூரக்காட்டு பட்டத்திரியின் தொல்லைகளுக்கு ஒரு முடிவு கட்டுவதற்காக இந்த மந்திரங்களில் சிலவற்றைப் பயன்படுத்தினால் என்ன என்றுகூடப் பலமுறை யோசித்ததுண்டு. ஆனால், சாந்தி கர்மங்கள் மட்டும் செய்து அவரது துர்த்தேவதைகளை விலக்கி வைக்க முடிந்ததால்தான் துர்மந்திரவாதம் வேண்டாம் என்று



ஒதுக்கி வைத்தோம். இருந்தாலும் தவிர்க்க முடியாத ஒரு கட்டத்தில், வேறு வழியே கிடையாது என்கிற நிலையில் அவற்றைப் பிரயோகிக்க நேர்ந்தால்...? அதுவரை இந்த ஐந்தாவது சுவடி நம் கை வசம் இருக்கட்டும். அதனால் ஓலைச்சுவடிகளில் ஒன்றை எடுத்துக் கொண்டு மீதியுள்ளதை எடுத்த இடத்தில் வைப்பது என்பது அர்த்தமில்லாத செயல்.

ஓலைச்சுவடிகளைத் திரும்பவும் கொண்டு போய் வைக்காததன் உண்மையான காரணம் இதுதானா?

மனம் கண்ணாமூச்சி விளையாடவில்லையா? இதயச் சுவர்களுக்குள் கேட்கும் சத்தம் சுயநலத்தினுடையதல்லவா?

உண்மைதான்! அபூர்வமான இந்த ஓலைச்சுவடிகள் தனக்குச் சொந்தமானவை என்கிற எண்ணம் மனத்தில் வலுவாக இடம்பிடித்துக் கொண்டது. சொந்தப் பொருளை கைவிட மனம் ஒப்புக் கொள்ளவில்லை.

ஓலைச்சுவடிகளைத் திரும்பவும் கொண்டுபோய் வைத்துவிட்டால், அதன் பிறகு ஒருபோதும் மாந்திரீகன் கொட்டாரத்தின் பூஜையறையைத் திறக்கக் கூடாது என்பது நியதி. தன் பிந்தைய வாரிசுக்கு மட்டுமே அந்த உரிமை உள்ளது. அதுவும் தன்னுடைய மரணத்திற்குப் பிறகு.

தன் வாரிசாக வரப்போவது தன்னுடைய ஒரே மருகனான கொச்சுராமன்தான் என்பது விவாதத்திற்கு இடமில்லாத விஷயம். தனது மரணத்தைக் குறித்து யோசிக்குமளவிற்கு நேரம் நெருங்கி விடவில்லை. தான் வயது முதிர்ந்து தள்ளாமையை நெருங்கும்போது கொச்சுராமன் மத்திய வயதை எட்டிப் பிடித்திருப்பான்.

எத்தனையோ வருடங்களுக்குப் பிறகு நடைபெறவிருக்கும் காரியங்களைக் குறித்து நான் எதற்காக இப்போதே யோசிக்க வேண்டும்?

ஓலைச்சுவடிகளை நிதானமாகவே கொண்டுபோய் வைக்கலாம். இன்னும் கொஞ்சநாள் போகட்டும். எதற்காக இதில் அவசரப்பட வேண்டும்?

"நான் கேட்டது உன் காதில விழலையா குமாரா? என்ன... பதிலையே காணோம்?" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சிக்குக் கோபம் வந்தது.

"சுவடிகளை உடனடியாக கொண்டுபோய் வைக்குற நோக்கம் இல்லை" குமாரன்தம்பியின் பதிலில் அலட்சியம் தொனித்தது.

மகனது வார்த்தைகள் மறுப்பை வெளிக்காட்டுகிறது என்பதை உணர்ந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கீழுதட்டைக் கடித்துக் கோபத்தை அடக்க முயன்றார். அவரது கண்கள் நீரால் நிறைந்தன.

"அதிகப்பிரசங்கி!" - அவரது உதடுகள் வேண்டாவெறுப்பாக உச்சரித்தன.

அம்மாவின் முகத்தைக்கூடப் பார்க்காமல், குமாரன்தம்பி சப்ரமஞ்சக் கட்டிலில் உட்கார்ந்து வாசிக்கத் தொடங்கினான்.

அசையும் தன்மையை இழந்து விட்டதுபோல், துயரத்துடன் அதே நிலையில் நின்று போனார் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி. மகனைப் பற்றிய எண்ணங்கள், மிகவும் பலவீனமாகிவிட்ட அவரது மனத்தைக் குத்திக் கிழித்துக் காயப்படுத்திக் கொண்டிருந்தன.

அபத்தமான கணக்கிடல்கள்தான் மகனை அகங்காரமுள்ளவனாக்குகிறது என்று அவருக்குத் தோன்றியது. இந்தத் தறவாட்டின் முந்தைய மாந்திரீகர்கள் எல்லாரைக்காட்டிலும் தானே 'மிகவும் கெட்டிக்கார மந்திரவாதி' என்று அவன் நினைப்பதுபோல் தோன்றுகிறது. கல்யாணம் செய்வது என்று தீர்மானித்த பிறகும் தன்னுடைய மந்திரஸித்திகள் இன்னும் வலுக்குன்றவில்லை என்கிற நினைப்பு அவனது ஆணவத்தை அதிகப்படுத்தியிருக்கும். இதுவரை பின்பற்றப்பட்டு வந்த நியதிகளை மீறி, மாந்திரீகக் கர்மங்கள் செய்வதற்குக் கூலிவாங்க ஆரம்பித்தும்கூட எந்தவிதமான சிக்கலும் ஏற்படாமல் இருப்பது அவனுடைய அதர்மமான காரியங்களுக்கு உற்சாகம் ஊட்டத்தானே செய்கிறது?

ஒருவேளை கருடன் தன்னைக் கைவிட்டாலும் தேவியின் அனுக்கிரகத்துடன் மாந்திரீகக் கர்மங்களை நடத்தி விடலாம் என்பதுதானே அவனுடைய வலுவான நம்பிக்கை?



கருடன்தான் இந்தத் தறவாட்டின் முக்கியமான ஆராதனா மூர்த்தி என்கிற சத்தியத்தைத் தனது மகன் மறந்து விட்டதுபோல் தோன்றுகிறது. கருட சேவையின் துணையுடன் விஷமுறிவுச் சிகிச்சைகளை இதுவரை இருந்த மாந்திரீகர்கள் முக்கியமாகச் செய்து வந்தனர். அத்தியாவசியமான சந்தர்ப்பங்களில் மட்டுமே வேறு சில உபாசனா மூர்த்திகளின் துணையுடன் ஆவி, பிசாகுத் தொல்லைகளை அகற்றினர். ஆனால், எதற்கும் ஊதியம் பெற்றதில்லை. மாந்திரீகக் கர்மங்களுக்குக் கூலி வாங்கக் கூடாது என்பதே மீறக்கூடாத ஓர் ஆசாரம்தான்!

குமாரனது நடவடிக்கைகள் மிகவும் வித்தியாசமாக உள்ளன. துர்த்தேவதைகள் ஏற்படுத்தும் தொல்லைகளை அகற்றுவதில்தான் அதிகமான ஈடுபாடு காட்டுகிறான். போதாக்குறைக்குப் பேரம் பேசி அதற்கான கூலியையும் கணக்காக வாங்கத் தொடங்கியிருக்கிறான்!

ஆவி, பீடைகளை அகற்றித்தரக் கோரியும், அவற்றிலிருந்து தப்பிக்கத் தாயத்து வாங்கவும் வருகிறவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்து வருகிறது. அதிலும் வெகு தொலைவிலிருந்து வருகிறவர்கள் அதிகம். வெள்ளிக்கிழமை போன்ற நாள்களில் மாந்திரீகக் கர்மங்கள் முடிவடைய நள்ளிரவுக்கு மேலாகிறது. மந்திர உச்சாடனம், தந்த்ரப் பிரயோகங்கள், தாயத்து எழுதுதல் என்று ஒவ்வொரு காரணத்தை சொல்லிக் கொண்டு வருபவர்களின் இரைச்சல்தான் சதா இந்த வீட்டில்.

வருபவர்களிடம் மகன் நடந்து கொள்ளும் முறையும் வெகுவாக மாறி விட்டிருக்கிறது. அதிகாரத் தோரணையிலான பேச்சும், எடுத்தெறிந்து பேசுவதும், பொருட்படுத்தாத நடவடிக்கைகளும் மாந்திரீகனுக்குக் கௌவரம் தரும் என்று குமாரன் ஒருவேளை நினைத்திருக்கலாம்!

தினமும் மாலை நேரத்தில் கொட்டாரத்திற்குச் சென்று விளக்கேற்றும் வழக்கத்தையும் மகன் நிறுத்தி விட்டிருக்கிறான். அந்த வேலையை சமீபகாலமாகச் செய்து கொண்டிருப்பவர் காரியஸ்தர்தான்.

ஓய்வில்லாத வேலை என்பது உண்மைதான். என்னதான் தலைபோகிற வேலைகள் இருந்தாலும் கொட்டாரத்திற்குப் போய் சந்தியாவந்தனம் செய்வதென்பது தறவாட்டு மாந்திரீகனின் முக்கியமான தினசரிக் கடமையல்லவா? கருடமூர்த்தியின் இருப்பிடம் கொட்டாரம் என்பது ஐதீகம். பித்ருக்கள் மற்றும் குடும்ப யக்ஷிகளின் தங்குமிடமும் அதுதான். அவர்களை யெல்லாம் மறக்க ஆரம்பித்தால் ஆபத்துக்கிடமாகும் என்பதை மகன் உணரவில்லை!

ஸித்திகள் அதிகமாக அதிகமாக பணிவும் அதிகமாவதுதான் மகாமாந்திரீகர்களது லட்சணம். தன்னுடைய சகோதரனை ஒருபோதும் ஆணவம் பீடித்ததில்லை. எல்லோரிடமும் எவ்வளவு கருணையுடன் நடந்து கொண்டான் பப்பு? அம்மாவைக் கண்கண்ட தெய்வமாகவே மதித்து வணங்கியிருந்தான். போகட்டும்... மூத்த சகோதரியான தன்னிடம் எவ்வளவு மதிப்பும் அன்பும் வைத்திருந்தான்!

கிழக்குப்புற முற்றத்தில் யாரெல்லாமோ வந்திருப்பதாகத் தோன்றவே குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி சிந்தனைகளிடம் விடைபெற்று வீட்டின் கிழக்குப்புற வாசலுக்கு வந்து கதவைத் திறந்தார்.

கயிற்றுக்கட்டில் ஒன்றில் மிகவும் மோசமான நிலைமையிலிருந்த ஓர் இளைஞனைப் படுக்க வைத்து, நாலு பேர் சுமந்துகொண்டு வந்திருந்தனர். அவர்களுக்குப் பின்னால் ஏராளமானவர்கள். யாரும் வாயைத் திறக்கவில்லை. பாம்பு தீண்டிய ஒருவரைக் கொண்டுவந்திருக்கிறார்கள் என்று குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்குப் புரிந்தது.

"எப்போ நடந்தது?" அவர் கேட்டார்.

"ஒரு நாழிகை ஆகிறது அம்மச்சி. காடா மண்டிக் கிடந்த தோட்டத்தைச் சீராக்கப் போனபோது என் மகனை எதுவோ கடிச்சது. அலறலைக் கேட்டு எல்லாரும் ஓடிப் போய்ப் பார்த்தபோது மயக்கம் போட்டுப் படுத்திருந்தான். உடனேயே கட்டில்ல போட்டுட்டு கொண்டு வந்திருக்கிறோம்." கூட்டத்திலிருந்த நடுவயதுப் பெண்மணி தகவல் சொன்னாள்.



சற்றுப் பரபரப்புடன்தான் குமாரன்தம்பி அங்கு வந்தான். குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி ஒரு கணம் அவனை உற்றுப் பார்த்தார்.

அம்மாவின் பார்வையில் ஒளிந்திருந்த கேள்வியை மகன் புரிந்து கொண்டான். பாம்புக் கடிபட்ட யாராவது இந்த வீட்டிற்கு வருவதாக இருந்தால், அந்த விவரத்தை முன்கூட்டியே ஞானதிருஷ்டி மூலமாக அறிந்து கொள்வது இந்தத் தறவாட்டு மாந்திரீகனது ஸித்தி விசேஷம். 'உனக்கு அந்த ஸித்தி போய்விட்டதே?' என்கிற கேள்விதான் அம்மாவின் பார்வையிலிருந்தது.

விஷமுறிவாளர் என்கிற முறையில் அவசியமாகத் தேவைப்படும் இந்தத் திறன் உண்மையிலேயே தன்னைவிட்டுப் போய்விட்டதா?

தன்னுடைய மந்திரஸித்திக்கு ஏற்பட்டுவிட்ட கோட்டத்தின் முதல் அடையாளம் இதுதானோ?

கருடபகவான் தன்னைக் கைவிடுகிறாரா?

குமாரன்தம்பியின் மனம் திக்பிரமையில் ஆழ்ந்தது. அதுவரையில் ஏற்படாத அதைரியம் அவனது மனத்தை அம்மானையாடத் தொடங்கியது. இதயத்துடிப்புகள் கட்டுப் பாட்டை மீறியதாக இருந்தன.

முற்றத்தில் ஒரு கயிற்றுக்கட்டிலில் மரணத்துடன் மல்லிட்டுக் கொண்டு மயக்க நிலையில் படுத்திருக்கும் இளைஞனை குமாரன் தம்பி மறந்தான். எத்தனையோ பேர் துயரத்துடன் தன் முகத்தையே உற்றுப் பார்த்துக் கொண்டிருப்பதை அவன் நினைவுகூரவில்லை. அவன், அவனையே மறந்து விட்டிருந்தான். மனதின் கட்டுப்பாடு கட்டவிழ்ந்து போனால், சுற்றுப்புற நினைவு எங்கிருந்து எழும்? சுயநினைவுதான் ஏது?

"குமாரா!" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் உரத்த குரலிலான அழைப்பு அவனை விழிப்படைய வைத்தது. சட்டென்று அவன் கிழக்குப்புறக் குளத்தை நோக்கி ஓடினான்.

அவன் மூழ்கியெழுந்து வருவதற்குள் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி பூஜையறை வாசலில் விளக்கேற்றி வைத்திருந்தார்.

குமாரன்தம்பி கருட சேவையைத் தொடங்கினான். அவனது உதடுகளிலிருந்து கருட பஞ்சாக்ஷரீ மந்திரம் உதிர்ந்தது.

தன்னுடைய ஜபம் பலனற்றுப் போவதை குமாரன்தம்பியால் உணர முடிந்தது. அவனது மனம் பிரமையிலாழ்ந்தது.

இதயம் வேகவேகமாகத் துடித்தது.

கருட பஞ்சாக்ஷரீ ஜபிக்கத் தொடங்கியதும் கருடனின் சிறகடியோசை காதுகளில் ரீங்கரிப்பது வழக்கம். படிப்படியாகக் கருடனின் திவ்வியமான உருவம் மனக்கண்ணில் தெளிவடையும். விஷக்கடியேற்ற நபரிடமிருந்து விஷம் படிப்படியாக இறங்குவதையும் உணர முடியும்.

இன்றோ ஜபிக்க ஆரம்பித்து வெகுநேரமாகியும் கிருஷ்ணப் பருந்தின் சிறகடியோசை காதுகளில் விழவில்லை. கருட வடிவமும் மனத்தில் தெளிவடையவில்லை.

தன்னுடைய தியானம் தோல்வியடைகிறதா? தியான வேளையில் கருடன் காட்சியளிக்காத பட்சத்தில், பாம்பு விஷத்தை அகற்றும் வல்லமை இந்த விபூதிக்கும், தண்ணீருக்கும் கிடையாது. அப்படி நடப்பதாக இருந்தால் கிழக்குப்புற முற்றத்தில் துவண்டு போய்ப் படுத்திருக்கும் மனித உயிர் இறந்துவிடும்.

பாம்புக் கடிபட்டு அபயம் தேடி இந்த வீட்டிற்கு வந்தவர்களில் இதுவரை ஒருவர்கூட இறந்ததாகச் சரித்திரமில்லை. அப்படிப்பட்ட சபிக்கப்பட்ட ஒரு சம்பவம் நடந்தால் அது இந்தக் குடும்பத்தின் நல்ல பெயரையே அழித்துவிடும். மாந்திரீகனது புகழ், எல்லாவற்றுக்கும் மேலாகப் பாதாளத்தில் அமுந்திவிடும்!

திடுமென்று குமாரன்தம்பிக்கு வேறொரு யுக்தி தோன்றியது. உக்கிரமான ஒரு மந்திரத்தைப் பயன்படுத்தி கிருஷ்ணப் பருந்தை வரவழைத்தால் என்ன? இதற்கு முன்பு பல சந்தர்ப்பங்களில் அந்த மந்திரத்தைப் பயன்படுத்தி கருடனை வரவழைத்ததுண்டு. கருடன் பாய்ந்து வருவதுடன் விஷமும் இறங்கிவிடும்.



சிறகடித்துப் பறந்து வரும் கிருஷ்ணப்பருந்தைப் பார்த்தால் அம்மாவின் மனக்கவலையும் மறைந்துவிடும். மகனது மந்திர ஸித்திகள் அழிந்து போகவில்லை என்று அம்மா புரிந்து கொள்ளவும் செய்வார்.

கண்களை இறுக மூடி அவன் மந்திரம் ஜபித்தான்;

*தப்த ஸ்வர்ண நிபம்*
*ஃபணீந்த்ர நிகரை:*
*க்ளப்தாங்க பூஷம் ப்ரபும்*
*ஸ்மத்ருணாம் சமயந்த-*
*முக்ரம கிலம்*
*ந்ருத்தாம் விஷம் தல்க்ஷணால்*
*சஞ்ச்வ்க்ர ப்ரசலத் பூஜம்கமபயம்*
*பாண்யோர் வரம் பிப்ரதம்*
*பக்ஷோ சாரித*
*சாம கீதமமலம்*
*ஸ்ரீ பக்ஷிராஜம் பஜே*
*க்ஷிப ஓம் ஸ்வாஹா -*
*க்ஷிப ஓம் ஸ்வாஹா*

மறுபடி மறுபடி மந்திரித்தும் அதனால் எந்தவிதமான பயனும் ஏற்படவில்லை!

கிருஷ்ணப்பருந்து காட்சியளிப்பதற்கான அடையாளமே இல்லை; சிறகடியோசைகூடக் கேட்கவில்லை.

"என்னைக் கைவிட்டுட்டீங்களா, கருடமூர்த்தி?" இதயம் நொறுங்கிய நிலையில் புலம்பினான். மறுபடி மறுபடி மந்திரம் ஜபித்தும் எந்தவிதமான பிரதிபலனும் ஏற்படவில்லை.

'கடித்த பாம்பையே ஆகர்ஷணப் பிரயோகத்தின் மூலம் வரவழைத்தால் என்ன?' அவன் யோசித்தான். கடித்த பாம்பையே வரவழைத்து அதைக் கொண்டே விஷத்தைத் திரும்ப எடுக்கச் செய்யும் வித்தையும் தனக்குத் தெரியுமே! அப்படிச் செய்வது துர்மந்திரவாத வகையைச் சேர்ந்தது. இந்தத் தறவாட்டு மாந்திரீகர்

அதைச் செய்யவே கூடாது. ஆனால், கௌரவத்தைக் காப்பாற்ற வேறு வழி?

கருடசேவை தோல்வியடைந்த நிலையில் இதைப் பிரயோகிக்காமல் வேறுவழி கிடையாது. எதிர்த்தாக்குதல் ஏற்பட வாய்ப்புள்ள ஒரு பிரயோகத்தைத்தான் செய்யப்போகிறோம்.

தன்னுடைய கௌரவத்தை நிலைநாட்டுவது அத்தியாவசியம். முற்றத்தில் படுத்திருக்கும் மனிதன் இறந்துபோனால்; அது தன் மாந்திரீகப் பதவியையே களங்கப்படுத்திவிடும்.

அதற்குமேல் குமாரன்தம்பி அதிகமாக யோசிக்கவில்லை. கருடத் தியானத்தை அத்துடன் முடித்துக் கொண்டான். பிறகு தென்புறமாகத் திரும்பி நின்று ஆகர்ஷண மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான்.

*"ட்வம் விக்ஷிபவ ஸ்வாஹா"* எண்ணூறு தலைகள் உள்ள வாசுகியைத் தியானித்தபடி மந்திரத்தை மீண்டும் மீண்டும் ஜபித்தான்.

தொடர்ந்து *"ஓம் க்ரோம் ஃபட் ஸ்வாஹா"* என்கிற மந்திரத்தையும் ஆயிரத்து ஒருமுறை ஜபித்தான்.

ஜபத்தை முடித்துக்கொண்டு அவன் கிழக்குப்புற முற்றத்திற்கு வந்து கண்களை மூடியபடி நின்றான்.

"ஐயோ பாம்பு!" - முற்றத்திலிருந்தவர்கள் அலறிக் குரல் எழுப்பினர்.

"யாரும் பயப்பட வேணாம். இவரைக் கடித்த கருநாகம்தான் வருது. எல்லோரும் விலகி நில்லுங்க!" கண்களை மூடிய நிலையிலேயே குமாரன்தம்பி கூறினான்.

தென்புறப் படிப்புரையில் ஏறிப் பாய்ந்து வந்த பாம்பு கயிற்றுக் கட்டிலின் மீது ஊர்ந்து ஏறியது.

தளர்ந்துபோய்ப் படுத்திருந்த இளைஞனின் இடதுகால் பாதத்திலிருந்த கடிவாயில் பாம்பின் வாய் பொருந்தியது.

ஒருசில நிமிடங்களுக்குள் பாம்பு கட்டிலிலிருந்து கீழ்ப்புறமாக இறங்கியது. பிறகு மெதுவாக ஊர்ந்து நடைக்கல்லை நெருங்கியது.



அதன்பிறகு நடந்த சம்பவம் எல்லோரையும் நடுங்க வைத்தது. படத்தை விரித்தபடி எழுந்து நின்ற பாம்பு தன் தலையை அந்தக் கல்லின் மீது ஓங்கி ஓங்கி அடித்தது. கடைசியாகக் கல்லில் அடிப்பட்டு நசுங்கிய தலையை அந்தக் கல்லின் மீதே போட்டுவிட்டு அது இறந்து விழுந்தது.

திண்ணையில் பயந்து நடுங்கியபடி நின்றிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி உரத்த குரலில் வாய்விட்டு அழுதார்: "குமாரா, இப்படிச் செய்திருக்க வேணாமே! இந்தத் தறவாட்டை மிச்சமிதமில்லாம தகர்த்தெறிஞ்ச பிறகுதான் நீ அடங்குவியா?" நெஞ்சில் அடித்தபடி அவர் மகனிடம் கேட்டார்.

வாய் திறந்து பேச முடியாமல் தலைகுனிந்து மௌனமாக நின்று கொண்டிருந்தான் குமாரன்தம்பி. அவனது உடல் வியர்வையால் நனைந்திருந்தது.

கட்டிலில் படுத்திருந்த இளைஞன் தூக்கத்திலிருந்து விழிப்பது போல் எழுந்தான்.

எல்லோரும் விடைபெற்றுப் புறப்படும்போது குமாரன்தம்பியின் குரல் எழுந்தது: "பணம் தராமப் போகப் போறீங்களா?"

எல்லோரையும் திடுக்கிட வைத்த கேள்வியாக இருந்தது அது. புத்தூர் மாந்திரீகர் பணம் கேட்பார் என்பதே அவர்களுக்கு அதுவரையில் தெரியாது.

"மன்னிக்கணும் மாந்திரீகரே, நீங்க பணம் வாங்குவீங்கன்னே எங்களுக்குத் தெரியாது. அதனால நாங்க யாரும் பணம் எடுத்து வரலை" கூட்டத்திலிருந்த நடுவயதுப் பெண்மணி தொடர்ந்தாள். "என் மகனோட உயிரை மீட்டுத் தந்ததற்கு உங்களுக்கு எதைக் கொடுத்தாலும் ஈடாகாது. தற்சமயம் இதை வைச்சுக்கங்க" - கழுத்தில் கிடந்த தங்கச் சங்கிலியைக் கழற்றி அவள் குமாரன்தம்பியிடம் நீட்டினாள்.

எந்தவிதமான தயக்கமும் இல்லாமல் அவன் அதை வாங்கிக் கொண்டான். அத்துடன் வீட்டிற்குள் நுழைய முற்பட்டபோது

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி உரத்த குரலில் அவனை நோக்கி அலறினார்: "அதை முதல்ல திருப்பிக் குடுடா!"

அம்மாவின் வார்த்தைகளைக் கேட்டதாகக்கூடக் காட்டிக் கொள்ளாமல் அவன் வீட்டிற்குள் நுழைந்தான்.

தலை சுற்றுவதுபோல் தோன்றிய குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி விழுந்துவிடாமல் இருப்பதற்காகத் திண்ணையிலிருந்த மரத்தூணைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்!

## 41

"நீங்க உடனேபோய், மகேஸ்வரியையும் குழந்தைகளையும் இங்க வரச் சொல்லுங்க!"-குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி காரியஸ்தரிடம் கட்டளையிட்டார். அவரும் உடனடியாகக் கொச்சுபுத்தூர் வீட்டை நோக்கிக் கிளம்பினார்.

சமையலறையின் வடக்குப்புறத் திண்ணையில் படுத்தபடி கண்ணீர் உகுத்துக் கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் மனம் தகித்துக் கொண்டிருந்தது.

நினைவு தெரிந்த நாளிலிருந்து துயரத்தைத் தவிர, சுகம் என்பது எப்படிப்பட்டது என்றுகூட அனுபவித்தறிய முடியாத துர்ப்பாக்கியசாலிதான் தான் என்று தன்மீதே கோபம் ஏற்பட்டது.

நம்பூதிரி அப்பாவாக இருந்ததால் அப்பாவிடமிருந்து அன்பை எதிர்பார்க்க முடியவில்லை. இளம்பருவத்தில் அம்மாவையும் இழந்தாகி விட்டதால், ஒழுங்கு மற்றும் கட்டுப்பாடு நிறைந்த தறவாட்டுக்காரணவரின் கடுமையான நிபந்தனைகளுக்கு உட்பட்டுத்தான் தானும் சகோதரனும் தங்கையும் வளர முடிந்தது. சுதந்திரத்தின் சுவை அறியாமல், தறவாடு என்கிற சிறைக்குள், கட்டுப்பாட்டை மதித்துத் தானும் தனது தங்கையும் கைதிகளைப் போல் வளர்ந்தோம்.



சாத்துமாமா எங்கள்மீது அன்பு வைத்திருந்தாது உண்மைதான். ஆனால், பிரம்மச்சாரியாகவும், மாந்திரீகனுமாயிருந்த அவருடைய வாழ்க்கை முறை ஒரு தவமுனிவருடையது மாதிரி இருந்தது. தன் வாரிசாக வேண்டிய பப்புவின் அறிவை விசாலப்படுத்துவதிலும், தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியத்தை நிலை நிறுத்துவதிலும்தான் அவர் அதிகக் கவனம் செலுத்தினார்.

தனக்குப் பதினைந்து வயதான போதிலிருந்து வரன்கள் வரத் தொடங்கின. ஆனால், ஜாதகத்தில் செவ்வாய் தோஷம் இருந்ததால் தாலிபாக்கியம் தள்ளிக் கொண்டே வந்தது.

தங்கைக்கு வழிவிட்டு, தான் ஒதுங்கி நிற்க நேர்ந்தது. சுத்த ஜாதகக்காரியான மகேஸ்வரியின் கழுத்தில் விழுந்த தாலிக்கயிறை அறுத்தெறிய கொடூரமான விதி தயாரானது.

ஆரோக்கியமான, இளம்பெண்களான இரண்டு சகோதரிகள் இந்த நாலுகெட்டின் (வீட்டின்) மரச்சுவர்களுக்கிடையில் இளமையின் உணர்வுகளை நெரித்துக் கொன்றபடி ஆயிரக்கணக்கான இரவுகளைக் கழித்த கதை, பொறுமையின் கீதை. மனக்கட்டுப்பாட்டின் வலுவை விளக்கும் கதை!

வாழ்வின் மீதிருந்த ஆசைகளைவிட தாங்கள் அதிகமாகப் போற்றியது தறவாட்டின் கௌரவத்தைத்தான். மறுபடியும் திருமணம் புரியத் தயாராக இல்லாத மகேஸ்வரி அபயம் தேடியது கடவுள் பக்தியில். தானோ, மாமா மற்றும் சகோதரி-சகோதரனை கவனித்துக் கொள்வதில் மன ஆறுதல் பெற்றோம்.

ஏமாற்றத்தை விரட்டுவதற்காகப் புராணப் பாராயணங்களை வலுவாகப் பற்றிக் கொண்டோம். துயரங்களை மறக்க தெய்வ நாமங்களை உருவிட்டுக் கொண்டிருந்தோம். தன்மீதே தனக்குத் தோன்றிய குற்ற உணர்வு, மனத்தின் கதவைத் தட்டும்போது கதவைத் திறக்காமல் குடும்பப் பெருமையைக் காப்பாற்றிப் பெருமிதம் அடைந்தோம்.

விதியின் கடுமையான ஒரு பரிசோதனையாக இருந்தது தனது நாற்பதாவது வயதில் நிகழ்ந்த திருமண உறவு.

உண்மையில் அதுவும் ஒரு கட்டுத்தான்! பெண் எனும் தாசி, ஆடவன் என்கிற எஜமானது போகப் பொருள் மட்டும்தான் என்று நம்பி நாகராஜன் போற்றியுடன் இரவுகளில் நிவேதனம் செய்தோம். மனத்தைப் பிரிந்த பெண்ணுடலால் அவர் திருப்தியடைந்தார். ஒன்றாகப் படுத்து உறங்கி இரண்டுவருட காலம் உடம்பை தாம்பத்திய உறவுக்குச் சுவையில்லை என்பதைத் தனக்குக் கற்பிக்கவே, மிகக்குறுகிய ஆயுள் கொண்டிருந்தாலும் விரக்தியில் ஊறிய தனது திருமண வாழ்க்கையால் முடிந்தது. இரண்டு குழந்தைகளின் தாயாக முடிந்திருக்கிறது என்பதுதான் கூட்டிக் கழித்துப் பார்த்தால் கடைசியாகக் கிடைத்த விடை.

தனது மகனையும், மகளையும் வளர்ப்பதில் தங்கை முழுமனத்துடன் ஒத்துழைத்திருக்கிறாள். குழந்தைகள் உண்மையில் துன்பம் என்பது என்னவென்றே அறியாமல் வளர்ந்தார்கள்.

திருமணமான மகள் இரண்டு குழந்தைகளைப் பெற்றெடுத்த பிறகு போய்ச் சேர்ந்தாள். உண்மையில் அந்த விநாடியிலேயே தனது இதயத்தின் பெரும்பகுதி வாதத்தால் பீடிக்கப்பட்டு விட்டது. அப்போதும் தனக்கு உதவ ஓடிவந்தது மஹேஸ்வவரிதான் பேரக்குழந்தைகள் இருவரையும் வளர்க்கும் பொறுப்பை அவள் ஏற்றுக் கொண்டாள். குழந்தை பெறாத மகேஸ்வரியின். முலைக்காம்புகளில் துளிர்த்த வியர்வையைச் சுவைத்துத்தான் ராஜம்மாவும், கொச்சுராமனும் வளர்ந்தனர். அவர்களது அம்மாவும், அப்பாவும், பாட்டியும் எல்லாமே அந்தச் சின்னப் பாட்டிதான்!

துயரத்திலிருக்கும் ஒரு தாய்க்கு ஆறுதல் அளிக்க வேண்டியது மகன்தான். அந்தக் காரியத்திலும் தான் ஒரு தேர்ந்த துர்ப்பாக்கியவதிதான்.

சிறுவயதிலேயே குமாரனது நடத்தை மோசமாகயிருந்தது. மருமகனைக் கடுமையான நிபந்தனைகளின் கீழ்க் கொண்டுவர மாமா எவ்வளவோ முயன்றார். மாமாவுக்கு, மருமகன் மிகவும் பயந்தான் என்றாலும் சந்தர்ப்பம் கிடைத்தபோதெல்லாம் அவன் நழுவி ஓடியது மோசமான நடவடிக்கைகளிடம்தான். மருமகனது பலவீனங்களைத் தெரிந்துகொண்டும் மனிதநேசியான மாமா,



சொந்த மனச்சாட்சியை வஞ்சித்து மருமகனையே மாந்திரீகனாக்கினார். பரம்பரையாகத் தொடர்ந்து வரும் குடும்பப் புண்ணியம்-அபூர்வசக்தி குமாரனை நேர்வழியில் திருப்பி விடுமென்று வெள்ளை மனங்கொண்ட காரணவர் எண்ணியிருக்கக் கூடும்.

மாந்திரீகனானதைத் தொடர்ந்து குமாரனிடம் ஏற்பட்ட வியப்புக்குரிய மாற்றங்கள், வெப்பத்தில் பழுத்துச் சிவந்திருக்கும் தன் மனப்பரப்பினில் பனித்துளிகளையல்லவா விழ வைத்தன. குமாரனின் மோசமான நடவடிக்கைகள் பிடிக்காமல் கோபம் கொண்டு, கொச்சு புத்தூர் வீட்டுக்குக் குடிபோன மகேஸ்வரிகூட இந்தக் காரியத்தில் மன நிம்மதியடைந்தாள்.

திடுமென்று குமாரனிடம் ஏற்பட்டுவிட்ட மாற்றமும், மாந்திரீகத் தொழிலில் ஈட்டிய நல்ல பெயரும் தறவாட்டின் ஏனைய உறுப்பினர்களையும்அல்லவா அண்ணாந்து பார்க்க வைத்தன! ஊரார் ஒட்டுமொத்தமாகவல்லவா அவனைப் போற்றிக் கொண்டாடினர்!

தன்னுடைய ஒரே மகன் சாத்வீகனான மாந்திரீகனாகி விட்டபோது அம்மாவான தான் பெருமிதத்தின் பொற்கோயிலில் பிரதிஷ்டையான விக்கிரகமாக உயர்ந்து விட்டதாகவல்லவா கனவு கண்டோம்?

எல்லாமே தற்காலிகமான அனுபவங்களாக இருந்தன. 'புது மனைவி முழு வீட்டையும் ஆரம்பத்தில் பெருக்கி வாருவாள்' என்கிற பழமொழி எவ்வளவு பொருள் பொதிந்தது! 'ஆரம்பத்தில் சூரத்தனம் காட்டுபவன் கடைசியில் காலிடறி விழுவான்' என்பதும் எவ்வளவு சரியான வார்த்தை!

ஊண் உறக்கத்தைத் துறந்து மந்திரப் பயிற்சிகளையும் உபாசனைகளையும் மேற்கொண்டவன் -பெண்களைக் கண்ணால் கண்டாலே தீட்டு என்று கருதும் பிரம்மச்சாரி, பெற்ற தாயை எஸ்வரியாகக் கருத வேண்டுமென்று வீம்பு பேசிய தாய்பக்தன்- இப்போது எந்த இடத்தில் நின்று கொண்டிருக்கிறான்?

பிரம்மச்சரியம்தான் மாந்திரீக ஸித்திகளின் ஆணிவேர் என்பதை முற்றிலுமாக மறந்துவிட்டு இதோ கல்யாணம் செய்து கொள்ளப் போகிறான்! மீனாக்ஷியுடனான பழைய தொடர்பு புத்துயிர் பெற்றிருப்பதாகவும் ஊர்ஜனங்கள் பேசிக் கொள்கிறார்கள். கஞ்சா புகைக்கவும் ஆரம்பித்திருக்கிறானாம். மாந்திரீகக் கர்மங்கள் செய்வதற்குப் பிரதிபலன் வாங்கவும் தொடங்கியிருக்கிறான். அவ்வளவு ஏன்? வருபவர்களிடம் கணக்குச் சொல்லிக் கா வாங்குமளவிற்கு அக்கிரமக்காரனாகி விட்டிருக்கிறானே!

“சரி, அதையெல்லாங்கூடப் பொறுத்துக் கொள்ளலாம். பாம்புக்கடிபட்ட ஒருவர் இந்த வீட்டை நோக்கி வருவதா இருந்தால், அந்த விவரத்தை இந்தத் தறவாட்டு மாந்திரீக முன்கூட்டியே தெரிந்து கொள்வது, இதுவரை நடந்துவந் நிதரிசனம். சாத்து மாமாவிற்கும், பப்புவிற்கும்கூட அந்த வல்லமை இருந்தது. அவர்களைப் போல ஏன் அவர்களைவிட அதிகமா இவனும் அந்த ஸித்தியைப் பெற்றிருந்தான். அப்படிப்பட்ட தன் மகனது ஞானதிருஷ்டியும் நஷ்டமடைந்திருக்கிறது!

அது மட்டுமா? அவன் கூப்பிட்டவுடன் கூப்பிட்ட இடத்திற்கு பாய்ந்துவரும் கண்கண்ட தெய்வம்-கிருஷ்ணப்பருந்து இப்போது அவனை முற்றிலுமாகப் புறக்கணித்திருக்கிறது.

கருடசேவையால் விலகாத விஷக்கடியும் உண்டா அவனுடைய கருடசேவையால், கருடபகவானை வரவழைக்க முடியாமலாகிவிட்டது என்பதை இன்றைய சம்பவம் நிரூபிக்கவில்லையா?

அதன் பிறகு அவன் செய்த கர்மம் எப்படிப்பட்டது? கடித்த பாம்பையே வரவழைத்து, அதைக் கொண்டே விஷத்தை திரும்ப எடுக்கச் செய்வது எப்படிப்பட்ட தர்மவிரோதம்? வேறு எந்த வழியுமே இல்லாத சந்தர்ப்பத்தில் மட்டும் சில விஷவைத்தியர்கள் இப்படிப்பட்ட கர்மத்தைச் செய்திருப்பதாகக் கேள்விப்பட்டதுண்டு. ஆனால், புத்தூர் தறவாட்டைச் சேர்ந்த எந்த ஒரு மாந்திரீகனுக்கும் இப்படியொரு தேவை ஏற்பட்டதில்லை. அதே போல் இறப்பதற்கு முன்பாக இந்த வீட்டை அடைந்த விஷம் தீண்டிய எந்த நபரும் இதுவரை இறந்து போனதாகவும் சரித்திரம் கிடையாது.



தறவாட்டின் நடைக்கல்லில் தலையை அடித்து இறந்துபோன பாம்பின் சாபம் என்னென்ன துயரங்களை வரவழைக்கப் போகிறதோ? எது நடப்பதாக இருந்தாலும் அதன் காரணகர்த்தா தனது மகன்தானே? மகனது துர்நடவடிக்கைகளினால் ஏற்படும் விளைவுகளுக்குப் பொறுப்பேற்றுக் கொள்ளாமல் அவனுடைய தாயான நான் மட்டும் ஒதுங்கியிருக்க முடியுமா?

மோசமான கர்மம் செய்ததுடன் பேராசைக்காரனான குமாரன் செய்த அடுத்த காரியம் என்ன? ஓர் ஏழைப் பெண்மணி பணத்திற்குப் பதிலாகத் தன் கழுத்தில் கிடந்த தங்கச் சங்கிலியைக் கழற்றிக் கொடுத்ததும் கைநீட்டி வாங்கிக் கொண்டானே! சே...வெட்கமில்லாதவன்!

என்னுடைய பித்ருக்களே, நினைக்க நினைக்க நெஞ்சு வெடித்து விடும்போல் இருக்கிறது! எனக்கு நீங்கள் ஒரேயொரு உதவி செய்யுங்கள். என்னை உங்களிடத்திற்கு உடனே அழைத்துச் செல்லுங்கள். எனக்கு இனிமேல் எதற்கு வாழ்க்கை? ஒரு யுகம் முழுவதும் அனுபவிக்க வேண்டிய வேதனைகளை ஒரு மனித ஆயுளுக்குள் நான் அனுபவித்து விடவில்லையா? இந்தத் தறவாட்டின் மாந்திரீக ஸித்திகளெல்லாம் அழிவதற்கு முன்பு மாந்திரீகனான மகன் அபாயத்தின் படுகுழியில் விழுவதற்குமுன், இந்தக் குடும்பத்தில் சந்ததி அற்றுப் போவதற்கு முன்னால் இந்தக் கிழவியை உங்களிடம் அழைத்துக் கொள்ளுங்கள்.

தேம்பி அழுதுகொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி “அக்கா!” என்ற அன்பான அழைப்பைக் கேட்டு வெறித்துப் பார்த்தார்.

“மகேஸ்வரீ” தீனமான குரலில் அழைத்தபடி அவர் இரு கைகளையும் உயர்த்தினார். தங்கை, அக்காவின் உடலுடன் ஒட்டிக் கொண்டாள்.

பாட்டிகளின் விசும்பல்களைக் கேட்டு கொச்சுராமனும், ராஜம்மாவும் அழத் தொடங்கினார்கள்.

“என்ன இங்க ஒரே அழுகையும் புலம்பலும்? இந்த வீட்டில யாராவது இறந்துபோய்ட்டாங்களா என்ன?” - சமையலறையின்

வெளிப்புறத் திண்ணையிலிருந்து குமாரன்தம்பியின் குரல் அதிகாரத்துடன் ஒலித்தது.

தன்னைக் கட்டிப்பிடித்திருந்த தங்கையைத் தள்ளி விலக்கியபடி குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி எழுந்தார். சமையலறை வெளித் திண்ணைப் பக்கமாகப் பாய்ந்தார். மகனுக்கு நேராக நின்று அலறினார்: "ஆமாமடா கழுவேறி! புத்தூர் தறவாட்டின் கர்மஸித்திகளும் பிரதாபமும், ஐஸ்வர்யங்களும் ஒண்ணா இறந்து போச்சு. உன் செயலால இந்தக் குடும்பத்தின் குலதெய்வமான கருடன் கோபப்பட்டு விலக்கிடுச்சு. சக்தியுள்ள ஏதாவது மந்திர ஸித்தி உன்கிட்ட இருந்தா, அதைக் கொண்டு உன்னைப் பெற்ற தாயையும் கொன்னுடு."

அம்மாவின் கோபத்தைக் கண்ட குமாரன்தம்பி தென்புறத் தளத்தை நோக்கி வேகமாக நடந்தான். பூங்கொத்து போல் நடுங்கிக் கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியைத் தாங்கிப்பிடித்து வடக்குப்புற அறையிலிருந்த ஊஞ்சலில் படுக்க வைத்துவிட்டு, அவரருகிலேயே மகேஸ்வரித் தங்கச்சியும் உட்கார்ந்தார்.

அறையின் ஒரு மூலையில் துயரத்துடன் மௌனமாக நின்றிருந்த குழந்தைகளைப் பார்த்து மகேஸ்வரிதங்கச்சி கூறினார்: "விளக்கு வைக்கும் நேரமாச்சே...? ராஜம்மா நீ போய் பூஜையறை வாசலில் விளக்கேத்து. பிறகு இரண்டு பேருமா உட்கார்ந்து நாமம் சொல்லுங்க."

குழந்தைகள் அந்த அறையிலிருந்து போனதும், தங்கையைக் கட்டிப் பிடித்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி தழுதழுத்த குரலில் பேசினார்: "நம்ம தறவாடு நாசத்துக்குள்ள விழுந்துடுச்சு மகேஸ்வரி."

"அதுதான் கடவுள் சித்தம்னா அதுக்கு நாம என்ன செய்ய முடியும் அக்கா! இந்தப் பிரபஞ்சத்தில இருக்கிறதெல்லாம் எப்பவாவது அழிய வேண்டியதுதானே? விதியின் எப்படிப்பட்ட நிலையையும் அனுசரிக்கத்தான் வேணும்னு சொல்ற நீங்களா இதுக்காக கவலைப்படுறீங்க? எழுந்திருங்க, நாம நாமம் ஜபிக்கலாம்" - மகேஸ்வரிதங்கச்சி அக்காவைப் பிடித்து எழுப்பினார்.



கண்ணீரைத் துடைத்துக் கொண்ட குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி ஒரு நீண்ட பெருமூச்சுடன் பேசினார்: "நாமம் ஜபிக்கிறதைக் கொஞ்ச நேரம் கழிச்சுக்கூட செய்யலாம். இன்னிக்கு இங்க நடந்த செய்தி உனக்குத் தெரியுமா?"

"எல்லாம் எனக்குத் தெரியும் அக்கா. சங்குசார் சொன்னார். கிழக்குப்புற நடைக்கல்லில் பாம்பு ஒண்ணு தலையை அறைஞ்சு இறந்து போச்சு. இந்தத் தறவாட்டை சபித்தபடிதான் அது உயிரை விட்டிருக்கும். பாம்புச் சாபம் என்ன செய்தாலும் தீராது. அதனால ஏற்படப் போற ஆபத்துகளை நாம அனுபவிச்சே தீரணும். இனி அதைப்பத்திப் பேசி என்ன பலன்?"

"இருந்தாலும் மகேஸ்வரி, என்னால அதைத் தாங்கிக்க முடியலையே?"

"தாங்கிக்கிற சக்தியைத் தர தெய்வத்தால மட்டும்தான் முடியும். தற்சமயம் நாம ஸ்ரீலலிதா பஞ்சரத்ன ஸ்தோத்திரம் சொல்லலாம். எவ்வளவு காலமாச்சு நாம ரெண்டு பேரும் ஒண்ணா உக்காந்து ஸ்தோத்திரம் ஜபிச்சு?"

அக்காவும் தங்கையும் கைகளைக் கூப்பினர். அவர்களது உதடுகள் ஒன்றுபோல அசைந்தன:

*ப்ராத :ஸ்மராமி லலிதா வதனாரவிந்தம்*
*பிம்பாதரம் ப்ருதுலமௌக்திக சோபி நாஸம்*
*ஆகர்ண்ண தீர்ஹ நயனம் மணி குண்டலாட்யம்*
*மந்தஸ்மிதம் ம்ருக மதோஜ்வல ஃபாலதேசம்*
*ப்ராதர்பஜாமி லலிதாம்புஜ கல்பவல்லீம்*
*ரத்னாம் குலீயஸதம் கூளிபல்லவாட்யாம்*
*மாணிக்ய ஹேமவலயாம் கதசோபமானாம்*
*புண்ட்ரேக்ஷு சாபக ஸூமேஷு ஸ்ருணீர்ததானாம்*

ஸ்ரீ லலிதா பஞ்சரத்ன ஸ்தோத்திரத்தின் வரிகளை உருவிட்டுக் கொண்டிருந்த இருவருடைய மனங்களும் மனத்தில் தட்டுப்பட்ட ஸ்ரீ லலிதா பரமேஸ்வரியின் உருவத்திற்கு முன்பாகத் தவமிருக்கத் தொடங்கியது.

# 42

நள்ளிரவு தாண்டிய பிறகுதான் சகோதரிகள் இருவரும் நாம ஜபத்தை முடித்துக் கொண்டு சமையலறைத் திண்ணைக்கு வந்தனர்.

எரியும் லாந்தர் விளக்கின் அருகில் உட்கார்ந்தபடி தூங்கி வழிந்துகொண்டிருந்த சமையற்காரியை எழுப்பினார் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி.

"குழந்தைங்க சாப்பிட்டாங்களா பார்கவி?"

"சாப்பிட்டு ரெண்டு பேரும் கிழக்குப்புற அறையில படுத்துத் தூங்குறாங்க அம்மச்சி."

"குமாரன் ஏதாவது சாப்பிட்டானா?"

"சாயந்திரத்திற்குப் பிறகு நான் அவரைப் பார்க்கவே இல்லை."

"ஓஹோ! இன்னிக்கும் அவர் ராத்திரி ஊர் சுத்தப் போயிட்டா ராக்கும்?" - கேலித்தொனியில் கேட்ட குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கிழக்குப்புற அறையை நோக்கி நடந்தார். லாந்தர் விளக்கையும் எடுத்துக் கொண்டு மகேஸ்வரியும் அக்காவைப் பின்தொடர்ந்தார்.

கோரைப் பாயில் படுத்து சுகமாகத் தூங்கிக் கொண்டிருந்த குழந்தைகளைப் பார்த்த பாட்டிமார்களது கண்கள் நீரால் நிறைந்தன.

"நம்ம ரெண்டுபேரோட கண்களும் மூடிட்டா இதுங்களைக் கவனிக்க வேற யார் இருக்குறாங்க மகேஸ்வரி?" - குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி விம்மலுடன் கேட்டார்.

"கடவுள்தான்!" - மகேஸ்வரித் தங்கச்சி பெருமூச்செறிந்தார்.



"பெண்ணுக்கு வயசு பதினஞ்சு ஆயிடுச்சே... நல்ல ஒருத்தனைத் தேடிப் பிடிச்சுக் கட்டி வெச்சோம்னா கொஞ்சம் நிம்மதியா சாகலாம்."

"அதைப் பொறுப்பெடுத்துச் செய்யவேண்டிய வீட்டுக் காரணவர், தன்னோட சொந்தக் கல்யாண வேலைகள்லயில்ல ஈடுபட்டிருக்கார்? எல்லாம் விதிப்படிதானே நடக்கும்?" - தென்புற அறையை நோக்கி நடந்த மகேஸ்வரிதங்கச்சி கூறினார்.

காலியாகக் கிடந்த சப்ரமஞ்சக் கட்டிலைப் பார்த்த மகேஸ்வரிக்குச் சிரிப்பு வந்தது.

"நீ எதுகாகச் சிரிக்கிற?"

"எப்படி அக்கா சிரிக்காம இருக்கிறது? ஏதோ ஒரு காலத்தில அசல் சந்தன மரத்தால செஞ்சு வைச்சிருக்கிற கட்டில்! பட்டு மெத்தை! இதில படுத்து உறங்க நம்ம குமாரனுக்கு விதியில்லையே!"

"மகேஸ்வரி உன்கிட்ட நான் எதுக்காக மறைக்கணும்? கொஞ்ச நாளா இதுதான் இவனோட வழக்கம். விடியற்கால நேரத்தில வீட்டுக்கு வர்றான். நீ அந்தத் தலையணையைத் தூக்கிப் பாரேன்."

அக்காள் சொன்னபடி தங்கை கட்டிலில் கிடந்த தலையணையைத் தூக்கிப் பார்த்தார்.

"விளக்கைப் பக்கத்தில கொண்டுபோய்ப் பார்!" - குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சற்று உரத்த குரலில் கூறினார்.

லாந்தர் விளக்கு வெளிச்சத்தில் மகேஸ்வரிதங்கச்சி அங்கிருந்தவற்றைப் பார்த்தார். புத்தூர் தறவாட்டு மகா மாந்திரீகனது அடையாளச் சின்னங்களான தங்க ருத்ராக்ஷ மாலை மற்றும் பாதுகாப்புத் தாயத்தும் கைவளையமும் தலையணையின் கீழ் ஓய்வெடுத்துக் கொண்டிருந்தன.

"என் பித்ருக்களே, அடுத்த வாரிசுக்கு உபதேசம் கொடுக்கிற வரை இதெல்லாம் மாந்திரீகனது உடம்பிலிருந்து பிரியக் கூடாதுங்கிறது முறை."

"முறைப்படிதான் இந்த வீட்டில எல்லாக் காரியங்களும் நடக்குதா? இதையெல்லாம் அவிழ்த்து வைச்சுட்டா எப்படிப்பட்ட

அக்கிரமத்தையும் செய்யலாம்கிறது குமாரனது சொந்த முறை என்னவெல்லாம் அசிங்கம் செய்ய முடியுமோ அதையெல்லாம் செஞ்சுட்டு முழுகிக் குளிச்சிட்டால் அழுக்குப் போய் விடுகிறது பிறகு அவன் இதையெல்லாம் உடம்பில போட்டுப்பான். எதையும் நான் கவனிக்கலேங்கிறது அவன் நினைப்பு!"

"அவனை இந்தமாதிரி கயித்தை அவுத்து விட்டுவைச்ச சரியாகாது அக்கா. அவனால ஒரு தறவாடே சாம்பலாகப் போகு இல்லையா?"

"என்ன செய்யலாம் மகேஸ்வரி? கடவுளே நினைச்சால்கூட அவனை இனிமேல் மாத்த முடியாது" - சிரிப்பின் வேடமணிந் ஒரு விசும்பலுடன் குஞ்ஞுக்குட்டி தொடர்ந்தார்: "அவரை விதைச்சுட்டுத் துவரையை அறுவடை செய்ய முடியுமா முளைவிட்டது என்னோட வயித்துலதான்னாலும் வி நாகராஜன் போற்றியோடதாச்சே?"

அக்காளின் வார்த்தைகள் தங்கையின் நெஞ்சிற்கு வெடிகளாக வெடித்தன. எத்தனையோ வருடங்களுக்கு முந்தை அனுபவங்களை நோக்கி அவரது நினைவுகள் பறந்தன.

அக்கா குமாரனைப் பெற்றெடுத்துக் கொஞ்சநாள் ஆகியிருக்கும். ஒரு சாயங்கால வேளை. பப்பு அண்ணா கொட்டாரத்திற்குப் போயிருந்தார். காரியஸ்தரும் வீட்டில் இல்லை.

"திருமேனி கிழக்குப்புற அறைக்கு வந்திருக்கிறதாத் தோணுது" - அன்றைய சமையல்காரியான கார்த்தியாயினி குரல் கொடுத்தாள்.

தன் சொந்தக் குழந்தையை ஒருதடவைகூட பார்க்க வேண்டும் என்று ஆசைப்படாத நாகராஜன் போற்றி, தினமும் சாயங்காலமானால் கிழக்குப்புறத் திண்ணையில் சற்றுநேரம் உட்கார்ந்துவிட்டுப் போவது வழக்கம். குழந்தையை எடுத்துச் சென்று அவரிடம் காட்ட ஒருதடவை தான் முயன்றபோது அக்கா தடுத்தார். "இதோ இந்த அறைவரை வந்து தன்னோட குழந்தையைப் பார்க்காதவராச்சே இவனோட அப்பா! அங்க கொண்டு போய்க் காட்டுற வேலையெல்லாம் வேணாம்."



பப்பு அண்ணா கொட்டாரத்திற்குப் போயிருக்கிற நேரம் பார்த்து போற்றி வருவார். வந்தவுடன் கிழக்குப்புறத் திண்ணையில் கிடக்கும் சாய்வு நாற்காலியில் விழுந்து கொட்டாவி விட்டபடி, "ஷடானனா, மயில்வாகனா!" என்று உரத்த குரலில் அழைப்பார். அப்படியும் வீட்டிற்குள் இருப்பவர்களின் கவனத்தைக் கவர முடியவில்லையென்றால் ஒருவித அசட்டுச் சிரிப்புடன் கேட்பார். "உள்ள யாருமில்லையா? அந்த வெத்தலைப் பெட்டியைக் கொஞ்சம் கொடுத்துவிடக் கூடாதா?"

காரியஸ்தர் வீட்டில் இல்லையென்றால் கார்த்தியாயினிதான் வெற்றிலைப் பெட்டியுடன் போவாள். அவருக்கு முன்னால் ஒருபோதும் போய் நிற்கக் கூடாது என்கிற பிடிவாதமிருந்தது தன்னிடம்.

எந்தப் பெண்ணைப் பார்த்தாலும் வேட்கையுடன் விழுங்க ஆசைப்படும் கண்கள் நாகராஜன் போற்றியினுடையது. தொப்பை வயிற்றைக் குலுக்கியபடி அவர் சிரிக்கும் சிரிப்பே அருவருப்பை ஏற்படுத்தக் கூடியது. "என்ன ஆச்சு? உடம்பு ரொம்பவும் இளைச்சிருக்கே?" என்கிற அவருடைய வழக்கமான பல்லவியையும் தாங்கமுடியாது.

"மகேஸ்வரியம்மா, அவருகிட்டப் போறதுன்னாலே எனக்குப் பயம்தான். அப்படியொரு மட்டமான பார்வை. சகிக்க முடியாத ஒரு கொஞ்சல். பக்கத்தில வரச்சொல்வார். உடம்பில எங்கேயாவது ஒரு இடத்தில கை வைச்சுத் தடவாம விடமாட்டார், அந்த வெட்கங்கெட்ட மனுஷன்!" கார்த்தியாயினி ஒரு தடவை சொல்லியிருக்கிறாள்.

அன்று மாலை வெற்றிலைப் பெட்டியை எடுத்துச் செல்லக் கார்த்தியாயினி தயாராக இல்லை. "என்னால முடியாதும்மா!" - உறுதியாகச் சொல்லி விட்டாள்.

வேண்டாவெறுப்புடன் வெற்றிலைப்பெட்டியுடன் தான் கிழக்குப்புறத் திண்ணைக்குப் போனோம். தன்னைக் கண்டவுடன் வழக்கமான அசட்டுச் சிரிப்புடன் கேட்டார். "என்ன... என்ன...

நான் கனவா காண்றேன்? இன்னிக்கு என் முன்னால வர்ற அளவுக்கு என்ன ஆச்சு மகேஸ்வரி? உன்னை நல்லாப் பார்த்து எவ்வளவு நாளாச்சு?"

வெற்றிலைப் பெட்டியை சாய்வு நாற்காலிக்குப் பக்கத்தில் வைத்துவிட்டுத் திரும்பியபோது திருமேனி கேட்டார்: "என்ன மகேஸ்வரி! என்கிட்ட இப்படியொரு அலட்சியம்? வெத்தலைப் பெட்டியை என் கையில தரக்கூடாதா? நான் என்ன அன்னியனா உனக்கு?"

தயக்கத்தோடுதான் என்றாலும் மரியாதைக்காக வலது கையால் வெற்றிலைப் பெட்டியை எடுத்து நீட்டினோம்.

பெட்டியை வாங்குவதற்காக உயர்ந்த அவரது வலதுகை தன் வலது மணிக்கட்டை இறுக்கிப் பிடித்தது. அத்துடன் மூச்சிரைத்தடி மந்திரம் உயர்ந்தது: "உன்னை எனக்கு ரொம்பவும் பிடிக்கும் மகேஸ்வரி. அதிகமான ஆசை. ராத்திரியில நான் வரட்டுமா?"

"மரியாதையா முதல்ல கையை விடுங்க!" சுற்றுப்புறத்தை மறந்து அலறினோம். சட்டென்று அவர் கையைப் பின்வாங்கினார். பெட்டியைக் கீழே போட்டுவிட்டு வீட்டிற்குள் ஓடிப் போனோம்.

சமையலறையை நெருங்கிய போதுதான் மூச்சே சீரானது. தன்னுடைய பரபரப்பைக் கண்ட கார்த்தியாயினி கேட்டாள்: "என்னம்மா, திருமேனியின் கை நெஞ்சில எங்கயாவது பட்டுடுச்சா என்ன?"

கார்த்தியாயினிக்குப் பதில் சொல்லாமல், அக்கா படுத்திருந்த வடக்குப்புற அறைக்குப் போனோம்.

"என்ன... என்னமோ மாதிரி இருக்குற?" அக்காவின் கேள்வி.

"ஒண்ணுமில்லை அக்கா. திருமேனிக்கு வெத்தலை பாக்கு கொடுத்துட்டு வர்றேன்."

"அதுக்கு உன் முஞ்சி ஏன் இப்படி வெளுக்கணும்? உன்கிட்ட ஏதாவது வம்பு பண்ணினாரா?"



"அதெல்லாம் ஒண்ணுமில்லை" சிரிப்பை வலுக்கட்டாயமாக வரவழைத்துப் பதில் சொன்னோம்.

போற்றியைப் பற்றி அளவுக்கு அதிகமாகவே தெரிந்து வைத்திருந்த அக்கா, தன் பதிலை நம்பினாளோ இல்லையோ?

போற்றி இந்த ஊரில் தங்கியிருந்த குறைந்த கால அளவிலேயே சரியான 'பெண்பித்தன்' என்று பேர் வாங்கியிருந்தார். இந்த ஊரிலிருந்த வழிதவறிய பெண்கள் எல்லாருடனும் நாகராஜன் போற்றி தொடர்பு வைத்திருந்ததாகத்தான் ஊர்ப்பேச்சு.

பூஜையைவிட, தேவாரத்தைவிட அவர் அதிக முக்கியத்துவம் தந்தது பெண்களுடனான தொடர்புக்குத்தான். அவருக்குப் பிறந்த குமாரன் பெண்பித்தனாக இல்லாமல் இருந்தால்தான் அது ஆச்சரியமான செய்தி!

அக்கா சொன்னது எவ்வளவு சரியான வார்த்தை? அவரை போட்டால் துவரையா முளைக்கும்? வித்து குணம் பத்துக் குணம் என்பதல்லவா பழமொழி? அப்படிப்பட்ட அப்பாவுக்குப் பிறந்த பிள்ளைக்கு இப்படிப்பட்ட குணம் இல்லாமல் இருக்குமா?

"சரி வா, போய்ப் படுக்கலாம்" சிந்தனையில் அமிழ்ந்து அசைவற்று நின்றுபோன மகேஸ்வரிதங்கச்சியின் தோளைப் பிடித்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கூறினார்.

அவர்கள் இருவரும் வடக்குப்புற அறைக்குள் நுழையும் போது சமையல்காரி கேட்டாள்: "எதுக்காகப் பட்டினியோட படுக்கப் போறீங்க?"

"எங்களுக்குப் பசிக்கலை பார்கவி. நீ சாப்பிட்டுப் படுத்துக்க" குஞ்ஞுக்குட்டி கூறினார்.

ஊஞ்சலில் ஏறிப் படுத்துக் கொண்டார்களே தவிர, சகோதரிகள் இருவருக்கும் தூக்கமே வரவில்லை.

"மகேஸ்வரீ..."

"என்ன அக்கா?"

"கருடன் நம்ம குலதெய்வமா இருந்தாலும், நாம ஒருபோதும் பாம்புகளை நிந்திச்சதில்லை. சாத்து மாமா காலத்தில கிழக்குக் கோயிலில் பாம்புகளுக்கான பூஜைகளும், புள்ளுவன் பாட்டும் நடத்தினது உனக்கு ஞாபகமிருக்கா?"

"நல்லா ஞாபகம் இருக்குது அக்கா. பப்பு அண்ணா மாந்திரீகனான பிறகுகூட ஒருதடவை புள்ளுவன் பாட்டும், கோலம் கோட்டு பூஜையும் செஞ்சாரே!"

"ஆமாம்! அதெல்லாம் பாம்புகளை அமைதிப்படுத்துறதுக் காகச் செஞ்ச கர்மங்கள். இப்போ நம்ம காவு அனைாதையா கிருக்கு. காடு மண்டி, உள்ளே இருக்குற சவுக்கையே தெரியாத அளவு புல்மண்டிப் போயிருக்கு!"

முன்பெல்லாம் கிழக்குக் காவில் நடந்த பூஜையும், புள்ளுவன் பாட்டும் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் நினைவில் உடனே எழுந்தன.

அஷ்டநாகக களம் தயாரிப்பதற்காக (எட்டுவித நாகங்களுக்கும் பூஜை செய்ய ஒதுக்கும் பகுதி) காவிற்குள் சவுக்கைக்கு முன்பாகப் போட்டிருந்த சிறிய பந்தல்.

வண்ண வண்ணமான கோலப் பொடிகளால் வரையப்பட்ட ஐந்து தலை, ஏழு தலைகள் உள்ள நாகங்களின் படங்கள். அஷ்டநாகக் களம்!

குளித்து சுத்தமாகித் துள்ளுவதற்குத் தயாராகப் பந்தலுக்குள் கைகூப்பியபடி நிற்கும் வெளிச்சப்பாடு.

வீணை, கடம் போன்ற வாத்தியக் கருவிகளுடன் பாடுவதற்குத் தயாராகப் புள்ளுவனும் புள்ளுவத்தியும் (பாட்டுப் பாடி நடக்கும் குறிப்பிட்ட ஒரு சாதிக்காரர்கள்).

புள்ளுவன் பாட்டைத் தொடங்கினான். புள்ளுவத்தி தொடர்ந்து பாடினாள்.

பாட்டுத் தொடர்கிறது.

"அக்கா... அக்கா! கிழக்குப் புறத்தில ஏதோ சத்தம் கேக்கிற மாதிரி இருக்கு... எழுந்திருங்க" மகேஸ்வரித் தங்கச்சி தட்டி



எழுப்பிய போது குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி புள்ளுவன் பாட்டுப் போதையிலிருந்து விடுபட்டார்.

அக்காளும் தங்கையும் எழுந்து சென்று சமையல்காரியை எழுப்பினர்.

சமையல்காரி லாந்தர் விளக்கைக் கொளுத்திக் கையில் எடுத்துக் கொண்டு முன்னால் நடக்க, சகோதரிகள் பின் தொடர்ந்தனர்.

கதவைத் திறந்து கொண்டு கிழக்குப்புறத் திண்ணைக்கு வந்த மூன்று பெண்களும் ஒரே மாதிரி திடுக்கிட்டனர்.

ஏராளமாகக் குடித்து ஏகமாகப் போதை தலைக்கேறிய நிலையில் முற்றத்தில் நின்று ஆபாசமாகப் பேசிக் கொண்டிருந்தான் குமாரன்தம்பி. பணிவுடன் அவனைத் தாங்கிப் பிடித்துக் கட்டுப்பாட்டில் வைத்திருந்தனர் இரண்டு பேர்.

கோபம் தலைக்கேறிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி முற்றத்தில் குதித்தார். "டேய், குடும்பத் துரோகி! இப்பத்தான் நீ மகானாகி இருக்கிற. கருட பகவான் உன்னைக் கைவிட்டுட்டார் இல்லையா? உன்னோட ஸித்திகள் எல்லாம் நாசமாகிவிடலையா? புழுப் பிடிச்சுச் சாகுறதுக்கான வேலையை அல்லவா நீ இப்பச் செஞ்சுட்டிருக்கிற!" அவர் ஆவேசத்துடன் அலறினார்.

"அம்மா, பேசாம இருக்கீங்களா? நான் குடிப்பேன். கஞ்சா பிடிப்பேன். பெண்களோட படுப்பேன். இதனால யாருக்கு என்ன நஷ்டம்? கருடன் கோபிச்சுட்டா எனக்கென்ன? கடிச்ச பாம்பை இங்க வரவழைச்சு விஷத்தை இறக்குவேன். பத்ரகாளியை சேவிச்சு எல்லாவித மந்திரவாதத்தையும் நடத்துவேன். மந்திரவாதம் செய்யப் பணம் வாங்குவேன். பானுமதியை நான் கல்யாணம் செய்வேன். அவளை இந்தத் தறவாட்டின் மகாராணியா வாழ வைப்பேன். பப்பு மாமாவை போகச் சொல், அவர் கிடக்கிறார். இறந்துபோன பிறகும் உயிரோட இருக்கிறவங்களைத் தொல்லைப்படுத்திட்டிருக்கிற பெரியவர்.

அந்தப் பப்புத்தம்பியைவிடப் பெரியமாந்திரீகன் இந்தக் குமாரன்தம்பி. உனக்குத் தெரியுமா அம்மா" - குமாரன்தம்பியின் வார்த்தைகள் ஒரே குழறலாக ஒலித்தன.

மனக்கட்டுப்பாட்டை இழந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வலது கையை ஓங்கி மகனுடைய முகத்தில் ஓர் அடி கொடுத்தார். அந்த அடி மகனைச் சரியாகவே தாக்கியது. வாயைத் திறக்க முடியாதபடி நின்றுவிட்ட குமாரன்தம்பியை அடிப்பதற்காக குஞ்சுக்குட்டிதங்கச்சி மீண்டும் கையைத் தூக்கியபோது மகேஸ்வரித்தங்கச்சி தடுத்தார். அக்காவை வலுவாகப் பிடித்துக் கொண்டார்.

"நீங்கள்லாம் யார்?" - குமாரன்தம்பியுடன் வந்திருந்தவர்களைப் பார்த்து மகேஸ்வரிதங்கச்சி கேட்டார்.

"நான் தவில்காரன் குட்டப்பமாரார். இவர் கிழக்குவீதியில காபிக்கடை வைச்சிருக்கிற கோபாலன்" - இருவரில் ஒருவர் பதிலளித்தார்.

சற்றுத் தூரத்தில் நின்றிருந்த மற்றொருவரை அப்போதுதான் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கவனித்தார்.

"யாருடா அங்க நிக்குறது?" - கோபக்குரலில் கேட்டார்.

"சங்குசார்!"

"சங்குசாரா? கொச்சுபுத்தூர் வீட்டுக்குக் காவலா இருக்க உங்களைச் சாயந்தரமே அனுப்பினேனே? ஆமாம், நீங்க எப்படி இந்தக் கூட்டத்தோட சேர்ந்திங்க?"

மௌனமாக நின்று கொண்டிருந்த சங்குசாரிடம் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கட்டளையிடுவது போல் சொன்னார்: "நீங்களும் சேர்ந்துதான் இவனைக் கெடுக்குறீங்க. உங்க காரியஸ்த சேவை இனி இந்த வீட்டுக்கு வேண்டியதில்லை. இனிமேல் இந்த வீட்டுப்படியை நீங்க மிதிக்கக்கூடாது. இவங்களையும் கூட்டிட்டுக் கிளம்புங்க!"



வீட்டிற்குள் நுழைய முயன்ற குமாரன்தம்பியிடம் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கோபம் குறையாமல் சொன்னார்: "நீ இன்னிக்குத் திண்ணையிலோ முற்றத்திலோ படுத்துக்கொள்ள வேண்டியதுதான். உள்ள வரக்கூடாது!"

குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியுடன் மகேஸ்வரிதங்கச்சியும் சமையற்காரியும் வீட்டுக்குள் நுழைந்தனர்.

வீட்டின் நிலைக்கதவு மூடித்தாழிடப்பட்டது.

# 43

குழந்தைகளை அழைத்துக் கொண்டு மறுநாள் காலையிலேயே வீட்டிற்குப் புறப்பட முயன்ற மகேஸ்வரி தங்கச்சியிடம் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அழுதபடி கூறினார்: "கொஞ்சநாள் கழிச்சுப் போகலாமே மகேஸ்வரி. நீயும் குழந்தைகளும் இங்க இருந்தா என் மனசுக்குக் கொஞ்சம் ஆறுதலா இருக்கும்."

"மன்னிச்சுடுக்கா. இந்த வீட்டில என்னால் இருக்கமுடியாது. நீங்க வேணும்னா எங்களோட வந்துடுங்க. குமாரனோட கல்யாணம் நெருங்கிடுச்சில்லையா? கல்யாணம் முடிஞ்சு அவனும் அவனோட மனைவியும் இங்க இருக்கட்டுமே."

"எவ்வளவு மோசமானவனா இருந்தாலும் என்னோட மகனாகிட்டானே. அவனை விட்டுவிட்டு நான் எப்படி வரமுடியும்?" - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் கண்கள் நீரால் நிறைந்தன.

வீட்டின் கிழக்குப்புறத்திலிருந்த நெல்வயலின் வேலிவரை தங்கையையும் பேரக் குழந்தைகளையும் தொடர்ந்துவந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி, வரப்பு வழியாகத் திரும்பி வந்தார். அப்போது ஒரு பெண்ணின் பரிதாபமான அலறல் கேட்டது.

வியப்படைந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி சுற்றுமுற்றும் பார்த்தார். ஆள் நடமாட்டமே இல்லாத நெல்வயல். காற்றில்

அழகாகத் தலையசைக்கும் நெற்கதிர்கள். இந்த இடத்தில் ஒரு பெண்ணின் அழுகையா?

ஒருவேளை பிரமையாக இருக்குமோ? மனம் பித்துப் பிடித்ததுபோல இருந்தால் இப்படியெல்லாம் தோன்றுமோ?

நாலைந்து தப்படிகள் வைப்பதற்குள் மறுபடியும் அதே அழுகைக் குரல்! அவர் காதைக் கூர்மையாக்கினார்.

"பாட்டி, நான் இங்க விழுந்துட்டேன்! என்னைக் கொஞ்சம் கைதூக்கி விடுங்களேன்!" நெஞ்சை உருக்கும் விதத்திலமைந்த வேண்டுகோள்.

"யாரது? குரல் மட்டும்தான கேக்குது! ஆளைத் தெரியலையே?" - சுற்றுமுற்றும் பார்த்தபடி தனக்குத்தானே பேசிக் கொண்டார்.

"இங்க பாருங்க பாட்டி, இந்தப் பக்கம்...!"- சோர்வுடனிருந்தது குரல்.

அவர் நின்றுகொண்டிருந்த வரப்பின் வலதுபுறமாகச் சற்றுத்தூரத்தில் நெற்கதிர்களுக்கு நடுவே ஒரு கை மேற் புறமாக உயர்வதைப் பார்த்தார். சிவந்த நிறத்துடன் பருமனான கைப்பகுதி ஒன்று கண்ணுக்குத் தெரிந்தது. அது ஓர் இளம் பெண்ணினுடையது என்று அவருக்குத் தெரிந்தது.

வரப்பு வழியாக நடந்து சென்றபோது கால் வழுக்கி விழுந்ததாக இருந்தால், இவ்வளவு தூரத்திற்குப் போனது எப்படி? யாராவது இழுத்துக்கொண்டு போய்ப் போட்டிருப்பார்களோ?

பெண்ணின் தீனமான குரலைக் கேட்கும்போது பரிதாபமாக இருந்தது. எழுந்திருக்க முடியாத சூழ்நிலையில் கிடக்கும் இந்தப் பெண்ணின் குரல் பழக்கமுள்ளதல்ல. களிக்கல் வீட்டுப் பெண்களாக இருக்கமுடியாது. பார்வதி சிவந்த நிறம் கொண்டவள்தான். இருந்தாலும் அவளுடைய மூன்று பெண்களும் கறுப்பானவர்கள்.

"பாட்டி, கொஞ்சம்கூட இரக்கமே இல்லாத மாதிரி வேடிக்கை பார்த்துட்டிருக்கிங்களே, சீக்கிரமா வந்து என்னைக் கைதூக்கி



விடுங்களேன்!"- உரத்த குரலில் மீண்டும் உயர்ந்தது வேண்டுகோள். இப்போது அவளது இரண்டு கைகளும் தெரிந்தன!

எழுந்திருக்க முடியாமல் விழுந்து கிடக்கும் ஓர் இளம் பெண்ணைப் பிடித்துத் தூக்கிவிடும் அளவுக்கு இந்த உடம்பில் வலுவுண்டா? வீட்டிற்குப் போய் பார்கவியை அழைத்து வந்தால் என்ன? - குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி ஒரு விநாடி யோசித்தார்.

மீண்டும் அலறல் உயர்ந்தது. குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் இதயம் இளகியது. எது நடந்தாலும் சரி என்று தீர்மானித்தவராக வலதுபுற வயல் பகுதியில் இறங்கினார், இவ்வளவு நேரமும் தயங்கிக் கொண்டிருந்த குற்ற உணர்வுடன்.

"சகோதரீ" - கனத்த குரல்!

ஆமாம்... தன்னுடைய சகோதரனது குரல். பப்புவின் குரல்!

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் இதயம் சிலிர்த்தது. தம்பியின் குரல் கேட்டு எத்தனை நாள்களாகின்றன? அவசியமான சந்தர்ப்பத்தில் மட்டுமே அழைப்பான்!

"என்ன பப்பு?"- மேற்புறமாகக் கண்களை உயர்த்தியபடி கேட்டார்.

"நீங்க அங்க போகக்கூடாது. விழுந்து கிடக்குறது மனுஷப் பெண்ணில்ல. அது வடயக்ஷிணி. சீக்கிரமா வரப்புக்குத் திரும்புங்க. அப்புறம் திரும்பிப் பார்க்காம வீட்டை நோக்கிப் போங்க. கருட பகவானை மனமார வேண்டிக்கங்க."

திகைப்படைந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் உடம்பு உச்சந்தலையிலிருந்து உள்ளங்கால் வரை நடுங்கியது.

கைகளைக் கூப்பி, கருடனைப் பிரார்த்தித்த அவர் வரப்பை அடைந்தார். பின்பு வேகவேகமாக வீட்டை நோக்கி நடக்கத் தொடங்கினார்.

"கருடமூர்த்தி... பக்ஷிராஜாவே... கிருஷ்ணப்பருந்தே... குலதெய்வமே என்னைக் காப்பாற்றுங்கள்!" அவருடைய மனம் கருடதேவனில் ஒன்றிக் கலந்துவிட்டிருந்தது.

"பாட்டி, போகாதீங்க! என்னைக் காப்பாத்துங்க!" - வயலிலிருந்து அந்த இளம்பெண்ணின் தீனமான குரல் கேட்டுக் கொண்டிருந்தது. குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அதைக் காதிலேயே வாங்கிக் கொள்ளவில்லை.

"குஞ்ஞுக்குட்டி நில்லடி அங்கேயே!" பின்னால் - மிக நெருக்கத்தில் அந்தப் பெண்ணின் அலறல் குரல் கேட்டது. கருட பக்தியில் அமிழ்ந்து விட்டிருந்த அவருடைய மனம் கொஞ்சம்கூடப் பதறவே இல்லை. இதயத்தில் உறைந்து சேர்ந்திருந்த கருட பக்தி அவருக்கு எல்லையற்ற மனோதைரியத்தை வழங்கியிருந்தது.

தொடர்ந்து பின்புறமிருந்து பயங்கரமான அலறல் எழுந்தது. அத்துடன் சிறகடியோசையின் திடுக்கிட வைக்கும் சலசலப்பு! பூமியே அதிர்ந்து குலுங்குவதாகத் தோன்றியது.

அலறலுக்குப் பதிலாக இப்போது தீனஸ்வரமான பயத்தின் குரல். சிறகடியோசை அந்த ஓலத்திற்குத் தாளம் அமைத்தது.

"நான் போயிடுறேன், என்னைக் குத்திக்கிழிச்சுக் கொல்லாதீங்க" உயிர்போகும் வேதனையுடன் அந்தக் குரல் மன்றாடியது.

திரும்பிப் பார்க்காமல் நடந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி வீட்டு முற்றத்தை அடைந்த பிறகுதான் திரும்பிப் பார்த்தார். எதுவும் புலப்படவில்லை!

உள்ளே வந்தவர் நேராக பூஜையறை வாசலில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினார். "என்னுடைய கருட பகவானே! என் மகனை மன்னிச்சிடுங்க. இந்தத் தறவாட்டை நீங்கதான் காப்பாத்தனும்" கண்ணீர் உகுத்தபடி வேண்டினார்.

அங்கிருந்து எழுந்த அவர் தென்புறத் தளத்திற்கு வந்தார். குளித்துவிட்டு மாந்திரீகச் சின்னங்களை அணிந்துகொண்டு அறைக்குள் உலாவிக் கொண்டிருந்த குமாரன்தம்பியைக் கடுமையாக உற்று நோக்கிய அவர் கேட்டார்: "என்ன, இன்னிக்குத் தியானமில்லையா?"

குமாரன்தம்பி அம்மாவின் கேள்வியைக் காதில் வாங்கியதாகவே காட்டிக் கொள்ளவில்லை. குஞ்ஞுக்குட்டித்



தங்கச்சியின் கோபம் எல்லை கடந்தது. மகனை நெருங்கிச் சென்ற அவர் அவனது வலதுகையைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு கேலிக் குரலில் சொன்னார்: "டேய், மகா மாந்திரீகா! உன்னைத் தேடிக்கிட்டு ஒருத்தி கிழக்குப்புற வயல்வெளியில அலைஞ்சிட்டுருக்கா. நான் இப்போ தப்பிச்சது பப்புவால்தான். கருட பகவானைத் தியானித்தபடி திரும்பிப் பார்க்காம நடந்து வந்ததால வடயக்ஷிணி என்னைக் கொல்லலை."

"வடயக்ஷிணியா, எங்க?" - திடுக்கிட்டவனாகக் கேட்டான்.

"நீ போயி தேடிக் கண்டுபிடி. நீதான் பப்புத்தம்பியைவிடப் பெரிய மாந்திரீகனாச்சே! மாலை, தாயத்து எல்லாத்தையும் கழற்றி வைச்சுட்டு ஊர் சுத்துறதுதானே உன் தொழில். எங்காவது நீ வடயக்ஷிணியைச் சந்திக்காமல் இருக்க முடியாது."

துணுக்குற்ற குமாரன்தம்பி சப்ரமஞ்சக்கட்டிலில் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்தான். ஆபத்து நெருங்கிக் கொண்டிருப்பதாக அவனுக்குள் பயம் எழுந்தது.

தூரக்காட்டுப் பட்டத்திரி அக்கிரமங்களைக் கட்டவிழ்த்து விட்டிருக்கிறான்! தனது ஞானதிருஷ்டி வல்லமை சுத்தமாக அழிந்து போய்விட்டதால் அவனது அக்கிரமங்களைக் குறித்து முன்கூட்டித் தெரிந்துகொள்ள முடியவில்லை.

தன்னுடைய பிரம்மச்சரிய விரதம் முற்றிலுமாகத் தகர்ந்து போயிருப்பதை பட்டத்திரி புரிந்துகொண்டிருக்க வேண்டும். இதுதான் தருணமென்று தனக்கு எதிராக அவன் துர்த்தேவதைகளை ஏவிவிட்டிருக்கிறான். கிழக்குப்புற வயல் பகுதியில் அம்மாவைக் கொல்ல வடயக்ஷிணி முயற்சித்திருக்கும். பப்புமாமாவின் உபதேசப்படி கருடனைப் பிரார்த்தித்தபடி அம்மா தப்பித்திருக்க வேண்டும்.

ஹனுமானும் கருடனும் மட்டுமே தன்னைக் கைவிட்டிருக்கிறார்கள். தேவியின் அனுக்கிரகம் இப்போதும் தனக்கு உண்டு. அன்னபூர்ணேஸ்வரி, பகளாமுகீ தேவி, மகிஷமர்த்தினி, தாராதேவி போன்ற மூர்த்திகள் இன்னும் தன்னைக் கைவிடவில்லை!

பட்டத்திரியைச் சமாளிக்க மேலும் ஒரு சக்தியை தான் பெறமுடியும். தேவியின் உக்கிரமான மற்றொரு வடிவம் பத்ரகாளி. பத்ரகாளியை விடச் சக்தியுள்ள வேறொரு தேவி வடிவமே கிடையாது.

உடனடியாக நிலவறைக்குப் போக வேண்டும். காளிமந்திர ஸித்தி பெறுவதற்கான யஜ்ஞத்தை இப்போதே தொடங்க வேண்டும். பரிசுத்தமான ஹவிஸை மட்டும் உண்டபடி காளிமந்திரத்தை லட்சம் தடவை வீதம் தினந்தோறும் ஜபித்தால் பன்னிரண்டு நாட்களுக்குள் மந்திரஸித்தி பெற்றுவிடலாம் என்று ஓலைச்சுவடியில் படித்த நினைவு. அதன்பிறகு பூனை, ஆடு, எருமைக்கடா போன்றவற்றில் ஏதாவது ஒன்றின் முடி, தோல், எலும்பு, மாமிசம் போன்றவற்றைச் சேகரித்து மந்திர ஜபத்துடன் அமாவாசை அஷ்டமி தினத்தில் காளிக்குப் பலியிடுவதுடன் சாதகனது மந்திரஸித்தி பாறை போல் உறுதியாகிவிடும்.

பத்ரகாளி பக்தனுக்குப் பிரம்மச்சரியம் அவசியமில்லை. திருமண வாழ்க்கையும் தடையாகாது. பத்ரகாளிதான் இனிமேல் தன்னுடைய ஆராதனா மூர்த்தி.

கிழக்குப்புறத் தேங்காய் கிட்டங்கியில் ஒரு யக்ஷியைக் குடி வைத்திருப்பதில் தேவிக்கு ஏதாவது அதிருப்தி ஏற்படுமோ? அப்படி ஏற்படுவதாகத் தெரிந்தால் யக்ஷியை இல்லாமலாக்க வேண்டும். மாரண கர்மத்தையோ, உச்சாடன கர்மத்தையோ பிரயோகித்து யக்ஷியை அழிக்கும் வல்லமை தனக்கு உண்டு. யக்ஷியிடம் செய்து கொடுத்த சத்தியத்தை மீற வேண்டியிருக்கும். துர்த்தேவதைக்குச் செய்து கொடுத்த சத்தியத்தை மீறுவதால் தேவிக்குக் கோபம் ஏற்படாது.

ஏதோ ஒரு தீர்மானத்துக்கு வந்து விட்டவனைப்போல் குமாரன்தம்பி சப்ரமஞ்சக் கட்டிலிலிருந்து எழுந்து பூஜையறை வாசற்படியை அடைந்தான். நிலவிளக்கு ஒன்றில் எண்ணெய் ஊற்றித் திரிகளை ஏற்றினான்.

விளக்கை எடுத்துக் கொண்டு தென்புற அறை வழியாக மேற்குப்புறச் சிற்றறையை அடைந்த குமாரன்தம்பி, சற்று நேரம் நிலவறை வாசற்படியருகே தயங்கி நின்றான். முந்தைய நாள் இரவு நடந்த சம்பவத்தை நடுக்கத்துடன் நினைவுகூர்ந்தான்.



கருடசேவை தோல்வியடைந்ததைத் தொடர்ந்துதான் ஆகர்ஷண (கவர்ச்சி) மந்திரப் பிரயோகத்தின் மூலமாக நாகத்தை வரவழைத்தோம். விஷத்தைத் திரும்ப எடுக்கும் பாம்பு, உயிரைத் தியாகம் செய்யும் என்பதும் தனக்குத் தெரியும். இருந்தும் கௌரவத்தை நிலைநாட்ட அப்படியொரு கர்மத்தைச் செய்ய நேர்ந்தது. துரதிருஷ்டவசமாக அந்தப் பாம்பும் தன் முன்னாலேயே தலையைக் கல்லில் மோதி இறந்தும் போனது.

நேற்று மாலை கருடத்தியானம் செய்யவில்லை. நிலவறையில் வழக்கமாக நடத்தும் விடியற்கால பூஜையும் இன்று தடைப்பட்டு விட்டது.

மனத்தில் ஏற்பட்ட காயம் தாங்க முடியாததாக இருந்தால்தான் நேற்று மாலை வீட்டைவிட்டு வெளியே போனோம். கொச்சுபுத்தூர் வீட்டைக் காவல் காக்கப்போன காரியஸ்தரிடம் சரக்கை வாங்கி வைக்கச் சொல்லியிருந்தோம். மகேஸ்வரிச் சித்தியும் குழந்தைகளும் இந்த வீட்டிலேயே இருந்ததும் சௌகரியமாகிப் போனது. கொச்சு புத்தூர் வீட்டின் திண்ணையில் உட்கார்ந்து ஏராளமாகக் குடித்து விட்டோம். தன்னை நிதானத்தில் நிறுத்த முயன்ற காரியஸ்தனைக் கண்டபடி திட்டினோம்.

எக்கச்சக்கமான போதையினால் காரியஸ்தனையும் அழைத்துக் கொண்டு ராத்திரி வேளையில் மீனாக்ஷியின் வீட்டிற்குப் போனோம். அங்கும் போனவுடன் முதலில் கோபாலனுடன் உட்கார்ந்து புகைத்தது கஞ்சாவை. பிறகு மீனாக்ஷியுடன்...

மீனாக்ஷியை விட்டுப் பிரிந்து விலகிப் படுத்தபோதுதான் ருசி பேதத்தை நாடி மனம் அலைபாய்ந்தது. பாறுக்குட்டியைப் பார்க்க வேண்டுமென்று திடுமென்று ஓர் ஆசை. தயக்கமோ தாமதமோ இல்லாமல் குட்டப்பமாராரின் வீட்டிற்குப் போனோம். சங்குசாரும் கோபாலனும் துணையாக வந்தனர்.

குட்டப்பமாராரின் உபதேசத்தைக் காது கொடுத்துக் கேளாமல், பாறுக்குட்டியுடன் உறவைப் புதுப்பித்தோம். இத்தனையும் முடிந்து வீட்டிற்குப் புறப்பட்டபோது யாரும்

தன்னுடன் வரக்கூடாதென்று தடுத்தோம். ஆனால், சங்குசாரும் கோபாலனும், குட்டப்பமாராரும் தன் வார்த்தையைப் பொருட்படுத்தவில்லை. அந்த நிலையில் தன்னைத் தனியே அனுப்புவது ஆபத்தானது என்று அவர்கள் நினைத்திருக்கலாம். அதனால் அவர்கள் தன்னுடன் வீட்டிற்கு வந்ததுகூட நல்லதற்கு என்றே தோன்றுகிறது.

காரியஸ்தரை வேலையைவிட்டு அம்மா விரட்டினாலும் அவர் திரும்பி வருவார். அழுது புலம்பி முறையிட்டால் அம்மாவின் மனம் இளகிவிடும். சங்குசார் மீண்டும் காரியஸ்தராகி விடுவார்.

ஏற்றிய விளக்கைக் கையிலேந்தி நிலவறை வாசலில் எவ்வளவு நேரமாக யோசனை செய்தபடி நின்று கொண்டிருக்கிறோம்? எதற்காகத் தயங்க வேண்டும்? நிலவறையைத் திறந்து உள்ளே போய் காளி தியானத்தை ஆரம்பிக்க வேண்டியதுதான்.

நிலவிளக்கைத் தரையில் வைத்தபிறகு நிலவறையின் கதவைத் தள்ளித் திறக்கத் தொடங்கிய குமாரன்தம்பிக்கு, பப்பு மாமாவின் கடுமையான எச்சரிக்கைக் குரல் கேட்டது.

"கூடாது. நிலவறையை நீ திறக்கக்கூடாது. அதற்குள் நுழையும் அருகதை உனக்கு இல்லை. திரும்பிப் போய்விடு."

இவ்வளவு கடுமையான குரலில் பப்புமாமா இதற்குமுன் ஒருபோதும் பேசியதில்லை என்பதை குமாரன்தம்பி நடுக்கத்துடன் நினைவு கூர்ந்தான்.

என்ன செய்வது? பப்புமாமாவின் கட்டளையை ஏற்றுக் கொள்வதாக இருந்தால் நிலவறையுடனான தொடர்பை விட்டுவிட வேண்டும். தறவாட்டு மாந்திரீகன், தன் முக்கியமான மாந்திரீகக் களத்தை விட்டுவிடுவதா? ஆராதனா மூர்த்திகளின் இருப்பிடத்தை விட்டு விலகுவதா? நாடு இல்லாத மன்னனைப் போல் மாந்திரீக சாலை இல்லாத மாந்திரீகனாக வாழ்வதா?

அது முடியாது. இந்தக் காரியத்திலும் பப்புமாமாவின் வார்த்தைகளை ஒதுக்கிவிட வேண்டியதுதான். பப்புமாமா



தன்னுடைய குரு என்பது உண்மை. கருடமந்திரங்களை மட்டுமே அவர் தனக்கு உபதேசித்தார். தேவி மந்திரங்களையும் ஹனுமான் மந்திரங்களையும் நாம் நேரடியாகச் சுவடிகளிலிருந்து அல்லவா கற்றுக் கொண்டோம்?

கருடசேவையை நிறுத்தியாகிவிட்டது. தேவிசேவை நடத்துவதற்கு பப்புமாமாவின் அனுமதி எதற்கு?

பப்புமாமா மீதுள்ள பயத்தினால் சமீப காலமாகக் கொட்டாரத்திற்கே போவதில்லை. இப்படிப்பட்ட சூழ்நிலையில் இந்த நிலவறையைக்கூடப் பயன்படுத்த முடியாமல் மாந்திரீகக் கர்மங்களையும் உபாசனைகளையும் எங்கே செய்வது?

எது நடந்தாலும் சரி, அதை ஏற்றுக்கொள்ளும் மனத்துணிவு இருந்தால் மட்டுமே நம் பாதையில் முன்னேற முடியும். மனத்தின் சஞ்சலத்தினால் ஏற்பட்டவைதான் இதுவரையிலான சிக்கல்கள். இனிமேலும் அப்படிப்பட்ட விபத்துகள் தொடரக்கூடாது!

புதியதாகத் தைரியம் பெற்றவனைப்போல் குமாரன்தம்பி நிலவறையின் கதவைத் திறந்தான்.

நிலவிளக்கைக் கையில் எடுத்துக்கொண்டு நிலவறைக்குள் காலெடுத்து வைத்தபோதுதான் அது நிகழ்ந்தது. ஐந்துதலை நாகம் படத்தை விரித்தபடி வாசலுக்கு நேராக, அவனைத் தடுத்தபடி ஒரு காவல்காரனைப் போல நின்றிருந்தது

குமாரன்தம்பியின் கையிலிருந்த நிலவிளக்கு தரையில் விழுந்து உருண்டது. முன்னோக்கி வைத்த காலை அவனைறியாமலே பின்புறமாக இழுத்தான்.

உயிர்மீதுள்ள பயத்துடன் அவன் நிலைவறை வாசலை இழுத்துச் சாத்தினான்.

கேலிக் குரல்கள் ஒன்றாக அணிவகுத்து வந்திருப்பது போல் சிரிப்புச் சத்தம் ஒன்று முழங்கியது. குமாரன்தம்பி நடுநடுங்கினான்.

அது பப்புமாமாவின் உரத்த குரலிலான சிரிப்பு!

# 44

நிலவறையில் நடந்த சம்பவம் குமாரன்தம்பியின் மனத்தை வெகுவாகச் சோர்வு அடையச் செய்தது. மனத்தின் சமநிலையைத் திரும்பப் பெற முயன்ற அவன் சப்ரமஞ்சக் கட்டிலில் நீட்டி நிமிர்ந்து படுத்தான்.

குஞ்ஞுக்குட்டிக்கும் துயரம் தாங்கக் கூடியதாக இல்லை. ஊண் உறக்கத்தைத் தவிர்த்து ஒரு பகலும் ஓர் இரவும் படுத்த படுக்கையாகவே கிடந்த மகனது அருகிலேயே, தரையில் விரித்த பாயில் அவரும் படுத்திருந்தார்.

அம்மாவின் இடைவிடாத ஆறுதல் வார்த்தைகள் மகனது மனச்சோர்வை மாற்றிக் கொண்டிருந்தன.

மாந்திரீகக் காரியங்களுக்காக வந்து கொண்டிருந்த ஆட்களை, மாந்திரீகனுக்கு 'உடல் நலமில்லை' என்று காரணம் கூறித் திருப்பி அனுப்பிக் கொண்டிருந்தனர் காரியஸ்தரும், சமையற்காரியும். காரியஸ்தரான சங்குசாரிடம் குஞ்ஞுக்குட்டி கடுமையாக நடந்துகொள்ளவில்லை. அன்றைய கோபத்தில் வேலையைவிட்டு விரட்டினாலும், அவரை மன்னித்து மறுபடி ஏற்றுக் கொள்ளத் தயங்கவில்லை.

தெளிவான சில தீர்மானங்களுடன்தான் மறுநாள் காலையில் குமாரன்தம்பி படுக்கையிலிருந்து எழுந்தான். மகனது துயரம் ஓரளவு குறைந்திருப்பதைக் கண்ட தாயும் சற்று ஆறுதலடைந்தார். மகனது நடவடிக்கையில் தென்பட்ட பணிவு அவரைப் பெருமிதப்பட வைத்தது.



இனி ஒருபோதும் கருடசேவையோ விஷம் இறக்கும் கர்மத்தையோ செய்வதில்லையென்று குமாரன்தம்பி தீர்மானித்தான். பத்ரகாளி சேவை உட்பட தேவியின் பல்வேறு வடிவங்களை உபாசித்துக் கொண்டு அது தொடர்பான மாந்திரீகக் கர்மங்களை மட்டுமே செய்வது; அதற்குரிய நியாயமான ஊதியத்தை தட்சிணையாகப் பெற்றுக் கொள்வது.

நிலவறைக்குப் பதிலாக வீட்டின் கிழக்குப்புறத்திலிருந்த சர்ப்பக்காவில் ஒரு மண்டபத்தைக் கட்ட வேண்டும். அங்கு தியானங்களையும், பூஜைகளையும் நடத்த வேண்டும். கயிறு மந்திரிப்பது, தாயத்து எழுதுவது போன்றவற்றை பூஜையறை வாசலிலேயே செய்து கொள்ளலாம்.

திருமணத்திற்குப் பிறகு மற்ற பெண்களுடனான தொடர்புகளைக் கத்திரித்துவிட வேண்டும். மட்டுமின்றி கஞ்சா, மது உட்பட எல்லாவற்றையும் நிறுத்திவிட வேண்டும் என்றும் குமாரன்தம்பி உறுதி கொண்டான்.

குமாரன்தம்பி தனது புதிய தீர்மானங்களைக் காரியஸ்தரிடம் தெரிவித்தான். காரியஸ்தருடன் சேர்ந்து கிழக்குக்காவில் மந்திரமண்டபம் கட்டுவதற்கான இடத்தைத் தேர்ந்தெடுத்தான். கல்வெட்டுபவர்களை வரவழைத்து, நீளமும் அகலமும், நல்ல உயரமும் கொண்ட விசாலமான மந்திர மண்டபமொன்றைக் கட்டும் பணியைத் தொடங்குமாறு பொறுப்பை காரியஸ்தரிடம் ஒப்படைத்தான்.

அடுத்ததாக தேங்காய் கிட்டங்கியில் ஸ்தாபிதம் செய்திருந்த யக்ஷியைக் குறித்து யோசித்தான் குமாரன்தம்பி.

யக்ஷியுடன் உறவுகொண்டால் தேவிக்குக் கோபம் ஏற்படும். அந்த யக்ஷியுடன் ஒரேயொரு தடவை மட்டுமே தொடர்பு கொண்டோம். மறுநாளிரவில் அதை பந்தித்துக் கிட்டங்கியில் ஸ்தாபித்தாகி விட்டது. தேங்காய் கிட்டங்கிக்குள் அவளுடன் தொடர்பு கொள்ள வேண்டுமென்று மனம் விரும்பியபோதும், மனக்கட்டுப்பாட்டுடன் அந்த எண்ணத்தைத் தவிர்த்து விட்டோம்.

அதன் பிறகுகூட எத்தனையோ இரவுகளில் யக்ஷியுடன் கூடினால் என்ன என்று தோன்றியதுண்டு. ஆனால், ஒரு தடவைகூட அந்தப் பக்கமாகப் போனதில்லை. இந்த விஷயத்தில் மனக்கட்டுப்பாடு இல்லாமலிருந்தால் இதற்குள், அந்த யக்ஷியுடனான உறவு விட்டுப் பிரிய முடியாத அளவிற்கு இறுகிவிட்டிருக்கும். தான் ஒரு யக்ஷிதாசனாக (யக்ஷியின் ஊழியனாக) மாறவும் செய்திருப்போம். அதிர்ஷ்டவசமாக அப்படி எதுவும் நடக்கவில்லை.

சாதாரணமான மற்ற யக்ஷிகளிலிருந்து மிகவும் மாறுபட்டது. லக்ஷ்மிக்குட்டியின் மரணாந்தரப் பிறவியான இந்த யக்ஷி. இதுநாள் வரையில் யாருக்கும் எந்தவிதமான தொல்லையும் தராத அப்பிராணி யக்ஷி!

யக்ஷிகளில் பலவகையுண்டு. மாந்திரீகரைத் தந்திரமாக நெருங்கி, வசப்படுத்திக் கொண்டு உறவாடி அழிப்பவை, உடலுறவில் மகிழ்ச்சிப் படுத்துபவர்களுக்கு உதவுபவை, மாந்திரீகளோ அல்லது சாதாரணமான மற்றவர்களோ அகப்பட்டால் அவர்களை வசீகரித்து அவர்களுடைய ரத்தத்தை உறிஞ்சுபவை, கந்தர்வர்களை மட்டுமே கணவராகப் பெற்று மனிதர்களுடன் எந்தவிதமான தொடர்புமின்றி வாழும் யக்ஷிகள், தன்னை வணங்குபவர்களுக்கு அனுக்கிரகம் வழங்கும் தேவியைப் போன்ற வல்லமையுள்ள யக்ஷிகள் என்றிப்படி நீளுகிறது யக்ஷிகளின் பட்டியல்.

லக்ஷ்மிக்குட்டியின் வாழ்க்கையில் தன்னைத் தவிர வேறு எந்த ஆடவனுடனும் அவள் தொடர்பு கொண்டதில்லை. அவள் யக்ஷியாக வடிவமெடுத்த பிறகும்கூட தன்னுடன் மட்டுமே தொடர்பு கொண்டிருக்கிறாள் என்றே கருதலாம். ஆனால், தான் ஒரு மாந்திரீகனாவது வரையில் அவள் எதற்காகக் காத்திருந்தாள் என்பது புரியவில்லை. தன்மீது அவளுக்கு உண்மையிலேயே அன்பு இருந்தால் எப்போதோ அவள் தன்னை நெருங்கியிருக் கலாமே? ஒருவேளை மாந்திரீகனாக இருந்த பப்புமாமாவுக்குப் பயந்ததால், அவரது மரணம்வரை தன்னை நெருங்காமல் காத்திருந்தாளோ?

மரணம்வரை அவளைவிட்டுப் பிரிவதில்லையென்று தன்னைச் சத்தியம் செய்ய வைத்ததன் பின்னணிகூட அவளது களங்கமற்ற



அன்புதானோ? அப்படியானால் தான் திருமணம் செய்து கொள்வதை அவள் தாங்கிக் கொள்வாளா?

தலையும் வாலும் புரியாத ஒரு விஷயத்தைக் குறித்தல்லவா வீணாக யோசித்துக் கொண்டிருக்கிறோம்? எப்படி இருந்தாலும் தற்சமயம் அவள் தேங்காய் கிட்டங்கியில் இருக்கிறபடி பலமிழந்தவளாகவே இருக்கட்டும். அவ்வப்போது வந்து பார்த்துக் கொள்வதாக அவளுக்கு வாக்குறுதி அளித்ததை நிறைவேற்ற முடியாததில் அவளுக்கு வருத்தமும் கோபமும் இருக்கக் கூடும். பரவாயில்லை. தன்மீது அவளுக்குச் சுயநலமற்ற அன்பு இருப்பது உண்மையானால், தன் சூழ்நிலையைப் புரிந்துகொண்டு, மன்னிக்கட்டும்!

எப்படி இருந்தாலும் தான் ஒரு தேவிதாசனாக மாறுகிறோம். இனிமேல் தான் வாழ்க்கையில் ஆராதிப்பதும் அபயம் தேடி அண்டுவதும் தேவியை மட்டுமே! மகேஸ்வரியான தேவியை மட்டும். துர்க்காவான பத்ரகாளியை மட்டும். தேவி! தேவி! மனத்தில், வார்த்தைகளில், சிந்தனைகளில் ஏன் மூச்சுக் காற்றில்கூட தேவி மட்டுமே இனி இடம்பெறுவாள்!

சக்தியே வடிவான தேவிக்கு எப்படிப்பட்ட வடிவங்கள் எல்லாம் உள்ளன? எப்படிப்பட்ட பாவபேதங்கள் உள்ளன?

மகாமாயையான தேவியல்லவா பிரபஞ்ச மாதா? முன்னொரு காலத்தில் மஹாவிஷ்ணு சின்னஞ்சிறு குழந்தையாக ஆலிலையில் படுத்திருந்தபோது, அவருக்குத் தன் பிறப்பைக் குறித்த ரகசியத்தை அறிய வேண்டுமென்ற ஆசை ஏற்பட்டது. அப்போது ஆகாயத்தி லிருந்து ஓர் அசரீரி ஏற்பட்டதாகத்தானே கதை?

*ஸர்வக ல்விதமே வாஹம்*
*நாந்ய தஸ்தி ஸனாதனம்*

'இதெல்லாமே நான்தான். என்னைத் தவிர ஸனாதனமாக வேறெதுவுமில்லை!' என்று பொருள்படுகிற இந்த அசரீரியைக் கேட்டு வியப்புடன் படுத்துக் கிடந்த மஹாவிஷ்ணுவின் முன்பாகத் தேவி பிரத்தியக்ஷப்பட்டார் என்று இந்துக்களின் புராணம் கூறுகிறது.

நான்கு திருக்கைகளுடன் சங்கு, சக்கர, கதை, பத்மாயுதங்களுடன் திவ்ய ஆடையாபரணங்களுடன், ரதி, பூதி, புத்தி, மதி, கீர்த்தி, த்ருதி, ஸ்மிருதி, சிரத்த, மேதா, ஸ்வாஹா, க்ஷுத, நித்ரா, தயை, கதி, துஷ்டி, புஷ்டி, பொறுமை, வெட்கம், ஜ்ரம்ப, தந்த்ரீ போன்ற சக்திகளின் வெளிப்பாடுகளாகத்தானே பிரபஞ்சமாதாவான தேவி காட்சியளித்தாள்.

தேவி வடிவமற்றவள் என்றாலும் தேவகாரியங்களுக்காக பலவித வடிவங்களை ஏற்றுக் கொள்கிறவள். நிர்க்குணவதி என்றாலும், நற்குணவதியாக விளங்குகிறாள். பல வடிவங்கள், பல வேடங்கள், பல்வேறு கர்மங்களையும் நோக்கமாகக் கொண்டே தேவிக்கு ஏற்பட்டதாகவும், பல பெயர்கள் தோன்றியதாகவும் தேவிபாகவதம், பஞ்சம காண்டத்தில் கூறப்பட்டுள்ளது.

துர்க்காவும், லலிதாவும், லக்ஷ்மியும், பத்ரையும், பைரவியும், வாராஹியும், தாராவும், ருத்ராணியும், பகளாமுகியும், அன்னபூர்ணேஸ்வரியும், இந்திராணியும், பார்வதியும் -எல்லாமே தேவியின் வேறுவேறு வடிவங்களும் பெயர்களும்தானே.

தேவியின் வடிவங்களிலேயே மிகவும் உக்கிரமான வடிவமுடையதல்லவா பத்ரகாளி? பார்வதி என்கிற ஸதியின் வடிவமல்லவா பத்ரகாளி?

தக்ஷ யாகத்தின்போது சிவனது மனைவியான ஸதி (தாக்ஷாயணி) நெருப்பில் எரிந்த விவரமறிந்து கோபமடைந்த சிவன் பாய்ந்தோடி, தனது ஜடையைப் பிடித்து இழுத்துத் தரையிலடிக்கவும் செய்தார். அப்போது பத்ரகாளியென்றும், வீரபத்ரை என்றும் பேர் பெற்ற இரண்டு மூர்த்திகள் உத்பவித்தன. இப்படி ஸதியின் வடிவமாகப் பத்ரகாளி பிறப்பெடுத்ததாக தேவி பாகவதத்தின் ஏழாவது காண்டத்தில் கூறப்பட்டுள்ளது.

தேவியின் அம்சங்களான பல மூர்த்திகளையும் உபாசித்து ஸித்தி பெறத் தன்னால் முடிந்திருக்கிறது. பத்ரகாளியை மட்டும் இதுவரை உபாசித்ததில்லை. கொடியவர்களை நிக்கிரஹம் செய்ய (தண்டிக்க) பத்ரகாளியைவிடச் சக்தி வாய்ந்த வேறொரு தேவி வடிவம் இல்லை என்பது இப்போதுதான் நினைவுக்கு வருகிறது.



எப்படிப்பட்ட துர்த்தேவதையும் பத்ரகாளியின் பெயரைக் கேட்டவுடனே அகன்று விடும். தூரக்காட்டு பட்டத்திரியைச் சந்திக்க பத்ரகாளி சேவைதான் பலன் மிக்கது.

புத்தூர் தறவாட்டின் மந்திரஸித்திகளை அழிப்பேன் என்று வீம்பு பேசிய பட்டத்திரியிடம் தான் உறுதியாகக் கூறிய பதில். பதிலுக்கு அவரைப் பைத்தியமாக்குவேன் என்பதுதான். அதை நிறைவேற்றுவதுதான் என் வாழ்க்கையின் இலட்சியம். பத்ரகாளியின் உதவியுடன் நான் அதை நிறைவேற்றுவேன்.

பிரம்மச்சரியத்தை இழந்துவிட்டதால் தன்னுடைய மந்திர ஸித்திகளே அழிந்துபோய்விட்டதாக நினைத்துக் கொண்டிருப் பவர்களை ஆச்சரியப்படுத்தும் விதமாக, பத்ரகாளி பக்தனான தான் மிகவும் கடுமையான மாந்திரீகப் பிரயோகங்களை நடத்த வேண்டும்.

பாம்பு கடித்தவர்களை விஷக்கடியிலிருந்து காப்பாற்ற முடியவில்லை என்பது ஒரு மாந்திரீகனின் இயலாமையைக் குறிப்பதாக எவரும் கருதமாட்டார்கள். புகழ்பெற்ற பல மாந்திரீகர்களுக்கு கருடசேவையே வசமில்லை. அதேபோல் விஷக்கடிவைத்தியம் செய்யும் பல மாந்திரீகர்களுக்கு வேறு மந்திரங்கள் எதுவும் தெரியாது.

எப்படி இருந்தாலும் கருடனுக்கு, பத்ரகாளியின் அளவிற்குச் சக்தி இருக்காது. இருந்தால்தான் என்ன? தனக்கு இனிமேல் கிருஷ்ணப்பருந்தின் உதவி தேவையில்லை. தான் பத்ரகாளி சேவகனாக மாறுகிறோம். இப்போதுள்ளதைவிட மிகவும் புகழ்பெற்ற மந்திரவாதியாக நிச்சயம் மாறியே தீருவேன்!

திருவிலஞ்ஞால் தேவி கோயிலில் பிரதிஷ்டையாகி இருப்பது சாக்ஷாத் பத்ரகாளிதான். குழந்தைப் பருவத்தில் அம்மாவுடன் அங்கு சென்று தரிசனம் பெற்று வணங்கியதுண்டு.

இன்று மாலை நேரத்தில் திருவிலஞ்ஞால் கோயிலுக்குச் சென்று தீபாராதனை கண்டு வணங்க வேண்டும். சங்குசாரைத் துணைக்கு அழைத்துச் செல்ல வேண்டியதுதான்.

"சங்குசாரே"– குமாரன்தம்பி அழைத்தான்.

முன்பாக வந்த காரியஸ்தரிடம் குமாரன்தம்பி கூறினான்: "நாம் இன்னிக்கு சாயந்திரம் திருவிலஞ்ஞால் கோயிலுக்குப் போய் சாமி கும்பிட்டு வரணும்."

"மாட்டுவண்டியிலயா, நடந்தா?"– காரியஸ்தர் விசாரித்தார்.

"தீர்த்தயாத்திரைதானே? நடந்தே போகலாம். நாலும் நாலும் எட்டு நாழிகைகள் (மைல்கள்) உங்களால நடக்க முடியாதா என்ன?"

"தாராளமா நடக்கலாமே! ஒரு பேச்சுக்குக் கேட்டேன்."

"மண்டப வேலை எந்தக் கட்டத்தில இருக்கு?"

"நாளை மறுநாள் சாயந்திரம் நீங்க மண்டபத்தில பூஜை செய்யலாம். மண்டபத்துக்குத் தேவையான பொருள்கள் எல்லாம் இன்னிக்கு ராத்திரி வந்து சேர்ந்துடும். பொழுது விடிஞ்சதும் வேலை ஆரம்பமாகிடும்."

எதுவோ ஞாபகம் வந்தவனாக குமாரன்தம்பி கூறினான்: "கல்யாணத்துக்கு இன்னும் ஒரு வாரம்தான் இருக்கு. கல்யாணத் திற்குப் பிறகுதான் மண்டபத்தில பூஜை செய்யப் போறேன்."

"உங்க தியானம் அதனால தடைப்படாதா?"

"நீங்க கேட்ட கேள்வியோட அர்த்தம் எனக்குப் புரியுது. பத்ரகாளி சேவைக்கு பிரம்மச்சரியம் அவசியமில்லை. அதெல்லாம் கிருஷ்ணப்பருந்தை சேவிக்கும்போது மட்டும்தான். ஹனுமான் சேவைக்குக்கூட தாம்பத்திய வாழ்க்கையைத் தொடர்ந்து கொண்டே பூஜை செய்யலாம். அதுதான் தேவிக்கும் மிகவும் விருப்பமானதுங்கூட." – குமாரன்தம்பியின் உதட்டில் புன்னகையொன்று விரிந்து மலர்ந்தது.

மாலை நேரமானபோது காரியஸ்தருடன் திருவிலஞ்ஞால் கோயில் முற்றத்தை அடைந்த குமாரன்தம்பி வியப்படைந்தான். ஏராளமான சிறிய காவுகள் சுற்றிலும் சூழ்ந்திருக்க, அதன் மத்தியில் ஐஸ்வரியத்தின் அடையாளம் போல் கம்பீரமாகத் தலை நிமிர்ந்து நின்றுகொண்டிருந்தது காளி கோயில். கேரளச் சிற்பக்கலையின் சிறப்பைப் பறைசாற்றும் கருவறை! சிவப்புப் பட்டுடுத்தி தரிசனம் தந்துகொண்டிருந்தது பஞ்சஉலோகத்தாலான பத்ரகாளியின் விக்கிரகம்!



பக்த ஜனப்பெருக்கைக் கண்டு குமாரன்தம்பி ஆச்சரியப்பட்டான். "சங்குசாரே! இன்னிக்கு இந்தக் கோயில்ல ஏதாவது உற்சவமா? ஏன் இவ்வளவு கூட்டம்?"

"தென்புறமாப் பாருங்க. பந்தல் தெரியலையா? தியாட்டு விழாவுக்கான பந்தல் அது. நாம வந்திருக்கிறது நல்ல நேரத்திலதான். பத்ரகாளி கோயிலில் தியாட்டு விழா பார்த்து வணங்குறது பெரிய பாக்யமும் கூட!"

கோயிலின் தென்புறத்தில் ஒரு பெரிய பந்தல். குருத்தோலை களாலும், சிவப்புநிறத் துணிகளாலும் அலங்கரிக்கப்பட்ட பந்தலில் ஏழு திரிகளுடன் பிரகாசமாக எரிந்துகொண்டிருக்கும் பிரம்மாண்டமான நிலவிளக்கு! தியாட்டுவிழாவிற்குத் தயாராகிக் கொண்டிருக்கும் வீரபக்தர்கள். பந்தலுக்கு சுற்றும் தீப்பந்தங்களை ஏந்தி நிற்கும் இளைஞர்கள்.

குமாரன்தம்பி பந்தலை நெருங்கி நின்று கைகூப்பித் தொழுதான். சிறுவனாக இருந்தபோது வீட்டிற்கு அருகிலிருந்த கோலோத்து பத்ரகாளி கோயிலில் நடந்த தியாட்டு விழாவைப் பார்த்திருக்கிறோம். அதற்குப் பிறகு இப்போதுதான் இந்த விழாவைப் பார்க்கும் வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

வாத்திய மேள ஒலி உயர்ந்தது. "தாயே பத்ரகாளி" என்கிற பக்தஜனங்களின் அழைப்பு, கோயிலின் சுற்றுப்புறத்தையே பக்தியால் நிறைத்தது.

பூசாரி, தேவி விக்கிரகத்தை எழுந்தருளச் செய்து பந்தலில் அமைக்கப்பட்டிருந்த களத்தில் கொண்டுவந்து வைத்தார். தாள மேளங்கள்! பெண்களின் எழுப்பிய குலவைச் சத்தம்! எங்கு பார்த்தாலும் சரணக் குரல்கள்!

தியாட்டுக் கலைஞர்கள் தேவி ஸ்தோத்திரத்தை ராகத்துடன் பாடத் தொடங்கினர்:

*"காரிருள் நிறமொத்த திருமுடி கைதொழுகிறோம்*
*கனல் கண்களும், திருநெற்றித் திலகத்தையும்*
*கைதொழுகிறோம்*

அலைபாயும் விழிகளும், கன்னம், மூக்கையும்
தொழுகிறோம்
வளைந்த கோரைப்பல்லுடன், நாக்கையும் தொழுகிறோம்
வட்டமாய் துலங்கும் திருமுகத்தைத் தொழுகிறோம்
காதுக்குண்டலங்களைத் தொழுகிறோம்
மாரிலலையும் வளர்தாலியையும் மணிமாலையையும்
தொழுகிறோம்
மாமேரு போலிருக்கும் முலைகளைத் தொழுகிறோம்
தாருகன் தலையை வெட்டியெடுத்த கரங்களைத்
தொழுகிறோம்
தங்க வாளையும், அழகு சூலத்தையும் தொழுகிறோம்
சன்னமான ஆலிலை வயிற்றைத் தொழுகிறோம்
சிவப்புப் பட்டுடையாளைத் தொழுகிறோம்
தும்பிக்கை போன்ற திருத்தொடைகளைத் தொழுகிறோம்
பட்டின் மேல் பொதிந்த பொன் ஒட்டியாணத்தைத்
தொழுகிறோம்
குவளை மலரொத்த விழிகளைத் தொழுகிறோம்
கைகால் விரல்களைத் தொழுகிறோம்
கோபத்திலாடும் திருநடனத்தைத் தொழுகிறோம்
குலுங்கும் ஒலியெழுப்பும் தண்டைகளைத் தொழுகிறோம்
முடியிலிருந்து அடிவரை தொழுகிறோம்
கொடுங்கல்லூர் உறையும் பகவதியே தொழுகிறோம்."

பாட்டு முடிவடைந்ததும் தீபாராதனை நடைபெற்றது. தீபாராதனைக்குப் பிறகு தேவி விக்கிரகம் கோயிலுக்குள் கொண்டு போகப்பட்டது. தொடர்ந்து பந்தலுக்குள் களத்தை அழித்தபடி தீயாட்டு என்கிற தீமிதி தொடங்கியது.

தாருக வதம் கதை. வேடங்களைப் பூண்டு நடனமாடியவர்கள் தீயாட்டுக் கலைஞர்கள்.

பத்ரகாளியின் வேடம் சிறப்பாக இருந்தது. சபையின் முன்புறம் உட்கார்ந்த குமாரன்தம்பி தீயாட்டைக் கவனித்தான். தாருகவதம் குறித்து பத்ரகாளி, பரமசிவனிடம் சைகை காட்டி விளக்கியது அவனைக் கவர்ந்தது. பாட்டும் நடனமும் இதில் கதகளி நாட்டியத்தைவிட நன்றாக அமைந்திருப்பதாக அவனுக்குத் தோன்றியது.



விளக்கில் பந்தம் கொளுத்தி பலிஉழிச்சல் நடந்ததுடன் தீயாட்டச் சடங்குகள் முடிவடைந்தன.

பக்தர்கள் கலையத் தொடங்கினர். சங்குசாரைத் தேடிப் பிடித்து குமாரன்தம்பியும் கிழக்குப்புறமாக நடந்தான். கோயிலின் கிழக்குப்புறத்தில் விசாலமான முற்றம் முடிவடையும் பகுதியில் ஒரு பெரிய மேடையிருந்தது. மேடைக்கு மறுபுறம் ரோடு.

குமாரன்தம்பியும் சங்குசாரும் மேடையின் முன்புறமாக நடந்து ரோட்டை நெருங்கும்பொழுது, யாரோ தன்னைப் பின்னாலிருந்து அழைப்பதாக குமாரன்தம்பிக்குத் தோன்றியது. திரும்பிப் பார்த்தான்.

"டேய் மந்திரவாதீ, கருடனை விட்டுட்டு பத்ரகாளியைப் பிடிச்சுக்கிறதுக்கு வந்திருக்கிறயா? கருடனைவிட மோசமானவள் காளி... அதிகமாக நெருங்காத!" மேடையின் ஒரு மூலையில் கூனிக்குறுகி உட்கார்ந்திருந்த பெரியவர் உரத்த குரலில் கூறினார்.

'முன்பின் பழக்கமில்லாத இந்தக் கிழவன் யார்? இந்த மனிதனுக்கு ஞானதிருஷ்டி உண்டா என்ன?' பதற்றத்துடன் இருந்தாலும் கம்பீரம் நிறைந்த அந்த ஆண்மைக் குரல் தன் மனத்தில் கடுமையான சலனங்களை ஏற்படுத்தவே செய்கிறது. சிந்தனையிலாழ்ந்த குமாரன்தம்பி மேடையை நோக்கி நடந்தான்.

"போகாதீங்க" குமாரன்தம்பியைத் தடுத்தபடி சங்குசார் கூறினார்: "அந்த ஆள் ஒரு பைத்தியம். தீயாட்டு நடந்தபோது நீங்களுக்கு மத்தியில அலைஞ்சு திரிஞ்சு பத்ரகாளியை அசிங்கமா திட்டிக்கிட்டிருந்தார். வாங்க, நாம போகலாம்.?"

காரியஸ்தருடன் மீண்டும் ரோட்டை நோக்கி நடக்கத் தொடங்கிய குமாரன்தம்பியின் காதில் பெரியவரின் அட்டகாசமான சிரிப்புச் சத்தம் கேட்டது. தொடர்ந்து உரத்த குரலில் பேசுவதும் கேட்டது: "இப்போ நீ போகலாம். ஆனா,

சீக்கிரமாவே நீ என்னைத் தேடி வருவ" கூடவே இளக்காரமான ஓர் உறுமலும் கேட்டது.

'யார் இந்தக் கிழவன்? வெறும் ஒரு பைத்தியமாக இருக்க முடியாது. தன்னுடைய மனத்தில் காரணம் புரியாத ஒருவித ஈர்ப்பு அவர் மீது ஏற்படுவதாகத் தோன்றவில்லையா?' சிந்தனைப் பளுவுடன் வீட்டை நோக்கி நடக்கும்போதும் குமாரன்தம்பியின் காதுகளில் அந்த வயதானவரின் வார்த்தைகள் முழக்கத்துடன் ஒலித்துக் கொண்டிருந்தன. "இப்போ நீ போகலாம். ஆனா, சீக்கிரமாவே நீ என்னைத் தேடி வருவ."

## 45

கர்ணப் பிசாசினியின் உதவியுடன் எல்லா விவரங்களையும் தெரிந்துகொண்ட ராமன் பட்டத்திரிக்கு ஏமாற்றம் தோன்றியது. தன்னுடைய நோக்கம் வெற்றிபெற இன்னும் சிலகாலம் காத்திருக்க வேண்டும்.

கொச்சுபுத்தூர் வீட்டின் சுற்றுப்புறங்களில் அலைந்து கொண்டிருக்கிறது தூமாவதி. வீட்டை நெருங்க தூமாவதி தயங்குகிறது. வீட்டைச் சுற்றி ஏராளமான கிருஷ்ணதுளசிச் செடிகள் வளர்ந்திருந்தன. நடுமுற்றத்திலிருந்த துளசிமாடத்திலும் துளசிச் செடிகள். எனவே வீட்டிற்குள் நுழைய தூமாவதி பயப்படுகிறாள்.

வீட்டின் வெளியில்தான் எங்காவது தாக்குதல் நடத்த முடியும். மகேஸ்வரிதங்கச்சி, கொச்சுராமன் ஆகியோரது உடம்பில் தாயத்துகள் இருந்ததால் அவர்களைத் தூமாவதியால் நெருங்க முடியாது. ஆனால், ராஜம்மாவின் உடலிலிருந்த தாயத்து தொலைந்து விட்டிருக்கிறது. சொன்னால் பாட்டி கோபித்துக் கொள்ளப் போகிறார் என்பதால் அவள் சொல்லவுமில்லை. ராஜம்மா எங்காவது தனியாக அகப்படமாட்டாளா என்று எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறது தூமாவதி.



வடயக்ஷிணியும் செயல்பட முடியாமலிருக்கிறது. புத்தூர் வீட்டு எல்லைக்குள் மற்றொரு யக்ஷி தங்கியிருப்பதால் அந்த வீட்டிற்குள் நுழைய வடயக்ஷிணி தயாராக இல்லை.

புத்தூர் வீட்டின் கிழக்குப் புறமிருந்த நெல்வயலில் ஒரு வெள்ளிக்கிழமை நாளன்று குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியைத் தாக்க வடயக்ஷிணி திட்டமிட்டது. தக்க சமயத்தில் கிருஷ்ணப்பருந்து பறந்து வந்து வடயக்ஷிணியைத் துரத்தியது. அந்தச் சம்பவத்திற்குப் பிறகு புத்தூர் வீட்டின் மேற்குப் புறமிருக்கும் குறுகிய பாதையிலேயே அது சுற்றிக் கொண்டிருக்கிறது.

வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே வடயக்ஷிணி, யக்ஷிக்காவை விட்டு வெளியே வருவது வழக்கம். நள்ளிரவானதும் திரும்பவும் செய்யும். இந்த இடைப்பட்ட நேரத்திற்குள் குமாரனோ, அவனது தாயோ அதன் பிடிக்குள் அகப்பட்டால்தான் உண்டு.

குமாரனது ஸித்திகள் எல்லாம் ஏறத்தாழ அழிந்துபோனது மாதிரிதான். அவனுடைய ஞானதிருஷ்டி சுத்தமாக மறைந்து விட்டது. ஹனுமான் அவனை ஒதுக்கிவிட்டது. கருடனும் கைவிட்டுவிட்ட மாதிரிதான். வீட்டு எல்லைக்குள் யக்ஷியைக் குடியமர்த்தி இருப்பதால் தேவியும் அவனிடமிருந்து விலகத் தொடங்கிவிட்டார். விரைவிலேயே தேவி முற்றிலும் அவனைத் தவிர்த்துவிடக் கூடும். குமாரனது மந்திரப் பிரயோகங்கள் எல்லாம் தோல்வியில்தான் முடியும். தன்னைப் பைத்தியக்காரனாக்குவதாக மிரட்டிய புத்தூர் மாந்திரீகன்தான் கடைசியில் பைத்தியமாகப் போகிறான்.

இறந்துபோன பப்புத்தம்பியின் ஆத்மா அவ்வப்போது தறவாட்டைக் காப்பாற்ற வருவதுதான் ஒரே ஒரு தொல்லை. சகோதரனது சமயோசிதமான முன்னெச்சரிக்கைதான் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியை, யக்ஷியின் ஆபத்து வளையத்திலிருந்து மீட்டெடுத்தது. அந்தக் கிழவியின் மனமுருகிய கருடப் பிரார்த்தனைக்குப் பலன் கிடைத்தது. யக்ஷி மாயமாக மறைய முற்படுவதற்குள், கருடன் அவளைத் தாக்கத் தொடங்கிவிட்டது. மிகுந்த சிரமத்துடன்தான் அன்று வடயக்ஷிணி தப்பிக்க முடிந்தது.

காளி பூஜையைத் தொடங்கும் முயற்சியில் ஈடுபட்டிருக்கிறான் குமாரன். புத்தூர் சர்ப்பக்காவில் புதியதாக மந்திர மண்டபமொன்றைக் கட்டியிருக்கிறானாம்!

பத்ரகாளியின் உதவியுடன் தன்னை அழித்துவிடலாம் என்பது அவனது நோக்கமாக இருக்கவேண்டும். ஆனால், பத்ரகாளியை மகிழ்ச்சியடைய வைத்து மந்திரஸித்தி பெறலாம் என்கிற அவனுடைய கனவு நிறைவேறப் போவதில்லை. அவனுடைய குருவும் தாய்மாமனுமான காரணவரின் ஆத்மா அவனைச் சபித்துவிட்டிருக்கிறது. குரு சாபத்தை ஏற்ற ஒருவனை எந்த ஓர் உபாசனா மூர்த்தியும் ஏற்றுக் கொள்ளவோ அனுக்கிரகிக்கவோ மாட்டார்கள் என்கிற உண்மையை, முட்டாளான குமாரன் தெரிந்து கொள்ளவில்லை.

பாம்பை வரவழைத்து விஷம் இறக்கியதைத் தொடர்ந்து அந்தப் பாம்பு புத்தூர் தறவாட்டு நடைக் கல்லிலேயே தலையை அறைந்து சாகவில்லையா? சர்ப்ப சாபம் ஏற்ற தறவாடு தகர்ந்து போகும் என்கிற காரியத்தில் சந்தேகமுண்டா என்ன?

ஒரு வழியில் கருடனுடைய கோபமும் மற்றொரு வழியில் சர்ப்ப சாபமும் குமாரனை நோக்கிப் பாய்ந்து வரப் போகிறது. அவனுடைய எல்லா மாந்திரீக ஸித்திகளும் மிச்ச மீதமில்லாமல் அழிந்து விடும். அவனுடன் அந்தத் தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியம் முடிவடைந்து விடும்.

சற்றுத் தாமதமானாலும் தன்னுடைய லட்சியம் எப்படியும் வெற்றி பெற்றுவிடும். சூரக்காட்டுப் பட்டத்திரியின் வல்லமையை குமாரனும் குடும்பத்தாரும் உணரட்டும்!

விடிந்தும் விடியாத பொழுதில் மந்திர மண்டபத்திற்குள் நுழைந்து கர்ணப்பிசாசினியைப் பிரத்தியக்ஷப்படுத்தினோம். வடயக்ஷிணி, தூமாவதி ஆகிய இருவரின் நடவடிக்கைகள் குறித்தும், குமாரனது திட்டங்களையும் வலது காதில் சொல்லித் தந்த பிறகே கர்ணப்பிசாசினி மறைந்தது.

மத்தியானம் ஆகிவிட்டிருக்கிறது. இல்லத்தில் பார்வையாளர்கள் வந்திருப்பார்கள். இனி அவர்களைச் சந்திக்க வேண்டும்.



ரக்ஷிக்காவு மந்திர மண்டபத்திலிருந்து எழுந்த பட்டத்திரி இல்லத்திற்குப் புறப்பட்டார். அவர் வடயக்ஷிணி மந்திரத்தை உருவிட்டபடி நடந்தார்.

வீட்டு முற்றத்தில் ஒரே ஒரு பார்வையாளர் மட்டுமிருந்தார்! பட்டத்திரிக்கு ஏமாற்றமாக இருந்தது.

வெள்ளிக்கிழமையானதால் பார்வையாளர்கள் நிறையப் பேர் இருப்பார்கள் என்று நினைத்தார். குமாரனது மாந்திரீக சக்தி குன்றிய பிறகும் தன்னுடைய தொழில் அபிவிருத்தி அடையவில்லை!

முற்றத்தில் காத்திருந்தவன் மணிமங்கலம் கேசவன் நாயரது மருமகனான ஸ்ரீகண்டன்.

"யாரு ஸ்ரீகண்டா? நீ இந்த வழியையே மறந்துட்டேன்னுல்ல நினைச்சேன்" பட்டத்திரி குசலம் விசாரித்தார்.

"வழி மறக்கலை திருமேனி. உங்களோட பிரயோகங்களால எந்தவிதமான பலனும் ஏற்படலையே?"

"என்ன செய்யலாம் ஸ்ரீகண்டா? பானுமதியோட உடம்பில ரக்ஷஸை ஏவினா, அவளைக் கல்யாணம் செய்ய யாரும் வரமாட்டாங்க... அதனால உனக்கே அவளைக் கல்யாணம் செஞ்சு குடுப்பாங்கன்னு நினைச்சேன். உங்க கல்யாணம் நடந்தபிறகு ரக்ஷஸைத் திரும்ப அழைச்சுக்கிறது என் திட்டம். நம்முடைய போதாத காலம் அந்த குமாரன் ரக்ஷஸை விரட்டிவிட்டான். பரவாயில்லை, கவலைப்படாதே! குமாரனது மாந்திரீக ஸித்திகள் எல்லாம் அழியத் தொடங்கிடுச்சு."

"அவரோட மந்திரஸித்தி அழியறதால எனக்கென்ன லாபம்? பானுமதி அவருக்கு மனைவியாகப் போறாளே? அவங்க கல்யாணத்திற்கு இன்னும் மூணுநாள்தான் இருக்கு."

சற்று நேரம் யோசனையில் ஆழ்ந்தபடி முற்றத்தில் நின்றிருந்த பட்டத்திரி திண்ணைக்கு வந்தார். "வா ஸ்ரீகண்டா! இப்படி வந்து உட்கார். நாம அதுக்கு ஒரு வழி செய்யலாம்" ஸ்ரீகண்டனை அழைத்தார்.

பிரம்பு நாற்காலி ஒன்றில் ராமன் பட்டத்திரியும், அருகிலிருந்த பெஞ்சில் ஸ்ரீகண்டனும் உட்கார்ந்தனர்.

பட்டத்திரி யோசிக்கத் தொடங்கினார். பானுமதியின் உடம்பில் ரக்ஷஸை ஏவி விடுவதற்கு, ஸ்ரீகண்டனிடமிருந்து நல்ல ஒரு தொகையைப் பெற்றோம். ஆனால், அவளை ரக்ஷஸ் பீடித்த அன்றைய தினமே குமாரன் அதை விரட்டி விட்டான்! அவளது அழகைக் கண்டு பிரமித்துப்போன மாந்திரீகன் அவளைத் திருமணம் செய்யத் தீர்மானித்தான். அவனது மாந்திரீகச் சக்திக்குப் பயந்து கேசவன் நாயர் தன் ஒரே மகளைத் திருமணம் செய்து கொடுக்கச் சம்மதித்தார்.

ஸ்ரீகண்டனுக்கு உதவ வேண்டியது தன் கடமை. அது மட்டுமா? தன்னுடைய பிறவி எதிரியான புத்தூர் மாந்திரீகன் பானுமதியைப் போன்ற ஒரு பேரழகியைத் திருமணம் செய்துகொள்வதைத் தன்னால் எப்படித் தாங்கிக்கொள்ள முடியும்?

குமாரனது கல்யாணத்தை எப்படித் தடுக்கலாம்? வசியம் மூலம் பானுமதியை அடைய ஸ்ரீகண்டனுக்கு உதவுவது மட்டும்தான் இப்போதுள்ள ஒரே வழி!

பட்டத்திரியின் முகம் தெளிவடைந்தது. எதிர்பார்ப்பு நிறைந்த பார்வையைப் பட்டத்திரியின் முகத்தில் பதித்துக் கொண்டிருந்த ஸ்ரீகண்டனை நோக்கி ஒரு புன்சிரிப்பைச் சிந்திய பட்டத்திரி, கனமான குரலில் பேசினார்: "அருமையான ஒரு வசியப் பிரயோகத்தை நடத்தி விடலாம். அதாவது பானுமதி உடனே உன் பின்னால ஓடி வந்துடக் கூடிய அளவுக்கான வசியப் பிரயோகம்!"

"எப்படியானாலும் சரி, அவ எனக்குக் கிடைக்கணும். அதுக்காக நீங்க கேட்குற பணத்தைத் தர நான் தயார்."

"பணமெல்லாம் அப்புறம். நான் சொல்லுறதை முதல்ல கவனி. கேட்கும்போது சாதாரணமாத்தான் தோணும். ஆனா, அது செய்யுற வேலை அசாத்தியமா இருக்கும்."

"சொல்லுங்க திருமேனி?"



"நூத்தியோரு செக்கிப்பூ, நூத்தியோரு கைக்குத்தலரிசி, நூத்தியோரு நெல்பொரி, நூத்தியொரு ஜடகுசுமம், மைலோசிகம், வெள்ளைச் செக்கிச் செடியோட வடபுறம் வளைந்த வேர் எல்லாத்தையும் ஒண்ணாப் போட்டு அரைக்கணும். *'ஓம் பொன்னும் பூவும் மகாலக்ஷ்மியும், என் முகத்து வசிக்க ஸ்வாஹா'* என்கிற மந்திரத்தை நூத்தியோரு தடவை ஜபிச்சபடி அரைக்கணும். அரைச்செடுத்த விழுதை சின்னச் சின்ன உருண்டைகளாக்கி நிழலில் உலர்த்தணும். பிறகு ஒரே ஒரு உருண்டையை எடுத்துப் பானுமதியை மனத்தில் நினைச்சபடி நீரில் குழைத்து நெற்றியில் பொட்டு வைத்துக்கொள். அப்புறம் நேரா அவளைப் பார்த்துப் பேசணும். அந்த வினாடியிலேயே அவள் உன்கூட ஓடி வந்துடுவாள். இதை உடனடியா உன்னால செய்ய முடியுமில்லையா?"

"திருமேனி, நீங்க ஒரு விஷயத்தை யோசிக்கணும். அவளோட வீட்டுக்குப் போனால்தான் அவளைப் பார்க்க முடியும். மாமா என்னை வீட்டுக்குள்ளேயே விடமாட்டார். அவளை வீட்டுக்கு வெளியிலே விடமாட்டார். அப்புறம் நான் எப்படி அவளைப் பார்த்துப் பேசுறது? அவளைப் பார்க்காமல், அவளுடன் பேசாமல் செய்யுற மாதிரி ஏதாவது வழி இருந்தா சொல்லித் தாங்க."

சற்று நேரம் யோசித்த பட்டத்திரி கூறினார்: "சரி, வேறொரு வித்தை சொல்கிறேன். நான் ஒரு வெத்தலையை மந்திரம் ஜபிச்சுத் தர்றேன். இன்னிக்கு வெள்ளிக் கிழமையல்லவா? நள்ளிரவு சமயத்தில இந்த வெத்தலையை பாக்குடன் சேர்த்துப் போட்டுக் கொள். அத்தி, திருதாளி, ரத்தசந்தனம் (செஞ்சந்தனம்) எல்லாத்தையும் சமஎடை எடுத்து உடலின் ரகசிய பகுதிகளில் தடவிட்டு, உடலில் நூல்துணி இல்லாம பானுமதியின் வீட்டுக்குத் தென் புறமாகச் சென்று நில். மனத்தில் அவளையே தியானித்த படி இரு. கதவைத் திறக்கும் சத்தம் கேட்கும். திரும்பிப் பார்க்காம தைரியமா நீ உன் வீட்டிற்குத் திரும்பு. பானுமதி உன் பின்னாலயே வர்றாளா இல்லையா பார்!"

"இது பலிக்கக்கூடிய வித்தைதானா?"

"இதென்ன கேள்வி ஸ்ரீகண்டா? என்னோட வசியப் பிரயோகம் இதுவரை தோல்வியடைஞ்சதே கிடையாது!"

பட்டத்திரி ஒரு வெற்றிலையை எடுத்து ஜபிக்க ஆரம்பித்தார். திடுமென்று ஜபத்தை நிறுத்திவிட்டுக் கேட்டார்: "பானுமதியின் நக்ஷத்திரம் பூரட்டாதிதானே?"

"ஆமாம் திருமேனி."

"உன்னோடது ஆயில்யம்?"

"ஆமாம்."

மறுபடியும் ஜபிக்கத் தொடங்கிய பட்டத்திரி, சில நிமிடங்களுக்குப் பிறகு வெற்றிலையைக் கீழே போட்டார். பிரம்பு நாற்காலியிலிருந்து எழுந்து திண்ணையில் அப்படியும் இப்படியுமாக உலாவினார். அவரது முகத்தில் வருத்தம் தரும் அமைதி படிந்திருந்தது.

"என்ன திருமேனி?" ஸ்ரீகண்டன் பரபரப்புடன் கேட்டான்.

"ஜபம் பலிக்கும்னு தோணலை. அவளுடைய பெயரையும், நக்ஷத்திரத்தையும் உருவிட்டபோது நெஞ்சில ஒரு சின்ன இடைவெளி தட்டுப்படுது. அவளது உடம்பில சக்தி வாய்ந்த தாயத்து இருக்கிறதாத் தோணுது."

"இருக்கும் திருமேனி. குமாரன்தம்பி ஒருதடவை அங்க வந்ததாகவும், தாயத்தை மந்திரிச்சுக் கொடுத்ததாகவும் கேள்விப்பட்டேன். குமாரன்தம்பியின் ஸித்தி அழிஞ்சுவிட்டதாச் சொன்னீங்களே, அவன் கொடுத்த தாயத்துக்குச் சக்தி இருக்குமா என்ன?"

"அவனோட நல்ல நிலைமைல அவன் மந்திரிச்சுக் கொடுத்ததா இருக்கும். அவனுடைய சக்தி சமீபத்தில்தானே அழியத் தொடங்கிச்சு? முன்னாலேயே ஜபித்துத் தந்த தாயத்தின் சக்தி எப்படிக் குறையும்? இருந்தாலும் சோழி போட்டுப் பார்க்கிறேன்."

பட்டத்திரி நிலவிளக்கை ஏற்றிவிட்டு, தரையில் உட்கார்ந்து சோழி போட்டுப் பிரஸ்னம் பார்த்தார். பல முறை சோழி பார்த்து,



பரப்பி கணக்கு கூட்டினார். பிறகு முணுமுணுப்பதுபோல் கூறினார்: "எந்தவிதமான பிரயோகமும் பானுமதி கிட்டப் பலிக்காது."

"ஏன் திருமேனி?" திடுக்கிட்டபடி கேட்டான் ஸ்ரீகண்டன்.

"அவள் மகிஷமர்த்தினி யந்திரம் போட்ட தாயத்தைக் கட்டியிருக்கிறா" பயந்த குரலில் பட்டத்திரி கூறினார்.

ஸ்ரீகண்டன் கேலித் தொனியில் கேட்டான்: "திருமேனி ஒரு பெரிய மந்திரவாதின்னு சொல்லி என்ன பிரயோஜனம்? மகிஷமர்த்தினி யந்திரத்திற்கு நீங்க பயப்படுகிறீங்களே?"

"உண்மைதான் ஸ்ரீகண்டா. தேவியோட போராட என்னோட மூர்த்திகள் தயாரா இல்லை" பட்டத்திரி ஒரு பெருமூச்சுடன் கூறினார்.

ஸ்ரீகண்டன் எதுவும் பேசாமல் அங்கிருந்து வெளியேறினான். அவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்த பட்டத்திரி கூறினார்: "அவனுக்குப் பானுமதி கிடைக்காததால ஏமாற்றம்; எனக்கோ குமாரனை மண்ணைக் கவ்வ வைக்க முடியாததில வருத்தம்."

## 46

அன்று வெள்ளிக்கிழமையாக இருந்ததால் புத்தூர் வீட்டிலும் பூஜை நடந்தது. பூஜையறை வாசலில் உட்கார்ந்து தேவிபூஜையை நடத்திய குமாரன்தம்பி, மதியமாவதற்குள் களைத்துப் போனான். காலையிலிருந்து தாயத்துகள் எழுதி வாங்குவதற்காக ஆட்கள் வந்து கொண்டே இருந்தனர். நல்லவேளையாகப் பாம்பு தீண்டியவர்கள் யாரும் வரவில்லை என்பது குமாரன்தம்பிக்கு ஆறுதல் அளித்தது. வந்திருந்தால் அவர்களைத் திருப்பியனுப்ப நேர்ந்திருக்கும்.

அவன் மதியச் சாப்பாட்டிற்கு உட்கார்ந்தபோது ஆவித்தாக்குதலுக்கு ஆளான ஓர் இளைஞனைச் சிலர் கூட்டி வந்தனர். இடைவிடாமல் அலறிக்கொண்டிருந்த அவனைக் கட்டுப்பாட்டில வைத்திருக்க உடனிருந்தவர்களால் முடியவில்லை.

சாப்பாட்டைப் பாதியிலேயே நிறுத்திவிட்டு குமாரன்தம்பி எழுந்தான். கைகால் முகத்தைக் கழுவினான். பூஜையறை வாசலுக்குச் சென்று பகளாமுகீ தேவியை மனமாரப் பிரார்த்தித்தான்.

"அவனை விடுங்க!" - முற்றத்திற்கு வந்த குமாரன்தம்பி, ஆவித்தாக்குதலுக்கு ஆளானவனைப் பிடித்துக் கொண்டிருந்தவர்களிடம் கூறினான். மற்றவர்களது கட்டுப்பாட்டிலிருந்து விடுபட்ட இளைஞன் சுதந்திரமாகப் பேயாட்டம் போட்டுக் கொண்டிருந்தான்.

குமாரன்தம்பி மஞ்சள் தூளால் முற்றத்தில் களம் (கோலம்) வரைந்தான். நிலவிளக்கை ஏற்றிக் கோலத்தின் மத்தியில் வைத்தான். மாந்திரீகப்பிரம்பைக் கையிலேந்திக் கொண்ட மாந்திரீகன், கண்களை மூடி பகளாமுகீ மந்திரங்களை ஜபித்தான்.

ஜபித்து முடிந்ததும் கண்களைத் திறந்து பாதிக்கப்பட்ட இளைஞனைக் கடுமையாகப் பார்த்த மாந்திரீகன் கோபத்துடன் கேட்டான்: "யார் நீ?"

"சொல்ல மாட்டேன்...!" - அந்த இளைஞன் அலறியபடி மாந்திரீகனை நெருங்கினான்.

"களத்திற்குள் வந்து நில்!" - மாந்திரீகப் பிரம்பை ஓங்கியபடி குமாரன்தம்பி கட்டளையிட்டான்.

"முடியாது!" - பிரம்பைப் பிடுங்க முயன்ற அவன் உரத்த குரலில் முரண்டு பிடித்தான்.

பகளாமுகி மந்திரம் பலிக்கவில்லை என்றதும் குமாரன்தம்பி தாரா மந்திரங்களை உருவிட்டான். மந்திரத்தை ஜபித்தபடி அவன் பிரம்பை அந்த இளைஞனை நோக்கி ஓங்கினான். குதித்துப் பாய்ந்த அந்த இளைஞன் குமாரனது கையிலிருந்த மந்திரப் பிரம்பைப் பிடுங்கிக் கொண்டான். பிரம்பைத் தூரத்தில் வீசி எறிந்து விட்டு, மாந்திரீகனைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டான்.

குமாரன்தம்பி திகைத்துப் போனான். அற்புதமான சக்தி வாய்ந்த மாந்திரீகப்பிரம்பு பிரேதச்சக்தியின் முன்னால் விளையாட்டுப்



பொருளாக மாறிவிட்டதா? மந்திரப் பிரம்புக்குச் சக்தி இல்லாமல் போய்விட்டது என்பதுதானே அர்த்தம்? தன்னிடமிருந்து மந்திரப்பிரம்பை மட்டுமா பிடுங்கித் தூரத்தில் எறிந்திருக்கிறது... தன்னையுமல்லவா பாய்ந்து பிடித்திருக்கிறது ஆவி!

தைரியசாலியான குமாரன்தம்பிக்குள் கோபம் சட்டென்று உயர்ந்தது. தன் உடல் பலம் முழுவதையும் பயன்படுத்தி அவன் அந்த இளைஞனைக் கீழடக்கினான்.

"கொஞ்சநேரம் இவனைத் திமிறவிடாம பிடிச்சுக்கங்க" - குமாரன்தம்பி இளைஞனுடன் வந்தவர்களிடம் கூறினான். உடனே அவர்கள் அவனைக் கைகளால் கெட்டியாகப் பிடித்துக் கொண்டனர். ஓடிப்போய் மந்திரப்பிரம்பை எடுத்து வந்த குமாரன்தம்பி பாலா மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான்.

பாலா மந்திரத்தினாலும் பயனேதும் ஏற்படவில்லை! தோல்வியின் அடித்தட்டை அடைந்துவிட்டதை உணர்ந்த குமாரன் தம்பி வேறு வழியின்றிக் கடுமையான முறையொன்றைக் கைக்கொள்ளத் தீர்மானித்தான். மிகவும் பலம் வாய்ந்த, புகழ் பெற்றது தேவி மந்திரமான பிரத்யங்கிரா மந்திரம்! அதைப் பிரயோகிக்க வேண்டியதுதான்!

எந்த வழியும் பயனளிக்காதபோது மட்டுமே உக்கிர மூர்த்தியான பிரத்யங்கிரா தேவியை அணுக வேண்டும். எவ்வளவு மோசமான ஆவிகளும் இந்த மந்திரத்தின் முன் மண்டியிட்டே தீரவேண்டும் என்கிற தாந்த்ரீகவிதி அவனுக்குத் தன்னம்பிக்கையை ஊட்டியது!

ஒரு கிண்டி நிறையத் தண்ணீரெடுத்து இடது கையில் வைத்துக் கொண்டான். வலதுகையில் மாந்திரீகப்பிரம்பைப் பிடித்துக் கொண்டு கண்களை மூடி பிரத்யங்கிரா மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான்.

*ஆஸாம்பரா முக்தகுசா ஹனச்சவி*
*த்யேயா ஸசர்ம்மாஸிக ராஹி பூஷணா*
*தம்ஷ்ட்ரோக்ர வக்த்ராஹி பயங்கராக்ருதி:*

*ப்ரத்யாங்கிரா சங்கர தேஜஸேரிதா*
*ஓம் ஹ்ரீம் யாம் கல்பயந்தி*
*நோரய: க்ரூராம் க்ருத்யாம் வதூமிவ*
*ஹ்ராம் பிராஹ்மணா அபனிர்ண்ணுத்ம:*
*ப்ரத்யூக்கத்தரா மிருச்சது ஹ்ரீம் ஓம்*

பத்தாயிரம் முறை மந்திரத்தைத் திரும்பத் திரும்ப ஜபித்த பிறகு கண்களைத் திறந்தான். ஆழ்ந்த நம்பிக்கையுடன் கண்களைத் திறந்தான். கிண்டியிலிருந்த தண்ணீரை இளைஞனின் தலை மீது தெளித்தான்.

அதனாலும் எந்தவிதமான பயனும் ஏற்படவில்லை. உறவினர்களின் பிடியிலிருந்து விடுபட முயன்ற அந்த இளைஞன் திமிறியபடி அலறினான்: "டேய் மந்திரவாதி! என்னை உன்னால ஒண்ணுமே செய்ய முடியாது. தெரிஞ்சுக்கடா நாயே!"

ஏமாற்றமடைந்த குமாரன்தம்பி, எந்த வகையிலும் செயல்பட முடியாதவனாக அவர்களிடம் சொன்னான்: "இவனை நீங்க வேற எங்கேயாவது கொண்டு போங்க!"

"ஐயோ! நீங்க இப்படிச் சொன்னா எப்படி? நீங்களே கைவிட்டா நாங்க வேற யாரிடம் போக? வேற யாரால் இதை விரட்ட முடியும்? தயவுசெஞ்சு எப்படியாவது நீங்கதான் இந்த உபாதையை அகற்றணும். மறுக்காதீங்க."

"என்னால முடிஞ்சதையெல்லாம் செஞ்சு பார்த்துட்டேன். வழியே இல்லை. நீங்க இங்கிருந்து இவனைக் கொண்டு போங்க" குமாரன்தம்பி தீனமான குரலில் கேட்டுக் கொண்டான்.

அப்போதும் அலறிக் கொண்டிருந்த இளைஞனை, அவனது உறவினர்கள் மிகுந்த சிரமத்துடன் இழுத்துக் கொண்டு போவதை நீர் நிறைந்த கண்களுடன் பார்த்துக் கொண்டே இருந்தான் குமாரன் தம்பி. அவனது மனத்தில் வேதனை தளம் அமைத்தது.

தான் மாந்திரீகனான பிறகு ஏற்பட்டிருக்கிற முதல் தோல்வி! கருட மந்திரஸித்தி கைவிட்டுப் போனபோதும் பாம்பை வரவழைத்து விஷம் இறக்கவும், அப்படிப்பட்ட ஓர் அக்னிப்



பரீட்சையிலிருந்து தப்பிக்கவும் தன்னால் முடிந்தது. ஆனால், இப்போது ஒரு சாதாரண ஆவித் தொல்லையைக்கூட விரட்டமுடியாமல் தோல்வியடைந்திருக்கிறோம்!

தேவி மந்திரஸித்தியும் தனக்கு நஷ்டமடைந்திருக்கிறது. முதலில் ஹனுமான், பிறகு கிருஷ்ணப்பருந்து... இறுதியாகத் தேவியும் தன்னைக் கைவிட்டிருக்கிறாள். மாந்திரீகப் பதவிக்கு இனிமேல் தான் அருகதை உள்ளவன் அல்ல. மற்றொருவருக்கு மந்திரோபதேசம் செய்து வைக்கும் அருகதையும் தனக்கு இல்லை. புத்தூர் தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியமே முடிவடைந்துவிட்டதா? கடவுளே!

தன் திருமணத்திற்கு இன்னும் மூன்று நாள்கள் மட்டுமே உள்ளன. மாந்திரீகப்பதவி தன் கையைவிட்டுப் போய்விட்டது என்பதை அறிந்தால் மணிமங்கலத்து கேசவன் நாயர் மகளைத் தனக்குத் திருமணம் செய்து வைக்கமாட்டார். இந்த மாந்திரீகப் பதவிதான் தன்னிடம் அவர் காணும் ஒரே தகுதி. சமீபகாலமாக தன்னைப் பற்றி எத்தனையோ பேர் எவ்வளவோ மோசமான அபிப்பிராயங்களை அவரிடம் சொன்னபோதிலும், அதையெல்லாம் செவிமடுக்காமல் இருப்பதற்கு தன்னுடைய மாந்திரீக ஸித்தியும் ஒரு காரணம். மாந்திரீகன் என்பதால் தன் மீது அவருக்குள்ள பயம். மாந்திரீகனல்லாத வெறும் குமாரன்தம்பியை மருமகனாக்கிக் கொள்ள மணிமங்கலத்து கேசவன் நாயர் ஒருபோதும் தயாராக மாட்டார்.

தனது மாந்திரீக வாழ்க்கையில் இன்னும் ஒரே ஒரு பரிசோதனை மட்டுமே மீதமுள்ளது. அதாவது திருமணத்திற்குப் பிறகு மேற்கொள்ளவிருக்கும் பத்ரகாளிசேவை. கிழக்குப்புற சர்ப்பக்காவில் மந்திர மண்டபம் தயாராக உள்ளது. பிரம்மச்சரியத்தை இழப்பதாலோ, திருமண வாழ்க்கையில் ஈடுபடுவதாலோ பத்ரகாளி கோபப்படப் போவதில்லை.

தனது இந்தக் கஷ்டகாலத்தில் பத்ரகாளியும் தன்னைக் கைவிட்டு விடுமோ? அனுஷ்டானங்களில் எந்தவிதமான தவறுகளும் ஏற்படாமல் காளியைப் பூஜை செய்யவேண்டும்.

மந்திரஸித்தி பெறுவதற்காக எப்படிப்பட்ட தியாகத்தைச் செய்யவேண்டி இருந்தாலும் செய்தே தீரவேண்டும். பத்ரகாளி மட்டும்தான் இனிமேல் தனக்குள்ள ஒரே அடைக்கலம்.

பத்ரகாளியும் அருள் புரியாத பட்சத்தில் ஒரேயொரு மாற்றுவழிதான் உள்ளது. துர்த்தேவதைகளை உபாசிப்பது. சூரக்காட்டு பட்டத்திரியின் உபாசனா மூர்த்திகளைவிட மிகவும் வல்லமை வாய்ந்த உக்கிரமூர்த்திகளைப் பிரத்தியக்ஷப்படுத்துவதற்குள்ள மந்திரப் பிரயோகங்களைப் படித்துள்ளோம். முறைப்படி அவற்றைப் பிரயோகிக்க வேண்டும். அவ்வளவுதான்!

ஊராருக்குச் சேவை செய்ய முடியாவிட்டால்கூடப் பரவாயில்லை. தன் ஜன்மப் பகைவனான பட்டத்திரியைத் தொலைப்பதே தன்னுடைய வாழ்க்கை லட்சியம். சூரக்காட்டு இல்லத்துக்குச் சொந்தமான யக்ஷிக்காவில், அவனுடைய முகத்துக்கு நேராகச் செய்து விட்டு வந்த சபதத்தை நிறைவேற்ற முடியாவிட்டால், அதன்பிறகு தான் எதற்காக உயிர் வாழவேண்டும்?

என்ன அது சத்தம்? மேற்குப்புறக் குறுக்கு வழியிலிருந்தல்லவா அந்த அலறல் வருகிறது!

"குமாரா! ஓடிவா!" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் பயத்துடன் கூடிய அலறல், குமாரன்தம்பியின் காதுகளில் முழங்கியது.

பரபரப்படைந்த குமாரன்தம்பி வீட்டின் வடக்குப்புற வழியாக ஓடிவந்தபோது கண்ட காட்சி பயங்கரமானதாக இருந்தது.

வீட்டின் மேற்குப்புற வழியில் ரத்தக்குளத்தில் அசைவற்றுப் படுத்திருந்தார் காரியஸ்தரான சங்குசார். பிளந்த அவரது மார்புப் பகுதியிலிருந்து ரத்தம் வடிந்து கொண்டிருந்தது. கழுத்தில் அபாயகரமான வெட்டுக் காயம்! வாயிலிருந்து நுரை வழிந்து கொண்டிருந்தது. நெஞ்சில் அறைந்து புலம்பிக் கொண்டிருந்தனர் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும் சமையல்காரியும். வடக்குவீட்டு சேகரன்தம்பியும் குடும்பத்தவர்களும் அவர்கள் வீட்டுப்பகுதியிலேயே திக்பிரமை பிடித்து நின்றுகொண்டிருந்தனர்.



"சங்குசாரின் அலறலைக் கேட்டுத்தான் நானும் பார்கவியும் ஓடிவந்தோம். வந்து பார்த்தா இதுதான் நிலை!" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கண்ணீருடன் பேசினார்.

சங்குசாரைத் தூக்கிக்கொண்டு போய் புத்தூர் வீட்டின் வடக்குப்புறத் திண்ணையில் படுக்க வைத்த குமாரன்தம்பி கூறினான்: "அம்மா, கங்கா தீர்த்தத்தை எடுத்துட்டு வாங்க!"

குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கங்காதீர்த்தத்தை எடுத்து வருவதற்குள் சங்குசாரின் தலை ஒருபுறமாகச் சரிந்தது. வாயில் தீர்த்தத்தை ஊற்றியபோது அது தொண்டையை விட்டு இறங்கவில்லை. சங்குசார் இறந்துவிட்டிருந்தார்!

"சங்குவைக் கொன்னது வடயக்ஷிணிதான்கிறதுல எந்தவிதமான சந்தேகமும் கிடையாது. குமாரா, புத்தூர் தறவாட்டுக்கு இப்படியும் ஒரு நிலையா? மகா மாந்திரீகர்கள் பிறந்த குடும்பத்துக்கு இப்போ துர்த்தேவதைகள்கூட பயப்படாத நிலையா? இன்னும் என்னவெல்லாம் நடக்கப் போகுதோ? எனக்கு ஒண்ணுமே புரியலை... என் பித்ருக்களே!" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியால் துயரத்தை அடக்க முடியவில்லை. பார்கவியும் உரத்த குரலில் அரற்றிக் கொண்டிருந்தாள். பார்கவியின் பெரியப்பா பையன் சங்குசார்.

குமாரன்தம்பியின் கண்களிலிருந்து கண்ணீர் வடிந்து கொண்டே இருந்தது. திண்ணையில் உட்கார்ந்து சங்குசாரின் தலையை மடியில் எடுத்து வைத்துக் கொண்ட குமாரன்தம்பி லலிதா சகஸ்ர நாமம் ஜபிக்கத் தொடங்கினான். அதற்குள் அந்தப் பகுதியே ஆட்களால் நிரம்பியது. வந்தவர்கள் எல்லாரும் பிரமை பிடித்து நின்றுவிட்டனர்.

மதிய உணவை முடித்துக்கொண்டு யக்ஷிக்காவிலிருந்த மந்திரமண்டபத்தை அடைந்து துர்கர்மங்களைச் செய்துகொண்டிருந்த ராமன் பட்டத்திரி வெற்றிச்செருக்கில் அட்டகாசமாகச் சிரித்தார்.

"ஆகா! அவனது காரியஸ்தனோட கதை முடிஞ்சிருச்சு. இனி அடுத்தது குமாரன்தம்பிதான்! யக்ஷித்தாயே நீயே துணை!"

*ஏஹ்யேஹி யக்ஷியக்ஷி மஹாயக்ஷி*
*வடவ்ருக்ஷ நிவாசினி ஸீக்ரம் மே*
*ஸர்வ ஸௌக்யம் குருகுரு ஸ்வாஹா*

முன்னாலிருந்த பீடத்துக்கு அவர் வடயக்ஷிணியை ஆவாஹம் செய்தார்.

சிலம்போசையின் நாதம் காதில் விழுந்ததும் பட்டத்திரி பக்திப் பரவசத்தில் கைகளைக் கூப்பினார்.

பீடத்தில் வெளிப்பட்ட வடயக்ஷினி பயந்து நடுங்கிக் கொண்டிருந்தது.

"என்ன தேவி?" பட்டத்திரி எழுந்து நின்று பணிவுடன் கேட்டார்.

"இனி நான் அங்க போக மாட்டேன். எனக்குப் பயமா இருக்கு. நான் இந்தக் காவைவிட்டு வெளியேற மாட்டேன்!"

"சங்குவைக் கொன்ன மாதிரியே குமாரனையும் கொல்லணும் தேவி. அதையும் நிறைவேத்திட்டா பிறகு உங்களைத் தொல்லைப் படுத்த மாட்டேன்!"

"குமாரனைத் தீர்த்துக்கட்ட என்னால் ஆகாது. அவன் ஒரு யக்ஷியோட புருஷன்."

"யக்ஷி புருஷனா?"

"ஆமாம். அந்த வீட்டுத் தேங்காய்கிட்டங்கியில இருக்கிற யக்ஷி அவனை உயிருக்கு உயிரா நேசிக்கிறாள். போதாக் குறைக்கு அவள் என் சினேகிதியும்கூட. இனியும் என்னைத் தொல்லைப் படுத்தக்கூடாது. நான் வர்றேன்!" யக்ஷினி மறைந்தது.

பட்டத்திரிக்குக் கடுமையான ஏமாற்றம் தோன்றியது. குமாரனால் பந்தனம் செய்யப்பட்ட பிறகும் அந்த யக்ஷி அவனை நேசிக்கிறதா? யக்ஷி அங்கு வசிப்பதுவரை வடயக்ஷிணி குமாரனைத் தொட முடியாது!

தூமாவதியைத் தூண்டி குமாரனை அழிச்சுட்டா என்ன? இது அவனோட ஸித்திகள் அழிஞ்சு போயிருக்கிற நேரம். இந்த



சந்தர்ப்பத்தில் எந்த வகையான துர்த்தேவதையும் சுலபமாக அவனை வீழ்த்திவிட முடியும்!

வேண்டாம்! கர்ணப்பிசாசினி கூறியுள்ளபடி குமாரனின் மருமகளை இன்று சாம்பலாக்கட்டும். அதன் திட்டப்படியே அது நடக்கட்டும். காரியஸ்தனது தலை சாய்ந்ததுமே குமாரனும் பிணம் போலாகி விட்டானே. அவனது மருமகளையும் கொன்றுவிட்டால் அவன் மனம் தகர்ந்து விடும். அவனுடைய மந்திரஸித்தி முழுவதும் அழிந்துவிட்ட நிலையில் அவனால் இனிமேல் எந்தவிதமாகவும் என்னை எதிர்க்க முடியாது.

"டேய் குமாரா, என்னைப் பைத்தியமாக்குவதாக வீம்பு பேசிய முட்டாளே, பார்த்தாயா யார் ஜெயித்திருக்கிறதென்று? சூரக்காட்டு மாந்திரீகனா அல்லது புத்தூர் மாந்திரீகனா?" பட்டத்திரி அட்டகாசமாகச் சிரித்தபடி இன்னாரிடம் என்றில்லாமல் பேசினார்.

## 47

புத்தூர் வீட்டுக் காரியஸ்தரை வெள்ளிக்கிழமை மதிய நேரத்தில் யக்ஷி கடித்துக்குதறி ரத்தம் குடித்த செய்தி விரைவிலேயே ஊரெல்லாம் பரவியது. குமாரன்தம்பியின் மாந்திரீக ஸித்திகள் அழிந்துவிட்டதாகவும் விஷத்தை இறக்கவோ, பிரேத பாதைகளை அகற்றவோ இனி குமாரனால் முடியாது என்றும் ஊரார் ஒட்டுமொத்தமாக நம்பினர். குமாரன்தம்பியிடம் ஊராருக்கு இருந்த மதிப்பும் மரியாதையும் வெறுப்பாக மாற ஒரு சில மணி நேரமே தேவைப்பட்டன.

விவரமறிந்த மணிமங்கலத்து கேசவன் நாயர் தர்மசங்கடத்தில் ஆழ்ந்தார். விடிந்தால் மகளது திருமண நாள்.

குமாரன்தம்பியின் ஸித்திகள் அழிந்து விட்டது உண்மையானால், அவனுடனான தனது மகளின் திருமணம் நடைபெறக்கூடாது. ஆனால், கல்யாணத்தை நிறுத்துவதற்கு

என்ன காரணம் கூறுவது? திருமணத்தை ஒத்திப் போடுவதற்கும் பொருத்தமான காரணம் கிடையாது. வரனது வீட்டுக் காரியஸ்தர் இறந்து போனதால் இந்தத் திருமணத்தைத் தள்ளிப் போடுகிறோமென்றா பெண் வீட்டார் காரணம் சொல்ல முடியும்? வரனது மாந்திரீக சக்தி அழிந்துவிட்டதற்காக கல்யாணத்தை நிறுத்த விரும்புகிறோம் என்பதும் மரியாதைக்குரிய செயலல்ல.

"எல்லாம் விதிப்பயன்!"- என்று ஆறுதலடைவதைத் தவிர வேறு வழியில்லை. ஒரு மந்திரவாதிக்குத்தான் மகளைத் திருமணம் செய்து வைப்பதென்று தான் ஒருபோதும் விரும்பியதில்லை. அப்படியே குமாரன்தம்பி ஒரு மந்திரவாதியே இல்லையென்றால்தான் என்ன? புத்தூர் வீட்டைச் சேர்ந்த ஒருவர் தனக்கு மருமகனாக வருவதென்பது கௌரவக் குறைவான செயலா என்ன? மனிதர்கள் என்ன வேண்டுமானாலும் பேசுவார்கள். நாம் ஏன் அதையெல்லாம் பொருட்படுத்த வேண்டும்?" கேசவன் நாயரது மனைவி, கணவனுக்கு ஆறுதல் சொன்னார்.

எப்படி இருப்பினும் புத்தூர் வீட்டிற்குச் சென்று விவரத்தைத் தெரிந்துகொள்ளலாம் என்று தீர்மானித்தார் கேசவன் நாயர்.

முந்தைய நாள் இறந்த சங்குசாரின் மரணத்திற்குத் துக்கம் விசாரிக்க வந்தவரைப் போல் மதியம் தாண்டிய பிறகு கேசவன் நாயர் புத்தூர் வீட்டிற்கு வந்தார்.

வீட்டின் சூழ்நிலை எந்தவிதமான சலனமுமற்றிருந்தது. கிழக்குப்புற முற்றத்தில் சற்று நேரம் காத்திருந்த கேசவன் நாயர், வடக்குப்புற முற்றத்திற்குச் சென்றார். கதவு மூடியிருப்பதைப் பார்த்துவிட்டுக் கேட்டார். "இங்க யாரும் இல்லையா?"

''எல்லாரும் இருக்கிறோம்'' - வீட்டிற்குள்ளிருந்து குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் குரல் உயர்ந்தது ஒலித்தது.

"யாரு, கேசவன் நாயரா? உள்ள வாங்க" கதவைத் திறந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி, அவரை வரவேற்றார்.

சமையற்கட்டை ஒட்டியிருந்த போர்ட்டிகோவுக்கு வந்த கேசவன் நாயருக்கு அங்கு நின்றுகொண்டிருந்த மகேஸ்வரியையும்



மற்றவர்களையும் அடையாளம் தெரிந்து கொள்ள முடியவில்லை. இதை உணர்ந்துகொண்ட குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அறிமுகத்துடன் பேச்சைத் தொடங்கினார்: "இவளை உங்களுக்குத் தெரியாதா? என் தங்கை மகேஸ்வரி. கொச்சு புத்தூர் வீட்டில் வசிக்கிறா. நேற்றைய செய்தியைக் கேள்விப்பட்டுக் குழந்தைகளுடன் வந்திருக்கிறா. இப்ப வீட்டுக்குக் கிளம்பிட்டிருக்கிறா!"

''நாளைக்குத்தானே கல்யாணம்? அதுக்கப்புறம் புறப்படலாமே?'' கேசவன் நாயர், மகேஸ்வரிதங்கச்சியைப் பார்த்துக் குசலம் விசாரிக்கத் தொடங்கினார்.

"மனசில இருக்கிறதைச் சொல்லிடுறோமே கேசவன் நாயரே... நாளைக்கு நடக்கப்போற கல்யாணத்துக்கு அவனைத் தவிர வேற யாரும் இந்த வீட்டிலிருந்து வர்றதுக்கில்லை. எங்களுடைய மற்ற உறவினர்கள் ஏற்கெனவே எங்ககிட்டச் சண்டை போட்டிருக்காங்க. தறவாட்டு மாந்திரீகன் கல்யாணம் செய்துகொள்ளத் தீர்மானிச்சதுக்கப்புறம் அவங்க எதிரிகளாகவே மாறிட்டாங்க." - குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பதிலளித்தார்.

"போகட்டும். இந்த வீட்டில இருக்கிறவங்களாவது கல்யாணத்துக்கு வரலாமில்லையா?"

"இந்தக் குடும்பத்தில இருக்குற மொத்த நபர்கள் குமாரனும், இரண்டு பெண்களும் இந்தக் குழந்தைகளும்தான். ஆண் குழந்தைகளின் கல்யாணத்திற்கு அம்மாக்கள் போகும் வழக்கம் இந்தத் தறவாட்டில கிடையாது. அதனால நான் வரமுடியாது. மகேஸ்வரி விதவையானதால மங்கல காரியம் நடக்குற இடத்துக்கு அவளும் வரமாட்டா. அப்புறம் இந்த ரெண்டுபேரும் சின்னக் குழந்தைகளில்லையா?"

"இந்தக் குழந்தைகளையாவது அனுப்பலேன்னா எங்களுக்கு அது மரியாதைக் குறைவா இருக்கும் அம்மச்சி. பெண்ணை அழைச்சுட்டு வர்றதுக்குப் பையன் வீட்டிலிருந்து ஒரு பெண் குழந்தையாவது வர வேண்டாமா?" - ராஜம்மாவை உற்றுப் பார்த்த கேசவன் நாயர் கேட்டார்.

"அப்படியெல்லாம் குழந்தைகளை தனியா அனுப்ப முடியாது. பெண்ணை அழைச்சுட்டு வர்றதுக்கு குமாரன்தம்பி இருக்கானே!" - மகேஸ்வரிதங்கச்சி பதிலளித்தார்.

"இருந்தாலும் நாட்டு நடப்புன்னு ஒண்ணு இருக்கே!" கேசவன் நாயர் விடவில்லை.

"நாட்டு நடப்பையும், வீட்டு நடப்பையும் காத்துல பறக்கவிட்டுத்தானே பிரம்மச்சாரி கல்யாணம் செய்றான்?" மகேஸ்வரிதங்கச்சி கேலித் தொனியில் கேட்டார்.

"இனிமேல் நாம அதைப் பற்றிப் பேசி என்ன பிரயோஜனம்? பொழுது விடிஞ்சா கல்யாணமாச்சே?"- குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி பெருமூச்செறிந்தார்.

கேசவன் நாயருக்குக் கோபம் பொத்துக் கொண்டு வந்தது என்றாலும் வெளிக்காட்டிக் கொள்ளாமல் கேட்டார்: "குமாரன் இங்க இல்லையா?"

"பொழுது விடிஞ்சதும் வெளியே போனான். நாளைக்கு கல்யாணமில்லையா? எல்லாத்துக்கும் அவன்தானே ஓடி அலையணும்? கேசவன்நாயரே நீங்க இப்படி உட்காருங்க" - தென்புற அறையைச் சுட்டிக்காட்டிய குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கூறினார்.

"வேணாம் அம்மச்சி. வீட்டில தலைக்குமேல வேலை இருக்கு. உங்க வீட்டுக் காரியஸ்தர் இறந்ததைக் கேள்விப்பட்டு வந்தேன். நேத்து என்னால வர முடியலை."

"அவர் மேற்குப்புற வழியில நடந்து போனபோது தலைசுற்றி மயங்கி விழுந்துட்டார். உடனடியா மரணம். நேத்து சாயங்காலத்திலேயே தகனமும் முடிஞ்சிருச்சு... அவருக்கு மனைவி, குழந்தைகள்னு யாரும் கிடையாது."

"சங்குசாரை யக்ஷி கொன்னுட்டதா ஊரில பேசிக்கிறாங்க..."

"ஊர் ஜனங்களுக்குப் பேச ஏதாவது ஒண்ணு வேண்டாமா? அந்த வழியிலதான் யக்ஷி குடியிருக்கா என்ன?"- குஞ்ஞுக்குட்டி ... சிரிப்புடன் கேட்டார்.

விடைபெற்றுப் புறப்பட்ட கேசவன் நாயர் மேற்குப்புறப் பாதையையே சற்று நேரம் பார்த்தபடி நின்றார். அங்கு பயங்கர உருவத்துடன் ஒரு பெண்மணி நின்றுகொண்டிருப்பதாக அவருக்குத் தோன்றியது. அவரது இதயம் துடிதுடித்தது. 'அது ஒருவேளை அந்த யக்ஷியாக இருக்குமோ? அதனுடைய அடுத்த இரையை எதிர்பார்த்துக் காத்திருக்கிறதோ? நாளைக்குத் தன் மகள் இந்த வீட்டிற்கு வருகிறாள். யக்ஷி அவளையும் ஏதாவது செய்துவிடுமோ?'

"என்ன அந்தப் பக்கத்தையே பார்த்துட்டுருக்கீங்க?" - வாயிற்படியருகே நின்றுகொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கேட்டார்.

"வந்து... ஒண்ணுமில்லை. குமாரன்தம்பி வர்றாரான்னு பார்த்துட்டிருக்கேன்" - தடுமாற்றத்துடன் பதிலளித்தார்.

வீட்டின் கிழக்குப்புற முற்ற வழியாக நடந்து தெற்குப்புறப் படிப்புரையை அடைந்த கேசவன் நாயர், யாரோ அழைப்பது போல் தோன்றவே சட்டென்று நின்றார்.

"டேய் கேசவன் நாயர்?"

"யாரது?" - கேசவன் நாயர் திடுக்கிட்டவராகக் கேட்டார். சுற்றுமுற்றும் பார்த்தார். யாரும் கண்களுக்குத் தட்டுப்படவில்லை.

"டேய் மரமண்டை... மணிமங்கலத்து கேசவன் நாயரே" - மறுபடியும் அதே அழைப்பு! கம்பீரம் நிறைந்த ஆண் குரல்.

மனத்திற்குள் தோன்றிய பயத்தை அடக்கிக் கொண்டு அவர் மீண்டும் கேட்டார்:

"யார் அது?"

அவரது கேள்விக்குப் பதிலாக முழங்கிய அட்டகாசச் சிரிப்புச் சத்தம் அவரை நடுங்க வைத்தது. அந்தச் சிரிப்பு ஒரு சில நிமிடங்கள் தொடர்ந்தது.

கேசவன் நாயர் நடைப்பிணம் போல படிப்புரையிலிருந்து இறங்கி மெதுவாக முன்னோக்கி நடக்கத் தொடங்கினார். அவரது கால்கள் தரையில் பதியவில்லை என்பது அவருக்கே தெரிந்தது.

அசரீரிபோல் தான் கேட்ட குரல் யாருடையதாக இருக்கும்? தன்னை நடுங்க வைத்த, குன்றிப்போகச் செய்த அந்த அட்டகாசச் சிரிப்பு யாருடையது? யாரும் கண்ணுக்குத் தட்டுப்படவில்லையே? ஒருவேளை இதெல்லாம் தன் மனத்தின் வெறும் பிரமையாக இருக்குமோ? மனத்தில் வலுவாகப் புகுந்துவிட்ட பய உணர்வின் ஆரவாரம்தான் மற்றொருவரது குரலாகத் தனக்குக் கேட்கிறதோ?

பெரிய கோயிலுக்கு முன்பாக வந்த கேசவன் நாயர் கை கூப்பித் தொழுதபடி பிரார்த்தித்தார்: "வேலாயுத ஸ்வாமி, நீதான் என் மகளைக் காப்பாத்தணும்!"

யானைக் கொட்டிலின் அருகே யார் யாரோ நாலைந்து பேர் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்தனர். அவர்களுக்கு நடுவில் உட்கார்ந்திருந்த குமாரன்தம்பி, கேசவன் நாயரைப் பார்த்தான். உடனே எழுந்து வந்து வருங்கால மாமனாரிடம் குசலம் விசாரிக்க முயன்றான்.

"என்ன, வீட்டுக்குப் போகாம இங்க உட்கார்ந்திருக்கீங்க?" -கேசவன் நாயர் கேட்டார்.

"நாளைக்குக் காலையில உங்க வீட்டுக்குக் கூட்டிட்டு வரவேண்டிய ஆளுங்களை ஏற்பாடு பண்ணிட்டிருக்கேன்."

"உள்ளே யாரெல்லாம் இருக்காங்க?"

"கோயில் வேலைக்காரங்க, கிழக்குவீதிப் பக்கம் குடியிருக்கிற ஒரு சிலர் இருக்காங்க..." - ஒருவித அசட்டுச் சிரிப்புடன் குமாரன்தம்பி பதிலளித்தான்.

"தம்பி, உங்க அந்தஸ்தை விட்டுடக்கூடாது. மாந்திரீகனா கறதுக்கு முன்னால உங்களுக்கு இருந்த சினேகிதத்தையெல்லாம் விட்டுடுறது நல்லது. நான் அவ்வளவுதான் சொல்ல முடியும்!"

"நீங்கள் எதையெல்லாமோ தப்பா புரிஞ்சுக்கிட்டிருக்கிற மாதிரி தெரியுது."

"மன்னிக்கணும் குமாரன்தம்பி. நான் ரொம்பவும் சோர்ந்து போயிருக்கேன். தங்கம் மாதிரி நான் பொத்தி வைச்சு வளர்க்கும் மகளை உங்ககிட்ட ஒப்படைக்கப் போறேன். உங்க மாந்திரீகப்



பதவி போனால்கூட எனக்கு வருத்தமில்லை. ஆனால் என் மருமகன் மோசமான நடத்தையுள்ளவர்ங்கிறதை, தாங்கிக்கிற சக்தி எனக்கு இல்லை. நாளைக்குப் பார்ப்போம்..."

துயரத்துடன் நடந்து அகன்ற கேசவன் நாயரைப் பரிதாபத்துடன் பார்த்தபடி நின்றிருந்த குமாரன்தம்பியின் மனத்தில் ஆழமான குற்றவுணர்ச்சி தோன்றியது. நண்பர்களுடன் சேர்ந்து யானைக் கொட்டிலில் கஞ்சா புகைத்துக் கொண்டிருந்தான். கேசவன் நாயர் அதைப் புரிந்துகொண்டிருப்பார் என்று தோன்றுகிறது.

என்ன செய்வது? நெருக்கடித் தாக்குதல்களின் போராட்டக் களமாக மாறிவிட்டிருக்கும் தன் மனம், சற்றாவது ஆறுதல் பெறுவது இந்தக் கஞ்சாவின் போதையில்தான். தவிர்க்கப்பட்டிருந்த நட்புகளை மீண்டும் புதுப்பித்துக்கொள்ள வேண்டிய சூழல். மறந்துபோன பாடங்களையெல்லாம் நினைவுபடுத்திக்கொள்ள வேண்டிய நிலை. தியாகம் செய்துவிட்டிருந்த கெட்ட நடவடிக்கைகளையெல்லாம், மீண்டும் சீராட்ட வேண்டிய சந்தர்ப்பம்.

தவறு செய்கிறோம் என்பதைத் தெரிந்துகொண்டே தவறு செய்கிறோம். பாவம் செய்கிறோம் என்கிற சுயநினைவுடன் மகாபாவத்தைத் தொடர்கிறோம். துயரமான விபத்துகள் கருநாகங்களைப் போல் முன்புறம் எதிர்ப்படும்போது பச்சாதாபம் தோன்றுவதுண்டு. பச்சாதாபச் சிந்தனை மனத்தை நேர்வழியில் திருப்பத் தொடங்கும்போது பாதையெங்கும் தடைக்கற்கள். மற்றொரு வழியில் திரும்ப நிர்ப்பந்திக்கப்படுகிறோம். அதனூடாகச் சென்றடைவதோ துன்மார்க்கமான இந்த வீதிக்குத்தான்!

"ஏங்க தம்பி, உங்க மாமனார் என்னமோ சொல்லிட்டுப் போனார் போலிருக்கு...?" - யோசனையிலாழ்ந்த குமாரன்தம்பியை நெருங்கி வந்த கோபாலன் கேட்டான்.

"சொல்லிக்கிறா மாதிரி எதையும் அவர் சொல்லிட்டுப் போகலை" - குமாரன்தம்பி சுவாரசியமில்லாமல் முணுமுணுத்தான்.

"நாளைக்குப் பொழுது விடியும்போது எங்க வீட்டுப் பெண்களோட இங்க வந்துடுறோம். இங்கிருந்துதானே நாம

புறப்படுறோம?" - அப்போதுதான் வந்து சேர்ந்த குட்டப்பமாரார் கேட்டார்.

"ம்..." என்று முனகிய குமாரன்தம்பி வீட்டை நோக்கி நடந்தான். அவன் யோசித்துப் பார்த்தான்: 'புத்தூர் தறவாட்டின் முக்கியமான கிளையின் காரணவன் நான்; தறவாட்டு மாந்திரீகனும்கூட. தன் கல்யாணத்துக்கு வர இந்தத் தறவாட்டில் யாருமே தயாராக இல்லை. புதுப்பெண்ணை அழைத்துவர, இந்தக் குடும்பத்தில் ஒரு பெண் ஜீவன்கூட இல்லை!

'கோபாலனது மனைவி மீனாக்ஷியும் குட்டப்பமாராரின் மனைவி பாறுக்குட்டியும்தான் புத்தூர் வீட்டுப் பெண்களுக்குப் பதிலாகக் கல்யாண வீட்டுக்கு வரப் போகிறார்கள். வீட்டாரும், ஊராரும்கூட இதைக் கேலியாகப் பேசக்கூடும். பரவாயில்லை... கேலிகளின் மெத்தையில் படுக்கத் தொடங்கி எத்தனையோ நாட்களாகி விட்டன. ஆரம்ப காலத்தில் வேதனை தோன்றத்தான் செய்தது. இப்போது அது பழகிப் போய்விட்டது. நடுவயதை நெருங்குவதற்குள் எப்படிப்பட்ட வித்தியாசமான வாழ்க்கை அனுபவங்கள் தன்னைத் தேடி வந்துவிட்டன? தாம்பத்திய உறவும் சேரும்போது எல்லாமே முழுமையடைந்து விடும்!'

வீட்டின் படிப்புரையை நெருங்கியபோது குமாரன்தம்பி சங்குசாரைப் பற்றி நினைவு கூர்ந்தான். தனக்கு அவர் வெறும் ஒரு காரியஸ்தராக மட்டும் இருக்கவில்லை. எல்லாவற்றுக்கும் மேலாக நெருக்கத்திற்குரிய ஒருவரும்கூட. தன்னுடைய திருமணத்தின் சூத்திரதாரியே அவர்தான். ஆனால், நாளை நடைபெறவுள்ள திருமணத்தைக் காண அவர் உயிருடன் இல்லை.

புத்தூர் தறவாட்டுக்காகத்தான் சங்குசார் இறந்தார். தன்னால்தான் அந்த அப்பாவி மனிதர் இந்த இளம்வயதிலேயே அநியாயமாக இறக்க நேர்ந்தது. அவருக்கு முன்பாக இருந்த காரியஸ்தர் குமாராசாரின் மரணத்திற்கும் தானேதான் உத்தரவாதி. புத்தூர் தறவாட்டுக்குச் சேவை செய்ததற்காக அவர்களுக்குக் கிடைத்த பரிசு... மரணம்!



வீட்டு முற்றத்தை அடைந்த குமாரன்தம்பியின் கண்கள் தேங்காய் கிட்டங்கியை நோக்கித் திரும்பின. நெஞ்சிற்குள் ஓர் இடிமின்னல் வெட்டியதாக குமாரன்தம்பிக்குத் தோன்றியது.

யக்ஷியைத் தேங்காய் கிட்டங்கியில் ஸ்தாபித்து ஒரு மாதத்திற்கு மேலாகிறது. அவ்வப்போது வந்து பார்த்துக் கொள்வதாக வாக்களித்துத்தான் கிட்டங்கியைப் பூட்டினோம். ஆனால், இதுவரை ஒருதடவைகூட போனதே இல்லை!

யக்ஷியாக இருந்தாலும் அவள் லக்ஷ்மிக்குட்டியின் மரணாந்தரப் பிறவி. மற்றொரு துர்த்தேவதையிடம் காட்டும் குரூரத்தை அவளிடம் காட்டக் கூடாது என்பது தெரியாமலில்லை. யக்ஷியுடன் தொடர்பு கொண்டால், தேவியின் கோபத்திற்கு ஆளாக நேரும் என்கிற பயத்தால்தான் அவளிடமிருந்து விலகியிருந்தோம். பத்ரகாளியை ப்ரீதிப்படுத்தி மந்திரஸித்தி பெற வேண்டுமென்கிற தன்னுடைய ஆசை நிறைவேற வேண்டுமானால், ஒருபோதும் தான் யக்ஷியை நெருங்கவே கூடாது.

பந்தனத்தில் உழலும் யக்ஷியை விடுதலை செய்து விடவோ, உச்சாடனம் (அழிப்பது) செய்யவோ தன்னால் முடியாது என்கிற உண்மை, அவனைப் பயம் கொள்ள வைத்தது. மாந்திரீக ஸித்திகளை இழந்துவிட்ட நிலையில் யக்ஷிக்கு உதவவோ, தொல்லை கொடுக்கவோ தன்னால் முடியாது. பத்ரகாளி சேவை வெற்றி பெற்றால் தன்னால் ஒரு பெரிய மாந்திரீகனாக முடியும். யக்ஷியின் காரியத்தைக் குறித்து அப்போது தேவையானதைச் செய்து கொள்ளலாம். அதுவரை அவள் தேங்காய் கிட்டங்கியில் அதே நிலையிலேயே இருக்கட்டும்.

வீட்டின் கிழக்குப்புறத் திண்ணைக்கு வந்த குமாரன்தம்பி அம்மாவை அழைத்தான். கதவைத் திறந்த அவர் கேட்டார்:

"வரவர உனக்குச் சாப்பாடும் வேணாம்கிற நிலைமை வந்துடுச்சா?"

"பசியில்லாமப் போய் எத்தனையோ நாளாச்சும்மா!"

"அதெல்லாம் கிடக்கட்டும். வந்து எதையாவது சாப்பிடு."

"மகேஸ்வரிச் சித்தியும் குழந்தைகளும் போய்ட்டாங்களா அம்மா?"

"இப்பத்தான் போனாங்க."

"குழந்தைகளைக் கல்யாணத்துக்கு அனுப்பணும்னு நீங்க எதுவும் சொல்லலையா?"

"நீ முதல்ல கைகால் அலம்பிட்டு வா. சாப்பிட்ட பிறகு மத்த கதைங்களைப் பேசலாம்."

அம்மா பரிமாறிய சாப்பாட்டை ஒருவழியாகத் தொண்டைக்குள் இறக்கிவிட்டுத் தென்புற அறையிலிருந்த சப்ரமஞ்சக் கட்டிலில் படுத்து எதிர்காலத்தைக் குறித்து யோசிக்கத் தொடங்கினான் குமாரன்தம்பி. அப்போதுதான் அம்மாவிடமிருந்து எதிர்பாராத உத்தரவு வந்தது: "இன்னிக்கு சாயந்தரம் நீ கொட்டாரத்திற்குப் போய் விளக்கேற்றிப் பிரார்த்திக்கணும். ஓலைச்சுவடிகளை எடுத்த இடத்திலேயே வைக்கணும்!"

குமாரன்தம்பியின் மனம் நடுங்கியது. தான் கொட்டாரத்திற்குள் நுழைவதா? அங்குள்ள பூஜையறையைத் திறந்து ஓலைச்சுவடிகளை உள்ளே வைப்பதா? அது முடியாது. பயம் தோன்றுகிறது.

"அப்படி என்னதான் யோசிக்கிற? அம்மா சொல்றதைக் கேக்க மாட்டியா?"

"நான் கொட்டாரத்திற்குப் போணுமா அம்மா... அதுவும் இந்தச் சந்தர்ப்பத்தில?"

"போகணும்! நீ எதுக்காகவும் பயப்பட வேண்டியதில்லை. ஓலைச்சுவடிகளை நீ திரும்பவும் கொண்டுபோய் வைச்சுட்டால் காரணவர்கள் உன்னை மன்னிப்பாங்க."

அம்மாவிடம் பதில் எதையும் கூறாமல் சிந்தனையில் மூழ்கிய குமாரன்தம்பியின் மனத்தில் சட்டென்று ஓர் உபாயம் மின்னலிட்டது. ஐந்தாவது ஓலைச்சுவடியில் துர்த்தேவதை களை வசப்படுத்தும் மந்திரங்கள் உள்ளன. அந்த மந்திரங்கள்



எல்லாவற்றையும் படித்துவிட்டோம். இருப்பினும் அது மட்டும் கைவசம் இருப்பது நல்லது. அதைத் தீவிர மறறவற்றைக் கொட்டார அறைக்குள் வைத்துவிடலாம்.

மாலை நேரத்தில் குளித்துவந்த குமாரன்தம்பி கொட்டாரத்திற்குப் புறப்பட்டான். சப்ரமஞ்சக் கட்டிலில் வைத்திருந்த ஓலைச்சுவடி கட்டியிருந்த பட்டுத் துணியை அவிழ்த்து, ஐந்தாவதான கடைசிச் சுவடியைப் பிரித்தெடுக்க முயன்ற அவனது வலது கன்னத்தில் வலுவான ஓர் அறை விழுந்தது. திடுக்கிட்ட குமாரன்தம்பியின் இடது கன்னத்திலும் அறை விழுந்தது. அதனால் ஏற்பட்ட வேதனை தீயாகத் தகித்தது.

"குடும்பத் துரோகி! மறுபடியும் குருத்துரோகமா செய்ய நினைக்கிற? அனுபவிச்சதெல்லாம் போதாதா? மரியாதையா ஓலைச்சுவடிகள் எல்லாத்தையும் கொண்டுபோய்க் கொட்டாரத்தில வை. அதன்பிறகு ஒருபோதும் நீ கொட்டாரத்திற்குள்ள நுழையக்கூடாது" - பப்புமாமாவின் கடுமையான எச்சரிக்கைக் குரல் முழங்கியது.

கிடுகிடுவென்று நடுங்கிய குமாரன்தம்பி ஓலைச்சுவடிக் கட்டை இறுக்கிக் கட்டினான். எண்ணெய் மற்றும் திரித்துணிகளை எடுத்துக்கொண்டு கொட்டாரத்தை நோக்கி விரைந்தான்.

படிப்புரையைத் திறந்து கொட்டார முற்றத்தில் நுழைந்ததும் அவனது கால்கள் மரத்துப் போனது போலானது. உடல் நடுங்கியது. சமாதி மாடங்களைச் சுற்றிப் புல்லும் களைச்செடிகளும் வளர்ந்திருப்பதைக் கவனித்த குமாரன்தம்பியின் மனம் துடிதுடித்தது.

முழுமையான குற்றவுணர்வுடன் சமாதி மாடங்களுக்கு முன்னாலிருந்த விளக்குகளில் எண்ணெய் ஊற்றி, திரிகளை ஏற்றினான். பரிதவிப்புடன் பிரார்த்தனை செய்தான்.

கொட்டாரத் திண்ணையின்மீது தயங்கித் தயங்கிக் கால் பதித்தான். கதவைத் திறக்கப் பயம் தோன்றியது. தைரியத்தை வரவழைத்துக் கொண்டு சாவியை நுழைத்துக் கதவைச் சற்றுத் திறந்தான்.

சிலம்புகளின் ஓசை! சங்கோசை! கருடனின் சிறகடியோசை! பூஜையறைக்குள் கண்ணைக் கூசச் செய்யும் ஒளிப்பிரவாகம்.

மனத்திலிருந்த தைரியக்கிடங்கு உடைந்து தகர்ந்தது. நெஞ்சின் படபடப்பைக் கட்டுப்படுத்த முடியாமல் திணறிய குமாரன்தம்பிக்கு, பப்புமாமாவின் கட்டளைக் குரல் கேட்டது:

"ஓலைச்சுவடிக் கட்டை உட்புறமாக எறிஞ்சுட்டு, வேகமா அறைக்கதவை மூடு. ம்... சீக்கிரம்!"

சற்று ஆறுதல் பெற்றவனாக பட்டுத் துணிமூட்டையை உட்புறமாக எறிந்தான். சட்டென்று கதவைப் பூட்டினான். வீட்டை நோக்கி விரைவாக ஓடினான்.

"ஓலைச்சுவடிகளைப் பூஜையறையில வெச்சிட்டியா குமாரா?" எதிர்ப்பட்ட குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கேட்டார்.

"வெச்சிட்டேன் அம்மா!"

"இப்பத்தான் எனக்கு நிம்மதியா இருக்குது. இனிமேல் எதற்கும் பயப்பட வேண்டியதில்லை" - அவர் நிம்மதியுடன் பெருமூச்செறிந்தார்.

கல்யாணத்தைப் பற்றிக் கேள்விப்பட்டு குசலம் விசாரிக்க வந்தவர்களிடம் பேசிக் கொண்டிருந்த குமாரன்தம்பி இரவு உணவு உண்டது நள்ளிரவுக்குப் பிறகுதான்!

தென்புற அறையிலிருந்த சப்ரமஞ்சக் கட்டிலில் படுத்து உறங்க முயன்ற குமாரன்தம்பிக்கு, பெண் குரலில் சோகப்பாட்டு ஒன்று கேட்பதாகத் தோன்றியது. எழுந்து உட்கார்ந்த குமாரன்தம்பி காதைக் கூர்மையாக்கினான்.

வீட்டின் சுற்றுப்புறத்தில் நள்ளிரவு தாண்டிய நேரத்தில் எந்தப் பெண் பாடுகிறாள்? நெஞ்சை உருக்கும் இந்த சோகப்பாட்டு தன் ஆத்மாவை வேதனையடைய வைக்கிறதே! இப்படிக் கண்ணீருடன் பாடுவது யார் என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும்!



சத்தம் எழுப்பாமல் தெற்குப்புறக் கதவைத் திறந்து கொண்டு வெளியே வந்தான். பாட்டுச் சத்தம் கேட்கவில்லை!

அவன் கிழக்குப்புற முற்றத்திற்கு வந்தான். அதோ மறுபடியும் அதே சோகப் பாட்டு. கிழக்குப் பகுதியிலிருந்து பாட்டு வருகிறது!

சுயநினைவிழந்தவனைப் போல அவன் கிழக்குப்புறமாக நடந்தான். தேங்காய் கிட்டங்கியை நெருங்கியபோது அவனுக்குச் சுயநினைவு ஏற்பட்டது. அவன் திடுக்கிட்டான். கொஞ்சம்கூட முன் யோசனையில்லாமல் நடந்து கொண்டதற்காக தன்மீதே அவனுக்குக் கோபம் ஏற்பட்டது. யக்ஷிதான் பாடுகிறது! பாட்டு நின்று விட்டது.

"குமாரேட்டா!" - உள்ளிருந்து வெளிவந்தது அந்த பரிதாபத்துக்குரிய குரல்.

"ம்... என்ன வேணும்?"

"நாளைக்குத்தானே உங்க கல்யாணம்? அதுக்கு முன்னால நான் ஒரு தடவை உங்களைப் பார்க்கணுமே... ஒரே ஒரு தடவை வெறுமனே பார்த்தாலே போதும்" - தொடர்ந்து அழுகை கலந்த விசும்பல்.

அவனால் தாங்கிக்கொள்ள முடியவில்லை. "நான் இதோ வந்துடுறேன் லக்ஷ்மிக்குட்டி. சாவியை எடுத்துட்டு வர்றேன்" - வீட்டை நோக்கி ஓடினான்.

## 48

வீட்டையடைந்த குமாரன்தம்பி கிட்டங்கியின் சாவியை எடுத்துக்கொண்டு, சிறிய நிலவிளக்கு ஒன்றில் நெய்யை ஊற்றி, திரியேற்றி, அம்மாவும் சமையற்காரியும் நன்றாக உறங்குகிறார்கள் என்பதை உறுதிப்படுத்திக் கொண்ட பிறகு மெதுவாகக் கிட்டங்கியை நோக்கி நடந்தான்.

கிட்டங்கியை நெருங்கிய குமாரன்தம்பியைக் காரணமற்ற பயம் சூழ்ந்து கொண்டது. 'மாந்திரீக சக்தியெல்லாம் நஷ்டமாகிப்போன இந்தச் சமயத்தில் யக்ஷியுடன் தொடர்பு கொள்வது ஆபத்துகளை வரவழைக்கும் செயல் அல்லவா?' அவன் மனம் சிந்தித்தது.

"என்ன தயக்கம்? பயப்படாம உள்ள வாங்க" - யக்ஷி உள்ளிருந்து அழைத்தது.

என்னவானாலும் சரி... கதவைத் திறந்து உள்ளே நுழைவது என்று தீர்மானித்தான். தான் பந்தனம் செய்த யக்ஷியல்லவா? பந்தனம் செய்த யக்ஷிக்கு எந்தவிதமான சக்தியும் இருக்காது.

கதவைத் திறந்து உள்ளே நுழைந்தவன் உடனே கதவை மூடினான்.

"என்னை நீங்க இப்பவும் முழுசா நம்பலை இல்லையா குமாரேட்டா? கதவைத் திறந்ததும் உடனே மூடிட்டீங்களே?" யக்ஷி குறைப்பட்டுக் கொண்டது.

"லக்ஷ்மிக்குட்டி!"- அழைத்தான்.

"என்னங்க?" - பதில் குரல் கொடுத்தாள்.

"உன் குரல் மட்டும்தான கேட்குது. உன்னைப் பார்க்க முடியலையே... நீ எங்க இருக்கிற?"

"இந்தப் பக்கம் பாருங்க. நான் இங்கதான் நிற்குறேன், தெரியலையா?"

குமாரன்தம்பியால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. தனக்கு எதிரில் சுவரில் சாய்ந்து நின்று கொண்டிருக்கும் யக்ஷியின் அழகு முன்னைவிடப் பல மடங்கு அதிகரித்திருந்தது. தங்கத்தில் கடைந்தெடுத்த அழகுச்சிலை என்றே தோன்றியது.

அவள் வலது காலை தரையிலிருந்து உயர்த்தி மறுபடி தரையில் பதித்தாள். பின்பு இடது காலையும் அப்படியே செய்தாள். சலங்கைகள் குலுங்கி நாதம் எழுப்பின.



அவளைத் தலையிலிருந்து பாதம் வரை உற்றுப் பார்த்த அவன் உணர்விற்கு அடிமைப்பட்டவனாக "லக்ஷ்மிக்குட்டீ!" என்றான்.

"என்ன குமாரேட்டா?"

"நீ உண்மையிலயே பேரழகிதான்!"

"இப்பத்தான் அது புரிஞ்சதா? நான் முன்ன மட்டும் அழகியா இல்லையா?"

"முன்னவிடப் பேரழகு இப்பத்தான் உனக்கு ."

"என்னை உங்களுக்குப் பிடிக்கும் இல்லையா?"

"அதிலென்ன சந்தேகம்?"

"அப்படின்னா எதுக்காக என்னை பந்தனம் செஞ்சீங்க?" - அவள் முகத்தை உர்ரென்று வைத்துக் கொண்டாள்.

"என்னோட மாந்திரீகப் பதவியை நிலைநிறுத்திக்க வேற வழி இல்லாததாலத்தான்."

"முடிவு என்ன? மாந்திரீக சக்தி எல்லாம் கைவிட்டுப் போயிடலையா? அதுக்கெல்லாம் நான் காரணக்காரி இல்லையா?"

"என்னோட தவறுகளாலதான் எல்லாமே நடந்தது. உன்னை எப்படி இதுல குற்றம் சொல்ல முடியும்?"

"குமாரேட்டா, நாளைக்குத்தானே உங்க கல்யாணம்?"

"ஆமாம்!"

"உங்க மனைவி என்னைவிட அழகியா?"

"அவள் அழகிதான். ஆனால், உன்னைவிட அழகின்னு சொல்ல முடியாது."

"பிறகு ஏன் அவளைக் கல்யாணம் செய்யுறீங்க? மரணம் வரையில என்னை விட்டுப் பிரிய மாட்டேன்னு சத்தியம் செஞ்ச நீங்க, வேறொரு பெண்ணைக் கல்யாணம் செய்ய நினைக்கிறது நியாயமா?"

"அதெல்லாம் நடந்தது, நடந்து போச்சு. என்னை மன்னிச்சிடு லக்ஷ்மிக்குட்டி!"

"குமாரேட்டா! நீங்க ஓர் அப்பாவி. என்னைப் பந்தனம் செஞ்சு எத்தனை நாளாச்சுன்னு உங்களுக்கு ஞாபகமிருக்கா?"

"ஒரு மாசத்துக்கு மேலாச்சு."

"நான் சரியாச் சொல்லட்டுமா? நாற்பத்தியோரு நாள் முடிஞ்சிடுச்சு. ஒரு யக்ஷியைப் பந்தனம் செஞ்சால் நாற்பத்தியொரு நாளுக்குள்ள அதை ஒரு சிலையில ஆவாஹம் செஞ்சு பிரதிஷ்டை செய்யணும்கிறது மாந்திரீகனான உங்களுக்குத் தெரியாமப் போச்சு! அப்படிச் செய்யலேன்னா நாற்பத்தியோரு நாளுக்குப் பிறகு அந்த யக்ஷி பழைய சக்தியைப் பெற்றுவிடும். நான் இப்ப விடுதலையடைஞ்சுட்டேன். கதவின் தாழ்ப்பாளில் மந்திரச் சரடு இருக்கிற வரையில நான் வெளியேற முடியாது, அவ்வளவுதான்."

"நான் உன்னை வெளியேற அனுமதிச்சா....?"

"உங்களைவிட்டு நான் எங்க போக முடியும் குமாரேட்டா?"

"அதை நாம பிறகு தீர்மானிக்கலாம். முதல்ல நீ என்கிட்ட வா!" - குமாரன்தம்பி இரு கைகளையும் நீட்டினான்.

"அன்பான குமாரேட்டா!" - என்றபடி அவள், அவனை இறுக்கி அணைத்தாள்.

சட்டென்று குமாரன்தம்பிக்குச் சுயநினைவு மீண்டது. 'பத்ரகாளி சேவை நடத்த வேண்டிய தான் யக்ஷியுடன் தொடர்பு கொள்ளவே கூடாது. மனத்தைக் கட்டுப்படுத்தியே தீர வேண்டும்.'

"என்னை விடு லக்ஷ்மிக்குட்டி!" அவன் திமிறி விடுபட முயன்றவனாகக் கூறினான்.

"விடமுடியாது. என்னோட உறவுகொள்ளாம நான் உங்களை விட முடியாது. வெறுமனே பலத்தைச் செலவிடுறதுல பயனேதும் கிடையாது."



குமாரன்தம்பி தோல்வியை ஒப்புக்கொண்டான். அவன், அவளுக்கு இணங்க வேண்டியதாயிற்று.

துவண்டுபோன குமாரன்தம்பி மூச்சு வாங்கியபடி சொன்னான். "நீ என்னைத் தோல்வியடைய வெச்சுட்ட... சரி நேரம் அதிகமாகிடுச்சு... நான் புறப்படுறேன்."

"நானும் வர்றேன்."

"எங்கே?"

"புத்தூர் தறவாட்டுக்கு. யார் கண்களுக்கும் புலப்படாம நான் பாட்டுக்கு வீட்டுக்குள்ள இருக்கிறேன். எந்தவிதமான தொந்தரவும் தரமாட்டேன். குமாரேட்டன் மட்டும் என்னைப் பார்க்க முடியும்! என்ன சொல்றீங்க?"

"வேண்டாம். நீ வீட்டுக்கு வந்தால் என்னோட திட்டமெல்லாம் குளறுபடியாயிடும். நீ இங்கயே இருந்தால் போதும்."

அவன் கதவைத் திறந்து வெளியே வந்தான். தாழ்ப்பாளின் மீது இருந்த மந்திரச்சரடை எடுத்து வாசலுக்கு நேராகப் பிடித்தபடி சட்டென்று கதவை இழுத்து மூடினான். பூட்டிய பிறகு சரடைத் தாழ்ப்பாளின் மீது சுற்றிக் கட்டினான்.

"குமாரேட்டா, நில்லுங்க... அங்கேயே!" அலறலாக வெளிவந்த அவளது கட்டளைக் குரலைக் கேட்டு அவன் அப்படியே நின்றான்.

"போன ஜன்மத்திலும் இந்த ஜன்மத்திலும் உங்களை மட்டுமே நேசிச்சவ நான். அன்னிக்கும் இன்னிக்கும் சரி... நீங்க என்னைத் துயரப்படுத்தத்தான் செஞ்சிருக்கீங்க. என்னை ஒதுக்கிட்டு, உங்க புது மனைவியோட சுகமா இருக்கப் போறீங்க இல்லையா? இதோ நான் மனமுருகி உங்களைச் சபிக்கிறேன். என்னைத் தவிர வேறொரு யக்ஷியோடவோ மனுஷப் பெண்ணோடவோ தொடர்பு கொள்ள உங்களால முடியாமல் போகட்டும்!"

"லக்ஷ்மிக்குட்டி!" - நெஞ்சை உருக்கும் தன்மையிலான அவனது குரல் அலறலின் விளிம்பைத் தொட்டது.

"போய்ட்டு வாங்க குமாரேட்டா. விடிஞ்சாக் கல்யாணம் செய்யப்போற பெண்ணோட பிரம்மச்சரிய விரதத்தைக் கைக்கொள்ளுங்க. ஒரு கணவனாகணும்னு உங்களுக்குத் தோணும்போது என்கிட்ட வாங்க!"

"என்கிட்ட இன்னும் கொஞ்சம் இரக்கம் காட்டு லக்ஷ்மிக்குட்டி!"

"அடுத்த வெள்ளிக்கிழமை ராத்திரி இங்க வாங்க. மற்ற விஷயங்களை அப்போ பேசிக்கலாம். இப்ப நீங்க போகலாம்."

குமாரன்தம்பிக்குத் தன் நெஞ்சே வெடிப்பது போலிருந்தது. யக்ஷி சபிக்கும் என்று கேள்விப்பட்டிருந்தான். இதோ அந்த சாபத்தையே தான் நிதரிசனமாகப் பெற்றுவிட்டோம். முன் யோசனையில்லாமல் நடந்து கொண்டதனால் இந்த ஆபத்து நிகழ்ந்துவிட்டது. தன்னை ஒருமுறை பார்க்க வேண்டுமென்று அவள் அழுது புலம்பியதில் மனம் இளகிவிட்டது. மனத்தில் வஞ்சகம் எதுவுமில்லாதிருந்த தான், அந்த வஞ்சக வலையில் விழுந்துவிட்டோம். கிட்டங்கியைத் திறக்காமலிருந்தால் இந்த அனர்த்தங்கள் எதுவும் நடந்திருக்காது!

குளத்தில் இறங்கிக் குளித்த பிறகு வீட்டையடைந்து கதவை மூடிய குமாரன்தம்பி, பப்புமாமாவின் உரத்த குரலிலான அட்டகாசச் சிரிப்பைக் கேட்டுத் திடுக்கிட்டான். நிலவிளக்கை அணைத்துவிட்டுக் கட்டிலில் படுத்தான்.

யக்ஷியின் சாபம் பலிப்பதாக இருந்தால், அதனால் ஏற்படப் போகும் விளைவுகளை ஒருகணம் எண்ணிப் பார்த்த குமாரன்தம்பிக்கு தலையே சுழல்வதாகத் தோன்றியது.

அழகியான பானுமதியுடன் இந்தக் கட்டிலில் செயலற்றவனாகப் படுப்பதா? கணவனல்ல என்பதுபோல் படுத்திருப்பதா? ஒரு கணவனுக்கு உரிய எதுவும் தன்னிடம் இல்லை என்பதை மனைவி உணரும்பொழுது தன் மனமே தன்னை இடித்துரைப்பது எப்படிப்பட்ட நரகவேதனையாக இருக்கும்? அதனால் அவளுக்கு ஏற்படும் ஏமாற்றம் எத்தனை பயங்கரமானது?



யோசிக்க யோசிக்க ஒன்றுமே புலப்படவில்லை. மாந்திரீக சித்தி கொஞ்சமாவது தன்னிடம் இருந்திருந்தால் அந்த யக்ஷி தன்னை இப்படிக் கீழ்ப்படியச் செய்திருக்காது. சாபமிட்ட யக்ஷியிடம் பழி தீர்த்துக் கொள்ளும் அளவுக்குத் தன்னிடம் வல்லமை எதுவும் இல்லை. வரும் வெள்ளிக்கிழமையன்று அவளைச் சந்திக்க வேண்டும் என்று சொல்லியிருக்கிறாள்! அன்று அவளை எப்படியாவது வசப்படுத்தி, இந்த சாபத்தைத் திரும்பப் பெறும்படிச் செய்ய வேண்டும்!

அது மட்டும் போதாது. நாளை மாலையே மந்திர மண்டபத்தில் பத்ரகாளி பூஜையை ஆரம்பிக்க வேண்டும். கடுமையான விரதம் இருக்கிறோம் என்கிற சாக்குச் சொல்லி மனைவியிடமிருந்து விலகியிருக்கவும் அது உதவும். யக்ஷியுடன் தொடர்பு கொண்டதை தேவி மன்னிக்காமல் இருக்க மாட்டார். யக்ஷி தன்னிடம் பலாத்காரமாக அல்லவா நடந்து கொண்டது?

பத்ரகாளி சேவையின் ஊடாக மந்திரஸித்தியைத் திரும்பப் பெற்றுவிட்டால், அதன் பிறகு ஒருபோதும் யக்ஷியைக் குறித்துப் பயம் கொள்ள வேண்டியதில்லை.. யக்ஷியின் சாபத்தால் இழந்துபோன உடலுறுவுச் சக்தியைத் திரும்பப் பெறவும் மந்திர சக்தியால் முடியாமல் போகாது.

மனத்தில் தன்னம்பிக்கையின் கீற்றுகள் நிழல் பரவ விட்டபோது குமாரன்தம்பியின் மனபயம் அகன்றது. அவன் உறங்க முயன்றான்.

சுப்பிரமணிய ஸ்வாமி கோயிலில் எழுப்பிய பள்ளியெழுச்சிப் பாட்டிசை குமாரன்தம்பியை எழுப்பியது.

பூஜையறை வாசலில் நிலவிளக்கை ஏற்றித் தியானத்தில் மூழ்கியிருந்தார் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி. அம்மாவின் தியானத்தைக் கவனித்த மகனது நெஞ்சில் குற்றவுணர்வு மேலெழும்பியது. அவனது மனம் தன்னைத்தானே நிந்தித்தது. கண்கள் கண்ணீரால் நிறைந்தன.

பாவியான மகனுக்காக கருக்கிருட்டில் எழுந்து குளித்து, ஈரத்துணியுடன் ஈஸ்வரப் பிரார்த்தனை செய்கிறார் மகன் மீது

பாசங் கொண்ட தாய்! மகனது குற்றங்குறைகளை மன்னித் தருளுங்கள் என்று பித்ருக்களிடமும், கருடபகவானிடமும் மன்றாடிக் கொண்டிருக்கிறார் தன் அன்புத்தாய்! ஒரு தவமுனிவரைப் போல வாழும் அந்தத் தாயின் கறையேதுமற்ற தெய்வ பக்தியினால்தான் இதுவரை தன் உயிருக்கு எந்த ஆபத்தும் ஏற்படவில்லை என்று குமாரன்தம்பிக்குத் தோன்றியது.

அவன் படுக்கையிலிருந்து எழுந்தான். கிழக்கு வாசலைத் திறந்து முற்றத்தை அடைந்தான். பால் போன்ற நிலவொளி. அவனது கண்கள் கிழக்குத் திசையிலிருந்த கிட்டங்கியின் மீது பதிந்தன. அவன் மனம் நடுங்கியது.

விட்டு விலக முடியாத உபாதையாகிவிட்ட யக்ஷி இப்போது பயம்தரும் கனவாகி - சிம்ம சொப்பனமாகி விட்டிருக்கிறாள். தன்னுடைய மாந்திரீக ஸித்திகள் முழுவதுமாக அழிந்து போய்விட்ட பரிதாபகரமான சூழ்நிலையிலல்லவா யக்ஷியின் பயமுறுத்தலைச் சந்திக்க நேர்ந்துள்ளது! யக்ஷிகளும், கந்தர்வர்களும், பூத-பிரேதப் பிசாசுகளும், துர்த்தேவதைகளும், துர்மந்திரவாதிகளும் பயப்பட்ட புத்தூர் மகா மாந்திரீகன், இப்போது ஒரு யக்ஷியின் அடிமையாகி விட்டிருக்கிறான். இதைத் தன் தலைவிதி என்று சொல்லாமல் வேறு என்னவென்பது!

விதிமீது ஏன் பழி போடவேண்டும்? சுயமாக வரவழைத்த ஆபத்துகளுக்கு விதியின் பெயரை ஏன் இழுக்க வேண்டும்? தான் மனப்பூர்வமாக முயன்றிருந்தால், மனக்கட்டுப்பாட்டின் மதிற்சுவர் தகர்ந்திருக்காது. பிரம்மச்சரியம் அழிந்திருக்காது. தறவாட்டின் மகத்தான மாந்திரீகப் பாரம்பரியத்தின் மகத்துவத்தையே அல்லவா தான் பிளந்து விட்டோம்? தேவன் நாராயணன் மாமாவும், சாத்து மாமாவும், பப்புமாமாவும் பத்திரமாகப் பாதுகாத்துப் போற்றி வந்த புத்தூர் தறவாட்டின் கர்மஸித்தியை அல்லவா கெட்டிக்காரனென்று பேரெடுத்த தான் அழித்து விட்டிருக்கிறோம்?

தனது வழிகாட்டியாக இருந்த பப்புமாமாவின் கட்டளைகளை அனுசரித்திருந்தால் - அதன்படி நடந்து கொண்டிருந்தால் இவை



எதுவுமே நடந்திருக்காது. தன்னுடைய மனம் சாய்ந்தாடத் தொடங்கிய போதெல்லாம் தனக்கு மனத்துணிவை அளிக்க அவர் தயங்கியதே இல்லை. ஆனால், ஒரு பலவீன நிமிடத்தில் பப்புமாமாவின் கட்டளையைத் தான் ஒதுக்கித் தள்ளினோம். ஒரு தடவை அது அபத்தமானது என்று புரிந்தும், தான் அதிலிருந்து பாடம் கற்றுக் கொள்ளவில்லை. அபத்தங்கள் தொடர்கதையாக மறுபடி மறுபடி தொடர்ந்தன.

ஹனுமான் அகன்று விலகியபோதும் கருடபகவான் அகன்று போகக் கூடுமென்று நினைக்கவில்லை. குடும்பத்தின் குலதெய்வமான கருடன் அகன்று விலகியபோது தனது ஒரே அபயம் தேவியாக இருந்தார். தேவியின் பலவித வடிவங்களில் ஒன்றுகூடத் தன்னைத் திரும்பிப் பார்ப்பதற்கில்லை என்கிற துயர சத்தியமும் வெளியாகி விட்டது. பத்ரகாளி சேவையினூடாக மந்திர ஸித்தியைத் திரும்பப் பெறலாமென்ற ஓர் எதிர்பார்ப்புடன் இருந்த போதுதான் யக்ஷியின் அடிமையாகிப் போனோம்.

"என் காரணவர்களே, என்னை மன்னியுங்கள்" குமாரன்தம்பி கண்களை மூடி, தொண்டை தழுதழுக்கப் பிரார்த்தித்தான்.

"குமாரா!" வாசலுக்கு வந்துவிட்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி அழைத்தார்.

குமாரன்தம்பி திடுக்கிட்டவனாகத் திரும்பிப் பார்த்தான். மகனது துயர நிலைக்காகப் பரிதவித்தபடி நின்று கொண்டிருந்தது இன்னும் அன்பு வற்றாத அந்தத் தாயுள்ளம். அவன் அம்மாவை பரிதாபமாகப் பார்த்தான்.

அம்மாதான் மௌனத்தை உடைத்தார்: "இப்படி வருத்தப்பட்டுட்டே இருந்தா எப்படி? முகூர்த்தம் காலை நேரத்தில தானே? காலைக் கடன்களை முடிக்க வேண்டாமா?"

"அம்மா, உங்ககிட்ட நான் ஒண்ணு கேட்கலாமா?"

"கேள் குமாரா!"

"கல்யாணம் வேணாமோன்னு தோணுது. நீங்க என்னம்மா நினைக்கிறீங்க?"

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்குச் சிரிப்பு வந்தது. "உனக்கென்ன பைத்தியமா? கல்யாண முகூர்த்தம் நெருங்கிவிட்ட சமயத்தில வேணாங்கிறது முறையா? அதுமட்டுமல்ல, கல்யாணம் செய்யாம இருந்தா உனக்கு மந்திரஸித்தி திரும்பக் கிடைச்சுடும்னு நினைக்கிறயா?" ஒரு பெருமூச்சு விட்டபடி அவர் தொடர்ந்தார். "தெய்வம் நினைக்கிறபடிதான் எதுவும் நடக்கும்!"

குமாரன்தம்பி காலைக்கடன்களை விரைவாக முடித்துக் கொண்டு, பூஜையறை வாயிலுக்கு வந்து கூப்பிய கைகளுடன் நின்றான். கருடத்தியானத்தைச் செய்தால் என்ன என்று ஒரு விநாடி சிந்தித்தான். மனத்தில் திகைப்புப் படையணிவகுப்பு நடத்தியதால் அந்த முயற்சியைக் கைவிட்டுவிட்டுத் தேவியைத் தியானித்தான். பப்புமாவின் உருவம்தான் மனத்தில் தோன்றியது. உள்ளம் நடுங்கியது. அத்துடன் தியானமும் முடிவடைந்தது.

அக்கம்பக்கத்துக்காரர்களும், ஊர்ப்பிரமுகர்களுமாகப் பத்துப் பதினைந்து பேர் வீட்டு முற்றத்தில் வந்து கூடியிருந்தனர். தறவாட்டைச் சேர்ந்த யாரும் அதில் இல்லை!

அம்மாவிற்குத் தட்சிணை தந்தபிறகு வந்தவர்களுடன் சுப்ரமண்யஸ்வாமி கோயிலுக்குப் போனான். கோயில் சிப்பந்திகள் உட்பட இருபதுக்கும் மேற்பட்டவர்கள் யானைக் கொட்டடியில் காத்திருந்தனர். அவர்களுடன் மூன்று பெண்கள் இருந்தனர். கோபாலனின் மனைவி மீனாக்ஷி, அவளது மகள் கோமதி, குட்டப்ப மாராரின் மனைவி பாறுக்குட்டி. கோயில் தரிசனத்திற்குப் பிறகு எல்லாரும் பெண் வீட்டிற்குப் புறப்பட்டனர்.

கல்யாண வீட்டில் பந்தலோ, கதிர் மண்டபமோ (மணமேடை) அலங்கரிக்கப்படவில்லை. மணிமங்கலத்து வீட்டின் வெளிவராந்தாவில் ஒரு நிலவிளக்கை ஏற்றி வைத்து அதன் முன்னால் ஒரு மணையைப் போட்டிருந்தனர். அதுதான் மணமேடை. மிகவும் எளிமையான சடங்குகளுடன் திருமணம் நடைபெற்றது.



"பெண்ணைக் கூட்டிட்டுப் போறதுக்காக வந்திருக்கிற பெண்கள் யார் யார்னு பார்த்தீங்களா? புத்தூர் தறவாட்டைச் சேர்ந்த ஒருத்திகூட வரலையே" கேசவன் நாயரது மனைவிக்குக் கடுமையான துயரம் தோன்றியது.

"இந்த நேரத்தில அதையெல்லாம் நினைச்சு வருத்தப்படக் கூடாது" மனைவிக்கு ஆறுதல் கூறினார் கேசவன் நாயர்.

கல்யாணம் காலை நேரத்தில் நடைபெற்றதானாலும் விருந்து ஏகத்தடபுடலாக இருந்தது. மணிமங்கலம் கேசவன் நாயரது பெருமையைப் பறைசாற்றும் விருந்துபசாரம்!

"ஆணுக்கு ஆணாகவும் பெண்ணுக்குப் பெண்ணாகவும் இவள் ஒருத்திதான் எனக்கு. இவளை நான் உங்ககிட்ட ஒப்படைக்கிறேன். கண்மணி மாதிரி இவளைப் பார்த்துக்கங்க!", புதுமணமக்கள் விடைபெற்ற போது கேசவன் நாயர் நீர்நிறைந்த கண்களுடன் குமாரன்தம்பியிடம் கூறினார்.

"பானுமதிக்கு எந்தவிதமான குறையும் இருக்காது" குமாரன்தம்பி உறுதியளித்தான்.

"ஊர் வழக்கத்தையொட்டி இன்னிக்கு இவளை புத்தூர் வீட்டிற்கு கூட்டிட்டுப் போறதுல தவறு ஏதும் இல்லை. ஆனால், இரண்டு நாள் கழிந்த பிறகு நீங்க இரண்டு பேரும் இங்க வந்துடுங்க. இது உங்க வீடு. நீங்க இங்கயே தங்கலாம்" கேசவன் நாயரது மனைவி கூறினாள்.

தன் கௌரவத்தைப் பாதிப்பதுபோல் பேசிய மாமியாரின் பேச்சு குமாரன்தம்பிக்குப் பிடிக்கவில்லை. அவன் உரத்த குரலில் பதிலளித்தான்: "மனைவியோட வீட்டில விருந்து சாப்பிட்டுக் காலம் கழிக்க புத்தூர் தம்பியை எதிர்பார்க்காதீங்க. மனைவிக்குச் சாப்பாடு போடவும், கவனிச்சுக் கொள்ளவுமான வசதி என்கிட்ட உண்டு."

கல்யாண வீட்டிலிருந்து புது மணமக்களும் விருந்தினர்களும் புறப்பட்டனர். "கோயிலுக்குப் போய் பிரார்த்தனை செய்தபிறகு வீட்டுக்குப் போகணும்" குட்டப்பமாரார் கருத்துத் தெரிவித்தார்.

கூட்டம் கோயில் வாசலை அடைந்தபோது பூஜை ஆரம்பமாகியிருந்தது. கோயில் பிராகாரத்திலும், யானைக் கொட்டடியிலும் ஏராளமான பக்தர் கூட்டம். சிறுசிறு குழுக்களாகப் பிரிந்து கூட்டமே ரகசியம் பேசிக்கொண்டிருந்தது.

தன் திருமணம்தான் ஊராரின் இன்றைய சர்ச்சைக்குக் காரணம் என்பதை குமாரன்தம்பி யூகித்தறிந்தான். பேசிக் கொண்டிருந்தவர்கள் தங்களைக் கண்டதும் பேச்சை சட்டென்று நிறுத்தி உற்றுக் கவனித்தனர்.

குமாரன்தம்பியின் மனத்தில் ஒருபுறம் குற்ற உணர்ச்சியும் மறுபுறம் பெருமிதமும் தோன்றின. இந்த ஊரிலேயே மிகவும் அழகான ஒரு பெண்ணைத் திருமணம் செய்து கொண்டுள்ளோம். கொசுவை விழுங்கியதற்காக ஜாதிப்பிரஷ்டம் செய்யப்பட்டவன் அல்ல. மானத்துடன் லாபமும் உள்ள ஒரு காரியத்தையே செய்திருக்கிறோம்.

கோயிலின் கிழக்குக் கோபுரவாசல் வழியாகக் குமாரன் தம்பியும் கூட்டமும் உள்ளே நுழைந்ததும் கோயிலைச் சேர்ந்த ஒரு பெரியவர் பாய்ந்து வந்தார்.

"தம்பி, கோயிலுக்குள்ள நுழையாதீங்க. உங்களுக்குத் தீட்டு" பெரியவர் எச்சரிக்கை செய்தார். "எனக்குத் தீட்டா? விஷயம் என்னன்னு விவரமா சொல்லுங்க!"

கண்கள் இருண்டு வருவதுபோல் உணர்ந்த குமாரன்தம்பி தட்டுத் தடுமாறி ஒருவிதமாகக் கோயிலுக்கு வெளியே வந்தான்.

'அப்படியானால் தன் தறவாட்டில் யாரோ இறந்து போயிருக்கிறார்கள்! அது யாராக இருக்கும்?'

"அம்மா!" அவன் மனம் நொந்து புலம்பினான்.

யாரெல்லாமோ சேர்ந்து குமாரன்தம்பியைத் தாங்கிப் பிடித்தனர். எல்லோரும் புத்தூர் தறவாட்டை நோக்கிப் பாய்ந்தனர்.

# 49

புத்தூர் வீட்டின் தென்புறப் படிப்புரையை அடைந்தவுடன், தன்னைப் பிடித்துக் கொண்டிருந்தவர்களை உதறிவிட்டு குமாரன்தம்பி வாசலை நோக்கி ஓடினான்.

கிழக்குப்புறத் திண்ணைக்கு ஓடிவந்த குமாரன்தம்பி நிலைவாசல் கதவு பூட்டியிருப்பதைக் கண்டு திடுக்கிட்டான்.

வீட்டைப் பூட்டிவிட்டு எல்லாரும் எங்கே போயிருக்கின்றனர்? அம்மாவுக்கு எந்தவிதமான ஆபத்தும் ஏற்படவில்லை என்பது புரிந்தது. ஆனால், யாரோ இறந்து போயிருக்கிறார்கள்? அது யாராக இருக்கும்?

"பெரிய தம்புராட்டி கொச்சுபுத்தூர் வீட்டுக்குப் போயிருக்கிறார்" வடக்குப்புற முற்றத்தில் நின்றிருந்த பெருக்கித் தள்ளும் குஞ்ஞுச்சிருத கூறினாள்.

"அங்க என்ன நடந்திருக்கு?" அந்தப் பக்கமாக ஓடிய குமாரன்தம்பி பதைப்புடன் கேட்டான்.

"கொச்சு தம்புராட்டி..."

"என்ன ஆச்சு... சீக்கிரம் சொல்!"

"ராஜம்மா சிறிய தம்புராட்டியைத் தெய்வம் கூப்பிட்டுக்கிருச்சு" குஞ்ஞுச்சிருத விக்கிவிக்கிப் பேசினாள்.

"என்ன, மருமகள் ராஜம்மா இறந்துவிட்டாளா! பித்ருக்களே, புத்தூர் குடும்பத்தின் சந்ததி அறுந்துவிட்டதா? கருட பகவானே!

என்னை இவ்வளவு கடுமையாகத் தண்டிக்க வேண்டியிருந்ததா உனக்கு?" மாரிலடித்துப் புலம்பிய குமாரன்தம்பி கொச்சுபுத்தூர் வீட்டை நோக்கி ஓடினான். பானுமதியும் மற்றவர்களும் அவனைப் பின்தொடர்ந்தனர்.

கொச்சுபுத்தூர் வீட்டைச் சூழ்ந்து கொண்டிருந்தது ஜனக்கூட்டம். வீட்டை நெருங்கியபோதே கூட்டமாக அழும் ஒப்பாரிக் குரல் கேட்டது. வீட்டிற்குள் பாய்ந்து வந்த அவன், அப்படியே அசைவற்று நின்று போனான்.

"சந்ததி அழிந்துவிட்டது!" என்று தறவாட்டின் போதாத காலத்தைக் கரித்துக் கொட்டிப் புலம்பும் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி, அருமையாக வளர்த்து வந்த பேத்தியின் துர்மரணத்தால் மனம் நொந்து விசும்பிக் கொண்டிருக்கும் மகேஸ்வரித்தங்கச்சி, சகோதரியின் மரணத்தால் துணையிழந்து நெஞ்சு உருகும்படியாக அழுது கொண்டிருக்கும் கொச்சுராமன், தறவாட்டுப் பெண் ஒருத்திக்கு ஏற்பட்ட இந்தத் துயர முடிவு, தறவாட்டின் வீழ்ச்சிக்கு ஆரம்பம் என்று சொல்லியபடியே வருந்தும் தறவாட்டின் இதர அங்கங்கள், ஊருக்கே ஏதோ ஆபத்து வரப் போவதன் அறிகுறிதான் - அதன் சூசனைதான் ராஜம்மாவின் துர்மரணம் என்று பயப்பட்ட ஊரார். . . சோகத்தில் ஆழ்ந்து போயிருந்த வீட்டின் சுற்றுச்சூழல்.

கொச்சுபுத்தூர் வீட்டின் கிழக்குப்புற அறையில், பேத்தியின் உடலை மடியில் கிடத்திக் கதறிக் கொண்டிருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் கோபம் நிறைந்த கேள்வி குமாரன்தம்பியை நேராகத் தாக்கியது.

"குமாரா! உனக்குத் திருப்தியாயிடுச்சா?"

"இதனாலெல்லாம் அவன் திருப்தியடையமாட்டான் அக்கா. தறவாடே மண்ணுக்குள்ள போனால்தான் அவன் திருப்தி அடைவான்" மகேஸ்வரிதங்கச்சி விசும்பியபடி கூறினார்.

கருகிப் போயிருந்த மருமகளின் உடலைப் பார்த்தான். அவனது நெஞ்சு தகர்ந்து விட்டது போல் தோன்றியது. துயரத்தை அடக்க முடியாதவனாகத் தரையில் உட்கார்ந்து கண்ணீர் உகுத்தான்.



விடியற்காலை வேளையில் சகோதரனுடன் வீட்டின் தென்புறமிருந்த மாமரத்தடிக்குச் சென்ற ராஜம்மா, இடிதாக்கி இறந்து விட்டதாக முதலில் நினைத்தனர். பிறகு யோசித்தபோதுதான் இடிவிழவில்லை, ஏதோ ஒரு துர்த்தேவதையின் தாக்குதலால் இறந்திருக்க வேண்டுமென்று யூகித்தனர். காரணம், அந்தப் பகுதியில் அன்று காலை மழையோ இடியோ மின்னலோ இருக்கவில்லை.

சூரக்காட்டுப் பட்டத்திரியின் சதி வேலைதான் இதற்குக் காரணம் என்று குமாரன்தம்பிக்குத் தோன்றியது. ஏதோ ஒரு துர்த்தேவதையின் துணையுடன் தனது பரம்பரையை வாரிசற்றுப் போகச்செய்யும் முயற்சியில் வெற்றி பெற்றிருக்கிறான். தன் மருமகன் கொச்சுராமனின் காலத்துடன் புத்தூர் கிளையின் மருமக்கத்தாயம் முடிவடைகிறது.

ஹனுமான் மந்திரத்தை அக்ஷரலட்சம் தடவை ஜபித்து, தான் கொடுத்திருந்த தாயத்தை, ராஜம்மா உடலில் கட்டிக் கொண்டிருந்தது குமாரன்தம்பிக்கு நினைவுக்கு வந்தது. மந்திரச் சரடு உடலில் உள்ளவரை எந்த ஒரு துர்த்தேவதையும் அவளைத் தொட்டிருக்க முடியாது. பிறகு எப்படி இது நிகழ்ந்தது? அவனுக்கு வியப்புத் தோன்றியது.

ஏறத்தாழ மத்தியான வேளையில் ராஜம்மாவின் இறுதிச் சடங்குகள் முடிவடைந்தன. அழுது அழுதே துவண்டு போயிருந்த கொச்சுராமனிடமிருந்து கொஞ்சங் கொஞ்சமாக விவரங்களைச் சேகரித்த குமாரன்தம்பி நடுங்கினான்.

விடியற்காலையில் தூங்கியெழுந்தவுடன் மாமரத்தின் அருகே செல்வது கொச்சுராமனின் வழக்கம். அக்கம்பக்கத்துக் குழந்தைகள் வந்து உதிர்ந்து கிடக்கும் மாங்காய்களைப் பொறுக்குவதற்குள், அவற்றைச் சேகரிப்பது கொச்சுராமனின் வழக்கம்.

அன்றும் அவன் வழக்கம்போல் மாமரத்தடியை நெருங்கினான். மாங்காய்களைப் பொறுக்கி எடுத்துக் கொண்டு வரும்போது சற்று உயரத்தில் கண்ணைக் கூசச் செய்யும் வெளிச்சத்தைப் பார்த்தான். அவனுக்கு வியப்பாக இருந்தது. ஒரு

பெரிய தீயுருண்டை அந்தரத்தில் சுழன்று கொண்டிருக்கிறது. வியப்புடன் வேடிக்கை பார்த்தபடி சற்றுநேரம் நின்றான். பிறகு வீட்டிற்குள் ஓடியவன் அக்காவை எழுப்பி விவரம் சொன்னான். சின்னப்பாட்டியிடமும் அவர்கள் செய்தியைத் தெரிவித்தார்களாயினும், நாமம் ஜபிப்பதில் கவனமாக இருந்த மகேஸ்வரி தங்கச்சி அதை அவ்வளவாகப் பொருட்படுத்தவில்லை. பொழுது விடிவதற்கு முன்னால் எந்தக் காரணத்தைக் கொண்டும் வீட்டிற்கு வெளியே போகக்கூடாது என்கிற பாட்டியின் கண்டிப்பையும் மீறி இருவரும் அந்த அதிசயக் காட்சியைக் காண விரைந்தனர்.

அட... என்ன அதிசயம்! ராஜம்மா மேற்புறம் பார்த்தாள். சுழன்றுகொண்டிருந்த நெருப்பு உருண்டையை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தபோது அது நிகழ்ந்தது. நெருப்பு உருண்டை கீழ்நோக்கி இறங்கியது. தனக்கு நேராக அது இறங்கி வருகிறது என்பதை உணர்ந்த ராஜம்மா, உரத்தகுரலில் அலறியபடி ஓடத்தொடங்கினாள். அதற்குள் அந்த நெருப்பு உருண்டை அவளது தலையைத் தொட்டு விட்டிருந்தது. அவள் தரையில் சரிந்தாள். நெருப்பு உருண்டை வெடித்துத் தெறித்தது. தீயில்வேகும் சகோதரியைக் கூப்பிட்டு அழத்தான் கொச்சுராமனால் முடிந்தது. தீயின் புகை வளையத்திற்குள் அகப்பட்ட அவனுக்கு மூச்சுத் திணறியதே தவிர, எந்தவிதமான தீக்காயமும் ஏற்படவில்லை.

குழந்தைகளின் அலறல் கேட்டு ஓடிவந்த மகேஸ்வரி தங்கச்சியும் வேலைக்காரியும் ராஜம்மாவின் கருகிய உடலைத்தான் காணமுடிந்தது. பயத்தால் மயக்கமடைந்திருந்த கொச்சுராமனும் அவளுக்கு அருகிலேயே கிடந்தான்.

ஒருநாள் குளத்தில் நீந்திக் குளித்தபோது ராஜம்மாவின் உடம்பிலிருந்து மந்திரித்த கயிறு தொலைந்து போனதை அவள் பாட்டியிடம் சொல்லாமல் மறைத்து விட்டதையும் தெரிவித்தான். அவனையும் யாரிடமும் சொல்லாதே என்று தடுத்தாளாம்.

ஒரு சில மாதங்களுக்கு முன்புவரை இப்படிப்பட்ட காரியங்களை முன்கூட்டியே தெரிந்து கொள்ளும் ஞானதிருஷ்டி தன்னிடம் இருந்ததை நினைத்தபோது அவனது நெஞ்சு



வேதனையால் துடித்தது. தன் மாந்திரீகஸித்திகள் எல்லாம் அழிந்துவிட்டதை அறிந்துகொண்ட சூரக்காட்டுப் பட்டத்திரி செய்திருக்கும் இந்த வஞ்சகக் கொலைக்குப் பழிவாங்க இப்போது தனக்கு வலுவில்லை.

'இல்லை... நீ ஒருபோதும் பலவீனன் அல்ல. மனித முயற்சியால் அடைய முடியாதது ஏதாவது இருக்கிறதா குமாரா? நீ மனப்பூர்வமாக முயற்சித்தால் உனக்கு மறுபடியும் மந்திரஸித்தி கிடைக்கும்!' மனத்திற்குள்ளிருந்து யாரோ உபதேசம் தருவதாகக் குமாரன்தம்பிக்குத் தோன்றியது.

முன்மாலை நேரத்தில் அவன் கிழக்கேடத்து வீட்டிற்குச் சென்று புகழ்பெற்ற ஜோதிடரான வாரியார் ஆசானைச் சந்தித்தான். விவரங்களைச் சொன்னான். சற்று நேரம் எதையோ யோசித்த வாரியார், தலையை ஆட்டியபடி சோழிகளைப் பரப்பினார். கணக்குப் போட்ட பிறகு சொன்னார்: "என் யூகம் சரிதான். துர்மூர்த்தியும் உக்கிரப் பிசாசினியுமான தூமாவதி உங்க மருமகளைக் கொன்னிருக்கு. மந்திரச்சரடின் சக்தியாலதான் ஆண் குழந்தை தப்பிச்சது."

மீண்டும் எதையோ யோசித்தபடி சோழிப்பிரஸ்னம் நடத்திய அவர் தொடர்ந்தார்: "உங்களோட எதிரியான ஒரு மந்திரவாதி வடயக்ஷிணியையும் தூமாவதியையும் ஏவியிருக்கிறார். உங்க காரியஸ்தரைத் தாக்கிக் கொன்னது வடயக்ஷிணி. இந்த இரண்டு துர்த்தேவதைகளும் இப்பவும் அந்த மந்திரவாதியின் கட்டுப்பாட்டிலதான் இருக்காங்க."

"நான் பத்ரகாளி சேவை தொடங்கலாம்னு நினைக்கிறேன். அதைத் தொடங்கப் பொருத்தமான நேரத்தை உங்களால சொல்ல முடியுமா?" குமாரன்தம்பி விண்ணப்பித்தான்.

ஜோதிடர் புன்னகைத்தபடி பதிலளித்தார்: "நீங்க பத்ரகாளியை உபாசிக்கிறதால எந்தவிதமான பிரயோஜனமும் கிடையாது தம்பீ. உங்களோட 'தெய்வாதீனம்' நஷ்டமாகியிருக்கு. குருவிடமிருந்து சாபம் வாங்கினவுடனே உங்களோட பாரம்பரிய ஸித்தியை முழுசா

இறந்துட்டிங்க. கருடன் உங்களுக்கு எதிராக மாறியிருக்கு. உங்க தாயாரின் பிரார்த்தனைகளாலதான் கிருஷ்ணப்பருந்து உங்களுக்குத் தொல்லை தராமல் இருக்கு. எப்படி இருந்தாலும் நீங்க கவனமா இருக்க வேண்டிய சந்தர்ப்பம் இது. வீட்டு எல்லைக்குள்ள நீங்க குடியிருத்தி வைச்சிருக்கிற யக்ஷிகிட்ட ரொம்பவும் எச்சரிக்கையா இருக்கணும்."

"நான் துர்த்தேவதைகளை உபாசனை பண்ணி மந்திரஸித்தி பெற முடியுமா?"

"நேரடியா ஒரு குருகிட்டேருந்து உபதேசம் பெறாம அதுவும் முடியாது. ஆனால், துர்மந்திரவாதத்தின் பக்கமா நீங்க போகாம இருக்கிறது நல்லது. அதிகமான ஆபத்துகளை வரவழைக்காம இருக்க உதவும்!"

குமாரன்தம்பி பயந்தே போனான். வாரியாராசானின் ஜோதிடம் ஒருபோதும் தவறியதில்லை. குருவின் சாபமேற்ற தனக்கு இனிமேல் எந்தவிதமான மந்திரஸித்தியும் கிடைக்காது என்றல்லவா சொன்னார்? துர்த்தேவதைகளைப் பிரத்தியட்சப் படுத்துவதற்குக்கூட ஒரு குருவின் உபதேசம் வேண்டும் என்பதல்லவா அவரது அபிப்பிராயம்!

எது வந்தாலும் சரி! பத்ரகாளி சேவையில் வெற்றி பெறுவதற்கு முயற்சித்தே தீரவேண்டும். வீட்டின் கிழக்குப் புறத்தில், சர்ப்பக்காவில் கட்டி முடித்திருக்கிற மந்திர மண்டபத்தில் உட்கார்ந்து இன்று இரவே காளி பூஜையைத் தொடங்க வேண்டியதுதான்.

அன்று மாலை நேரமானபோது கொச்சுபுத்தூர் வீட்டிற்கு வந்த குமாரன்தம்பியிடம் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி மிகவும் சோர்ந்த குரலில் சொன்னார்: "நான் இனிமேல் தறவாட்டிற்கு வரப்போறதில்லை குமாரா! உயிர்போற வரைக்கும் இங்கயே மகேஸ்வரியோட இருந்துடுறேன். பானுமதியையும் அழைத்துக் கொண்டு நீ புத்தூர் வீட்டிற்குப் போகலாம். உதவிக்கு பார்கவியும் இருக்காளே."



"பானுமதியை எங்க வீட்டுக்கு கூட்டிட்டுப் போறோம். அவள் மணிமங்கலத்திலேயே கொஞ்சநாள் இருக்கட்டும்!" கேசவன் நாயர் சொன்னார்.

"வேண்டாம் அப்பா. நான் அங்க வரமாட்டேன்!" பானுமதி உறுதியான குரலில் கூறினாள்.

குமாரன்தம்பி தடுமாறிப் போனான். தறவாட்டுக்கு வருவதில்லை என்கிற அம்மாவின் தீர்மானம் முற்றிலும் எதிர்பாராத ஒன்று. தான் மனைவியுடன் அங்கு வசித்துக் கொள்ளட்டும் என்பது அம்மாவின் திட்டமாக இருக்கும்.

மரணம் நிகழ்ந்த வீட்டிற்குள் காலெடுத்து வைக்க வேண்டிய துர்ப்பாக்கிய நிலை பானுமதிக்கு. கர்மதோஷியான தன்னைத் திருமணம் செய்து கொண்டவளுக்கு அதிர்ஷ்டம் எப்படி இருக்கமுடியும்? ஆபத்துகளின் கூத்துமேடையிலிருந்து மகளை அப்புறப்படுத்துவது கேசவன் நாயரது நோக்கம். ஆனால், அப்பாவின் வார்த்தைகளை மகள் ஒதுக்கிவிட்டாள். சொந்த வீட்டிற்கு உடனே திரும்புவதில்லை என்று அவள் உறுதியாகக் கூறிவிட்டாளே. கணவனது சுக-துக்கங்களில் பங்கு கொண்டு அனுபவிக்க விரும்பும் அவளது தியாக உணர்வு மரியாதைக்குரியதல்லவா? தனக்கு ஆறுதல் தர நல்லவேளை யாக ஒரு மனித உயிராவது இருக்கிறதே!

குமாரன்தம்பி உடனேயே பானுமதியுடன் புத்தூர் வீட்டிற்குப் புறப்பட்டான். பார்கவியும் அவர்களுடன் சேர்ந்து கொண்டாள்.

விளக்கு வைக்கும் நேரத்தில் அவர்கள் புத்தூர் வீட்டை அடைந்தனர். கிழக்குப்புறக் குளத்தில் இறங்கி மூழ்கிக் குளித்தபிறகு பானுமதி, பூஜையறைவாசலில் விளக்கை ஏற்றி நாமம் ஜபிக்கத் தொடங்கினாள்.

"நல்ல, அழகான பெண்! கடவுளே அதுக்கு இப்படிப்பட்ட ஒரு உறவா அமையணும்!" சமையலறை வாசலிலிருந்து எல்லா வற்றையும் கவனித்துக் கொண்டிருந்த பார்கவியம்மாள் தனக்குத்தானே பேசிக் கொண்டாள்.

குளித்துவிட்டு வந்த குமாரன்தம்பி சர்ப்பக்காவிலிருந்த மந்திர மண்டபத்தில் பூஜையைத் தொடங்கும் முயற்சியில், ஈடுபட்டான்.

"பானுமதி!" அவன் மனைவியை அழைத்தான். "இன்னிக்கு சர்ப்பக்காவு மந்திர மண்டபத்தில நான் ஒரு பூஜையைத் தொடங்குறேன். ஒருவேளை நான் நாளைக் காலையிலதான் திரும்பி வருவேன். உனக்குத் துணையா பார்கவி இருக்காங்களே. . ." மனைவியின் தாடையை வருடியபடி அவன் பேசினான். ஓர் அதிசய ஜீவனைப் பார்ப்பதுபோல் அவள், அவனை உற்றுப் பார்த்தாள். அவளது விழிகளில் நீர் நிறைந்தது.

ஒரு நிலவிளக்கு மற்றும் பூஜை சாமான்களுடன் புறப்பட்ட குமாரன்தம்பியை வருத்தத்துடனும், இரக்கத்துடனும் பார்த்துக் கொண்டிருந்த பானுமதியின் நெஞ்சுக்குள் நெருப்பு ஜுவாலைவிட்டு எரிந்து உயர்ந்து கொண்டிருந்தது.

சமையலறையை ஒட்டிய அறையில் சமையற்காரியின் படுக்கையை ஒட்டி பாய் போட்டுப் படுத்தாள் பானுமதி. ஆனால், தூக்கம் அவளைத் திரும்பிக்கூடப் பார்க்கவில்லை. அவளும் தூக்கத்தை வருந்தி அழைக்கவில்லை.

தன் துர்ப்பாக்கிய நிலையைக் குறித்து யோசித்த போது அவளது இதயம் கடுமையான வலியுடன் துடித்தது.

சுமங்கலியான அந்த விநாடியில் எப்படிப்பட்ட அழகான கனவுகள் மனத்திற்குள் அடுக்கடுக்காகக் கடந்து வந்தன? அவையெல்லாம் வீண் என்று உணர ஒருசில நாழிகைகள்தான் தேவைப்பட்டன.

திருமணம் முடிந்து கணவனுடன் கோயில் சன்னிதியை அடையவிருந்தபோது கேட்ட வார்த்தையே கணவன் வீட்டிலிருந்து வந்த மரணச் செய்திதான். மற்றவர்களோடு சேர்ந்து ஒரு பிணத்தைப் போல்தான் தன்னால் நடந்து செல்ல முடிந்தது.

முதலில் நுழைந்ததும் மரணம் நடந்த வீட்டுக்குள். கூட்டமாக அழுது புலம்பிக் கொண்டும், கிசுகிசுத்துக் கொண்டும் இருந்த மனிதர்கள் மத்தியில் தான் ஓர் அழையாவிருந்தாளியாக நிற்க



வேண்டியிருந்தது. புத்தாடைகளின் மெருகுகூடக் குலையாமல்! தீயில் வெந்து கருகி இறந்துபோன அந்தப் பெண் குழந்தையின் பிணம் ஒரு பயங்கரமான காட்சிதான்!

மரண வீட்டிலிருந்த பெண்களின் கேலிப் பேச்சுகளைக் கேட்டபோது தன் உடம்பே கூனிக் குறுகியது.

"புதுப்பெண் காலெடுத்து வைக்கிறதுக்குள்ளேயே வீட்டுக்காரப் பெண் உயிர் போயிருக்கு. . ."

"அவளைக் குத்தம் சொல்லி என்ன பயன்? பிரம்மச்சாரியான மந்திரவாதிக்கு பெண்ணைக் கொடுத்துக் கல்யாணம் செஞ்சு வைச்சாரே கேசவன் நாயர், அவரையில்ல சொல்லணும்."

இப்படி எத்தனை வார்த்தைகளை, அபிப்பிராயங்களை ஒவ்வொருவரும் கேலிக் குரலில் பேசித் தீர்த்தனர்!

தன் இதயத்தின் வேதனைகளை உணர்ந்ததாலோ என்னவோ, அப்பா உடனேயே தன்னை அழைத்துச் செல்லத் தீர்மானித்தார். திருமணமாகி வந்த முதல்நாளே கணவனது வீட்டைவிட்டுப் புறப்படுவது சரியல்ல என்று நினைத்ததால் அப்பாவின் வார்த்தைகளை மறுத்துப் பேச நேர்ந்தது.

திருமணமான முதல் நாளிலேயே கணவனை விட்டுப் பிரிந்து தனியாகப் படுத்துத் தூங்கும் இப்படிப்பட்ட ஓர் அனுபவம் வேறெந்தப் பெண்ணுக்காவது ஏற்பட்டிருக்குமா? திருமணத்திற்குப் பிறகு இதுவரையிலும் அவருடன் தனியாகக் கொஞ்ச நேரம் பேசிக் கொள்ளவோ, மகிழ்ச்சியாக இருக்கவோ சந்தர்ப்பம் கிடைத்ததா?

இரவில் சர்ப்பக்காவில் பூஜை நடத்தப் போனபோது அனுசரித்தோ, மறுத்தோ தான் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. தறவாட்டில் ஒரு விபத்து நடந்துவிட்ட இந்தச் சந்தர்ப்பத்தில் ஏதோ கடுமையான பூஜை ஒன்றை அவசியமாகவும் அவசரமாகவும் அவர் செய்ய வேண்டி இருக்கலாம்.

தான் ஒரு மாந்திரீகனது மனைவி. கணவனது எல்லைகளைப் புரிந்து கொண்டு வாழவேண்டும். வேறு என்ன செய்வது?

"இன்னும் தூங்கவில்லையா பானுமதி?" சமையற்காரி தலையை உயர்த்திக் கேட்டாள்.

"இல்லை பெரியம்மா!"

"வருத்தப்படுறதால எந்தவிதமான பலனுமில்லை மகளே! தலையெழுத்துப்படிதான் எதுவும் நடக்கும்!" பார்கவி ஒரு பெருமூச்சுடன் பதிலளித்தார்.

# 50

சர்ப்பக்காவில் கட்டிய புதிய மந்திர மண்டபத்தில் நிலவிளக்கை ஏற்றியபிறகு குமாரன்தம்பி காளிபூஜைக்கான யந்திரம் வரைந்தான். ஷட் கோணம், வெளியே மூன்று முக்கோணங்கள், அதற்கு வெளியே அஷ்ட தளபத்மம் (தாமரை இதழ் போன்ற எட்டு கோணம் வட்டத்தில் வரிசையாகப் போடுவது), இறுதியில் பூபுரம். வரிசைக் கிரமத்தில் கவனத்துடன் யந்திரத்தைப் போட்டு முடித்தபிறகு பத்மாசனத்தில் அமர்ந்து தியானம் செய்யத் தொடங்கினான்.

இரவு முழுவதும் தியானத்தில் இருந்தபடி மந்திரம் ஜபிக்க வேண்டும். நாளைக்கு ஏதாவது ஓர் உயிரைப் பலி கொடுத்து ஹோமம் நடத்த வேண்டும் என்று தீர்மானித்தவனாக கண்களை மூடி மந்திரம் ஜபித்தான்.

*ஸத்யச்சின்னசிர: க்ருபாணமபயம்*
*ஹஸ்தைர்வ்வரம் பிப்ரதீம்*
*ஹோராஸ்யாம் ஸிரஸாம் ஸ்ரஜாஸுசிரா*
*முன்முக்த கேசாவளீம்*
*ஸ்ருக்ய ஸ்ருக்ப்ரவஹாம் ஸ்மசான நிலயாம்*
*ஸ்ருத்யோ: ஸவாலங்க்ருதீம்*



*ஸ்யாமாகீம் க்ருதமேகலாம் சவகரை-*
*ர்த்தேவீம் பஜே காளிகாம்*

(அப்போதே வெட்டி எடுத்த மனிதத் தலை, வாள், அபய வரத முத்திரைகள் தரித்த நான்கு கைகள், பயமேற்படுத்தும் முகம், கழுத்தில் மனிதர்களின் தலைகளைக் கொய்தெடுத்துக் கோத்த மாலை, அவிழ்ந்து புரளும் தலைமுடி; இரண்டு கடைவாய்ப் பகுதியிலும் ஒழுகும் ரத்தம், இரண்டு காதுகளிலும் பிணங்களைக் குண்டலங்களாக அணிந்து, கறுத்த உடலுடன், வெட்டியெடுத்த மனிதக் கரங்களை இடுப்பில் ஆடையாக உடுத்து, மயானத்தில் குடிகொள்ளும் பத்ரகாளியே! உன்னை நான் வணங்குகிறேன்).

ஒரு தடவை மந்திரம் ஜபித்தான். அட்டகாசமான ஒரு கேலிச்சிரிப்பு பிரம்மாண்டமாக முழங்கியது. சட்டென்று கண்களைத் திறந்தான். மனத்தின் ஐகாக்ரியம் (ஒருமுகத்தன்மை) சிதைந்ததுடன், தியானத்திற்குத் தடை ஏற்பட்ட வருத்தத்துடன் அவன் காதைக் கூர்மையாக்கிக் கேட்டான். பப்புமாமாவின் சிரிப்பு! தன்னைக் கேலி செய்யும் சிரிப்பு! இடைவிடாத அந்த நையாண்டிச் சிரிப்பின் அலையலைகள், சர்ப்பக்காவு முழுவதும் பரவிக் கொண்டிருந்தன.

குமாரன்தம்பி மீண்டும் கண்களை மூடி மந்திர ஜபத்தைத் தொடர முயன்றான்.

"டேய், குருத்துரோகி! உனக்கு மந்திரஸித்தி கிடைக்கப் போறதில்லை." அசரீரியாக உயர்ந்தது பப்புமாமாவின் சாபக் குரல்.

ஒருகணம் திடுக்கிட்டாலும் மனோதைரியத்தை மீட்டெடுத்த குமாரன்தம்பி மறுபடியும் தியானத்தில் ஈடுபட்டான்.

மிகப்பயங்கரமான ஓர் அலறல் குரல் எழுந்ததும் அவன் பயத்துடன் கண்களைத் திறந்தான். ஹனுமானது அலறல் போல் தெரிந்தது. உடனே மனத்திற்குள் ஹனுமானை நினைத்தபடி தியானத்தில் ஈடுபட முயன்றான். அவ்வளவுதான், அலறலின் ஒலி உச்சகட்டத்தை அடைந்தது. சர்ப்பக்காவிலிருந்த மரங்கள் ஒட்டுமொத்தமாகக் குலுங்கின. மந்திரமண்டபமே குலுங்கியது.

நடுங்கத் தொடங்கிய மாந்திரீகன், பத்ரகாளியின் வடிவத்தை மனத்திற்குள் நினைத்தபடி கண்களை இறுக்கி மூடினான். காளியின் வடிவம் மனத்தில் படியவில்லை. படமெடுத்தபடி ஆடிக் கொண்டிருக்கும் ஐந்துதலை நாகத்தின் வடிவம் மனத்தில் சட்டென்று தோன்றி மறைந்தது. பாம்பின் சீற்றம் பேரிரைச்சலாகக் காதுகளில் முழங்கியது.

பப்புமாமாவின் அட்டகாசமான கேலிச் சிரிப்பு, ஹனுமானின் பயங்கரமான அலறல், ஐந்துதலை நாகத்தின் சீற்றம், சர்ப்பக்காவு, மந்திரமண்டபத்தின் குலுங்கல் உட்பட பயமேற்படுத்திய ஒலிக்கலவைகளுக்கு மத்தியில் சிக்கிக்கொண்ட குமாரன்தம்பிக்கு மூச்சுத் திணறியது. அவன் மனம் திகைப்பிலும், குழப்பத்திலும் உழன்று நிம்மதியற்றுத் தவித்தது.

சற்று நேரத்திற்குள் எல்லாச் சத்தங்களும் ஓய்ந்தன. ஒரு சிறிய மௌன இடைவேளைக்குப் பிறகு கருடனின் சிறகடியோசை முழங்குவதாகக் கேட்டது. மனத்தில் தோன்றிய குற்ற உணர்வுடன் கருட பஞ்சாக்ஷரீ மந்திரத்தை உருப் போட்டான்.

திடுமென்று பப்புமாமாவின் குரல் உயர்ந்தது. "ஆபத்தை வலிய வரவழைத்துக் கொள்ளாதடா... துரோகி! கிருஷ்ணப்பருந்தின் கோபத்தைக் கிளறாதே!"

"பப்புமாமா, என்னைக் கைவிட்டுடாதீங்க. என் தவறுகளையெல்லாம் மன்னிச்சு எனக்கு அருள்புரியுங்க!" - கூப்பிய கைகளுடன், கண்ணீர் உகுத்தபடி குமாரன்தம்பி மன்றாடினான். அதற்குப் பதில் அளிப்பதுபோல் பப்புமாமாவின் அட்டகாசமான கேலிச் சிரிப்பு மறுபடி முழங்கியது.

இவையெல்லாம் தனக்கு ஏற்படும் சோதனைகள். எனவே மனம் தளராமல் இவற்றை மீறி வெற்றி பெற்றே தீருவதென்று தீர்மானித்தவனாகக் கண்களை மூடித் தியான மந்திரத்தை ஜபிக்கத் தொடங்கினான். அப்போது எட்டுத் திக்கும் உடைந்து நொறுங்குவது போன்ற இடியோசை ஒலித்தது. தொடர்ந்து வலுவான சுழற்காற்று. புயல் மாதிரியான சூறைக் காற்று.



மின்னல்களும் வலுவான மழையும் தொடங்கியது. சர்ப்பக்காவையே அலைக்கழித்த காற்றின் கோரத்தாண்டவத்திற்கு 'பேய்மாரி' மழை தாளமமைத்தது.

நிலவிளக்கிலிருந்த திரிகள் அணைந்து போயிருந்ததால் மந்திரமண்டபம் இருளில் ஆழ்ந்தது. மழைத் தாக்குதலில் தெப்பமாக நனைந்த குமாரன்தம்பி கிடுகிடுவென நடுங்கத் தொடங்கினான். மந்திரஜபம் செய்து மனத்தின் பீதியை அகற்ற முயன்ற அவனது முயற்சிகள் வியர்த்தமாயின. பத்ரகாளியின் வடிவம் மனத்தில் எழும்பத் தயங்குவதாகத் தோன்றியது.

ஆழ்ந்த துயரத்துடன், கடுமையான ஏமாற்றமும் ஒன்று சேர்ந்து அவனது இதயத்தை உழுது கீறியது. குரு சாபத்தின் காரணமாக எந்த ஒரு மூர்த்தியையும் தன்னால் உபாசிக்க முடியாமலாகி விட்டிருக்கிற இயலாமை அவனைத் தகித்தது. தன் கடைசி எதிர்பார்ப்பும் தகர்ந்து விட்டதை உணர்ந்தான்.

இடியும், மின்னலும் மழையும் தொடர்ந்து கொண்டிருந்தன. உட்கார்ந்த நிலையிலேயே சிந்தனைகளில் ஆழ்ந்த குமாரன் தம்பியின் மனம் சோர்வடைந்தது. உடல் அசைவற்று மரத்துப் போனது போலானது. அவன் சுற்றுப்புறத்தை மறந்தான். இடம், நேரம் உட்பட எல்லாவற்றையும் மறந்தான். நேரம் நகர்வதையே அவனால் உணர முடியவில்லை.

பொழுது விடிந்தது. காற்று, மழை, இடி, மின்னல் எல்லாமே ஓய்ந்து விட்டிருந்தது. பறவைகளின் ஒலிகளைத் தவிர வேறு எந்தச் சத்தமும் கேட்கவில்லை.

பத்ரகாளி சேவையைத் தொடர்வதில் எந்தவிதமான பலனும் இல்லையென்று அவனுக்குத் தோன்றியது. 'பத்ரகாளியை மனம் கனியச் செய்ய வேறு என்ன வழி?' - அவன் தலையைக் குடைந்து தீவிரமாக யோசித்தான்.

சட்டென்று தலைக்குள் ஒரு புதிய வெளிச்சக்கீற்று தென்பட்டது. ஒரு குருவின் அனுக்கிரகத்தைப் பெற்றுவிட்டால் மீண்டும் மந்திரஸித்தி பெறலாம். யோகீஸ்வரரான புதுமனை தந்த்ரி அவனது

நினைவில் தட்டுப்பட்டார். அவரைச் சரணடைய வேண்டியதுதான். அபயமென்று வந்தவரைக் கைவிடாத நல்ல குணமுள்ளவர் அவர்!

நிலவிளக்கையும், பூஜைப் பொருள்களையும் எடுத்துக் கொண்டு வீட்டிற்குப் புறப்பட்டான். காலைக்கடன்களை விரைவாக முடித்துக் கொண்டு உடை மாற்றினான்.

கணவனின் சோர்வடைந்த தோற்றத்தைப் பார்த்து வருத்தத்திற்குள்ளான பானுமதி கேட்டாள்: "ராத்திரி பெஞ்ச மழையில முழுக்க நனைஞ்சிட்டிருந்திங்களா என்ன?"

"அதனால என்ன... பரவாயில்லை. நான் இதோ வந்துடுறேன்" - சொல்லியபடி வெளியே புறப்பட்டான்.

"பச்சைத்தண்ணிகூடக் குடிக்காமல் அப்படி எங்க இவ்வளவு அவசரமாப் போறீங்க?"

"ஒரு நல்ல காரியத்துக்காகப் போறேன். பின்னாலிருந்து கூப்பிடாத."

முற்றத்திற்கு வந்தவன் தென்புறமாக நடந்தான். கணவன் போவதையே பார்த்துக் கொண்டிருந்த பானுமதியின் கண்கள் நீரால் நிறைந்து வழிந்தன.

குமாரன்தம்பி புதுமனை இல்லத்தை நோக்கி நடந்தான். இல்லத்தின் படிப்புரையைத் தாண்டிய குமாரன்தம்பியின் மனம் ஒருகணம் பதறியது. மெதுவாக நடந்தவன் தென்புறமிருந்த தேவி கோயிலின் முன்புறத்தை அடைந்தான். கோயில் கதவு திறந்திருந்தது. தேவி திரிபுரசுந்தரியின் விக்கிரகத்தின்மீது பட்டாடை சாத்தப்பட்டிருந்தது. அவன் கருவறைக்கு முன்பாக சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான்.

இல்லத்தின் முன்புறத்தை நோக்கி நடந்தபோது குளப்புரை (குளக்கரையில் ஓடு வேய்ந்துள்ள கூரைப்பகுதி. குளிக்கச் செல்பவர்கள், குளித்துவிட்டு வருபவர்கள் உடை மாற்றப் பயன்படுத்தும் அறை)யிலிருந்து ஆதித்ய மந்திரம் காற்றில் தவழ்ந்து வந்தது. அவன் உடல் சிலிர்த்தது. பரமபக்தரான



புதுமனை தந்திரி நீரை அர்க்கியம் செய்தபடி ஆதித்ய மந்திர ஜபம் செய்து கொண்டிருந்தார்:

*சோணாம் போருஹ ஸம்ஸ்திதம்*
*த்ரிநயனாம் வேதத்ரயீ விக்ரகம்*
*தானாம் போஜயுகாபயானி தததம்*
*ஹஸ்தை: ப்ரவாளப்ரபம்*
*கேயூராம்கதஹார கங்கணதரம்*
*கர்ண்ணோல்ல ஸல்குண்டலம்*
*லோகோல்பத்தி வினாச பாலனகரம்*
*சூர்யம் கூணாப்தீம் பஜே*

(சிவந்த தாமரைப்பூவில் இருப்பவனும், முக்கண்ணனும் வேதமயமான உடலுடையவனும், மேற்புறமுள்ள இரண்டு கைகளில் தாமரைப் பூக்களையும், கீழ்ப்புறமுள்ள இடது கையில் அபயமும், வலது கையில் வரதத்தையும் தரித்து நான்கு கைகளுடன் இருப்பவனும், சிவந்த உடலொளி கொண்டவனும், கேயூரம், அங்கதம், மாலைகள், காதுகளில் குண்டலங்கள் போன்ற ஆபரணங்களை அணிந்தவனும், உலகத்தின் படைத்தல், காத்தல், அழித்தல் போன்றவற்றுக்குக் காரணமானவனும், சகல குணங்களின் இருப்பிடமுமான சூரியபகவானே உன்னை வணங்குகிறேன்.)

குளப்புரையிலிருந்து முற்றத்திற்கு வந்த தந்திரி அமைதியான குரலில் கேட்டார்:

"யாரது?"

"நான்தான் திருமேனி, புத்தூர்வீட்டு குமாரன்."

"ஆஹா! யாரது, புத்தூர் தம்பியா, வாங்க... வாங்க. உங்களைப் பார்த்து எத்தனையோ நாளாச்சே... இப்படி உட்காருங்க" - திண்ணையில் ஏறியபடி வந்தவரை உபசரித்தார்.

சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த தந்திரியின் முன்னால் சென்று அவரது பாதங்களைத் தொட்டு நெற்றியில் ஒற்றி வணங்கிய பிறகு குமாரன்தம்பி தழுதழுத்த குரலில் வேண்டினான்:

"என்னைக் காப்பாத்துங்க திருமேனி. என் ஸித்திகள் எல்லாம் அழிஞ்சுபோச்சு!"

சற்றுநேரம் சிந்தனையிலாழ்ந்த தந்திரி தொண்டையைக் கனைத்துக் கொண்டு பேசத் தொடங்கினார்: "தம்பிகிட்ட ஆரம்ப சூரத்தனம்தான் இருந்தது. ஆரம்ப காலத்தில் அமிதமான ஆவேசத்தோட நீங்க நடந்துட்டபோதே நான் உங்ககிட்ட உபதேசிக்கலையா, எச்சரிக்கையோட நடந்துக்கணும்னு? மனத்தைக் கீழ்ப்படுத்த முடியாமல் போனதுதான் எல்லாச் சிக்கல்களும் காரணம். இனி வருத்தப்பட்டு என்ன பயன்? நான் ஒரு விஷயத்தை மட்டும் சொல்ல முடியும். ஒரு நல்ல குடும்பஸ்தனா இனிமேல் வாழப் பாருங்க. அதுதான் நல்லது!"

"என் தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியத்தை நான் அழிச்சிட்டேன். அதை மீட்டு எடுக்க நீங்கதான் எனக்கு உதவணும் திருமேனி."

"கர்மபலத்தை அனுபவிச்சுத்தான் தீரணும். உங்களை நான் குறைசொல்லமாட்டேன். உங்க தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியம் முடிவு பெறணும்கிறதுதான் விதின்னு தோணுகிறது. நீங்க அதற்கு ஒரு கருவியாகியிருக்கீங்க... அவ்வளவுதான். கலிகாலமில்லையா? நாட்டின் மொத்த மாந்திரீகப் பாரம்பரியமே அழிய அதிக நாளாகாது."

"பத்ரகாளியைச் சேவிக்கணும்கிறது என் ஆசை. நீங்க என்னை சீடனா ஏத்துட்டு எனக்கு மந்திரோபதேசம் தந்தால் நான் தப்பிச்சிடுவேன் திருமேனி!"

"நல்லாச் சொன்னீங்க! மந்திரோபதேசம் தருவது அவ்வளவு சுலபம்னா நினைக்கிறீங்க? அது மட்டுமில்லை, புதுமனை இல்லத்தின் எனக்கு அடுத்த வாரிசுக்கு உபதேசம் அளிக்கத்தான் எனக்கு அதிகாரமிருக்கு. நான் சொல்றதைக் கொஞ்சம் கேளுங்கள். ஒருதடவை மந்திரஸித்தியை இழந்தவர்கள் அதோட அதை விட்டுடறதுதான் நல்லது."

"சூரக்காட்டு பட்டத்திரி எங்க தறவாட்டுக்குச் செஞ்சிருக்கிற துரோகங்கள் கொஞ்சநஞ்சமல்ல திருமேனி. உங்களுக்கும் தெரிஞ்சிருக்கும்."



"கொஞ்சமெல்லாம் நானும் கேள்விப்பட்டிருக்கேன். துர்மந்திரவாதியான பட்டத்திரிக்குக் கடவுளின் தண்டனை கிடைக்காம இருக்காது. அவரோட தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியமும் அழிவடையும் கட்டத்தை நெருங்கிடுச்சு. தீமையை விதைச்சவன் நன்மையை அறுவடை செய்ய முடியாது. அதுதான் தெய்வ விதி!"

"ஒரு யக்ஷி என்னை விடாமல் பிடிச்சிட்டிருக்கு. அவள் என்னைச் சபிச்சிருக்கிறா. அவளிடமிருந்து நான் தப்பிக்கவாவது எனக்கு ஒரு வழி சொல்லித் தாங்க திருமேனி!"

"நீங்க யக்ஷிகிட்ட நடந்து கொண்டதில தவறு ஏற்பட்டிருக்கு. அதாவது தவறா அதை நீங்க அணுகியிருக்கீங்க. அதுதான் எல்லாச் சிக்கல்களுக்கும் காரணம். ஒரே ஒரு வழிதான் இருக்கு. தேவியைப் பிரார்த்தனை செய்யுங்க. ஆனால், மந்திரஸித்தியை வேண்டிப் பிரார்த்திக்காதீங்க. பிரதிபலன் எதிர்பார்க்காம தேவியைப் பிரார்த்தனை பண்ணினீங்கன்னா தகுந்த பலன் ஏற்படும்கிற நம்பிக்கை மனசில ஏற்பட வேண்டும். பிரதிபலன், பழிவாங்குதல் போன்ற நினைவுகளை மனசிலிருந்து அகற்றுங்க. சித்தத்தைத் தூய்மையாக்கிட்டு தேவியைப் பிரார்த்தனை செய்யுங்க. கஷ்டங்களை எல்லாம் புவனேஸ்வரி விலக்கித் தருவாள். சரியான வழியில பிரார்த்தனை செஞ்சா மட்டுமே பலன் கிடைக்கும் கிறதையும் மனசில் இருத்திக் கொள்ளுங்க. நெருப்பால் எரிக்க முடியாத பொருள் என்ன இருக்கு? அதற்காக நெருப்பை நீரில் போட்டால் நீர் எரிந்துவிடாது; தீதான் அணையும். ஆனால், அப்படிப்பட்ட இடத்தில்கூட நெருப்பைப் பயன்படுத்தும் முறையில் பயன்படுத்தினால் நீரைக்கூட சூடாக்கி வற்றச்செய்ய முடியும். இதை மறக்காதீங்க."

தந்திரியை மறுபடியும் தாழ்ந்து வணங்கிவிட்டு வீட்டிற்குத் திரும்பினான். அவன் மனத்திலிருந்த ஏமாற்றம் அகலவில்லை. மாந்திரீகப் பதவியை மீட்டெடுப்பதிலும், சூரக்காட்டு பட்டத்திரிக்கு ஒரு பாடம் புகட்டுவதைக் குறித்தும் யோசித்தபடி குமாரன்தம்பி வீட்டை அடைந்தான். சிந்தனையின் பளுவைத் தாங்க முடியாமல் அவன் மனம் வெகுவாகச் சோர்ந்திருந்தது.

# 51

எவ்வளவு முயன்றும் பானுமதியால் தனது துயரத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ள முடியவில்லை. இதயத்திற்குள் ஓர் அக்னிகுண்டம் எரிந்து கொண்டிருப்பது போலிருந்தது.

கணவனுடன், அவனுக்குத் தொடர்பில்லாத ஓர் அன்னியப் பெண்போல் வாழ்வதைக் காட்டிலும் துரதிர்ஷ்டம் வேறு என்ன இருக்க முடியும்? தன் கழுத்தில் தாலி ஒன்றைக் கட்டியதைத் தவிர வேறு எந்தவிதமான தொடர்பும் அவர் தன்னுடன் வைத்துக் கொள்ளவில்லை அதன் காரணம் என்ன என்பதும் மனத்திற்குப் பிடிபடவில்லை.திருமணம் முடிந்து இன்றுடன் ஐந்து நாள்களாகின்றன. முதலிரவன்றே முக்கியமான பூஜை உள்ளதென்று சொல்லிச் சென்றவர் திரும்பி வந்தது மறுநாள் விடிந்தபிறகுதான்.

இரண்டாவது இரவுதான் எங்களைப் பொறுத்தவரை முதல் இரவு! இருந்தும் என்ன பிரயோஜனம்? தென்புற அறையில் உள்ள சப்ரமஞ்சக் கட்டிலில் படுத்திருந்தாலும் தன் உடம்பை அவர் தொட்டதுகூட இல்லை. அவரை ஒரு முறை இறுக அணைத்துக்கொள்ள வேண்டுமென்று மனத்துள் எழுந்த வேட்கைகூட வெட்கத்தில் கரைந்துபோனதால், அசையாமல் படுத்தபடி பொழுதை விடிய வைத்தோம்.

மூன்றாம் நாளிரவில் தனக்குச் சற்றுத் தைரியம் தோன்றியது. மௌனமாகப் படுத்திருந்த கணவனைக் கட்டி அணைத்தபடி கேட்டோம். "என்னைப் பிடிக்கலையா உங்களுக்கு?"

"நீ என் உயிராச்சே பானுமதி?" அன்பாகப் பேசி தன் முகம்... மார்பு என்று மாறி மாறி முத்தமிட்டு மூச்சுத்திணறச் செய்தார்.



மகிழ்ச்சியைத் தேடிப் பயணம் தொடங்கினோம். திடுமென்றுதான் அது நடைபெற்றது. அவர் சோர்ந்து போனார். மூச்சிரைத்தபடி மறுபுறம் திரும்பிப் படுத்துக் கொண்டார். கணவர்மீது கோபம் கோபமாக வந்தது.

நாலாவது இரவிலும் இதுவே தொடர்ந்தது. பார்வைக்கு உடல்நலமுள்ளவராகத் தோன்றும் இவருக்கு ஒரு மனைவியின் தேவை அவசியமில்லையோ? அப்படியானால் இவர் எதற்காகத் திருமணம் செய்துகொள்ள வேண்டும்? தன் வாழ்க்கையைப் பாழாக்கவா?

இன்று வெள்ளிக்கிழமை. விரதம் இருப்பதாகக் கூறி விடியற்காலையிலேயே தன்னிடமிருந்து ஒதுங்கியிருக்கிறார். 'இரவில் சமையற்காரியுடன் படுத்துக்கொள்!' என்று முன்னறிவிப்பும் தந்திருக்கிறார்.

மாலை நேரம் கடந்த பிறகும் விரதமிருப்பவர் தியானமோ ஜபமோ மேற்கொள்ளவில்லை. கல்யாணமாகி வந்தது முதல் ஒரு தடவைகூட அவர் தியானமோ, மாந்திரீகச் சடங்குகளையோ செய்து தான் பார்த்ததில்லை மாந்திரீகரைத் தேடிக் கொண்டும் யாரும் வரவில்லை. எல்லாம் வியப்பாகவே உள்ளன.

அவரது மாந்திரீக ஸித்திகள் அழிந்து விட்டதென்ற செய்தியைத் தானும் கேள்விப்பட்டோம். ஆனாலும் அதில் நம்பிக்கை ஏற்படவில்லை. இப்போது அது நம்பிக்கைக்கு உரிய செய்தியாகவே தோன்றுகிறது. பல பெண்களுடன் தொடர்பு கொண்டு பிரம்மச்சரியத்தை இழந்துவிட்டதாகவும் கேள்விப்பட்டோம். அதையும் தான் நம்பியதில்லை. தன் அழகில் மனம் மயங்கித் திருமணம் செய்து கொண்டவர் தன்னை நெருங்கவே பயப்படுகிறார்! ஒரு பெண்ணுடன் தொடர்பு கொள்வதற்கான தைரியமோ, உடல்திடமோ, மனவேட்கையோ இவரிடம் கிடையாது. இப்படிப்பட்ட மனிதர் பிரம்மச்சரியத்தை இழந்து விட்டார் என்பதை எப்படி ஒப்புக் கொள்வது? நம்ப முடியுமா என்ன?

படுக்கையறை ரகசியத்தை யாரிடமாவது சொல்ல முடியுமா என்ன? எவ்வளவு வெட்கக்கேடான விஷயம்?

கணவனாக முடியாத ஓர் ஆடவனுடன் ஒரு மனைவி எத்தனை நாள் மனைவியாக வாழமுடியும்? எத்தனை நாட்கள் இந்த வாழ்க்கையைத் தொடர முடியும்?

புத்தூர் வீட்டின் கிழக்குப்புற அறையில் உட்கார்ந்துகொண்டு தன் மோசமான தலையெழுத்தைப் பற்றி யோசித்து வருந்திக் கொண்டிருந்த பானுமதி, கணவனின் அழைப்பைக் கேட்டு, தென்புற அறைப் பக்கமாகக் கவனத்தைத் திருப்பினாள். தலைகுனிந்து தீவிரமான சிந்தனையிலாழ்ந்து கட்டிலில் உட்கார்ந் திருந்தான் குமாரன்தம்பி.

"கூப்பிட்டீங்களா?" அவனருகே வந்தவள் கேட்டாள்.

தலையை உயர்த்திய குமாரன்தம்பி, "எனக்கு இன்னிக்கு விரதம், அதனால ராத்திரி உபவாசம். நீ சாப்பிட்டு சமையல் அறைக்குப் பக்கத்து அறையில படுத்துக்க!" என்றான்.

மனத்திற்குள் பொங்கி வந்த கோபத்தை அடக்கிக்கொண்டு எழுந்த பானுமதி விருட்டென்று சமையலறையை நோக்கி நடந்தாள். கையில் அகப்பட்ட மெத்தென்ற ஓலைப்பாயைத் தரையில் விரித்துச் சுருண்டு படுத்தாள்.

"எதையாவது சாப்பிட்டுட்டுப் படுத்துக்கம்மா!" சமையற்காரி வற்புறுத்தினாள்.

"பார்கவியம்மா, நீங்க சாப்பிட்டுப் படுத்துக்கங்க. இன்னிக்கு அவருக்கும் எனக்கும் உபவாசம்!" பானுமதி பதிலளித்தாள்.

"நீங்க ரெண்டு பேரும் விரதம்னு பட்டினி கிடக்கும்போது நான் மட்டும் எப்படிம்மா சாப்பிடுறது? ஆனால், நான் ஒன்னு சொல்லட்டுமா? வெள்ளிக்கிழமையும் அதுவுமா இப்படிக் கொலைப்பட்டினி கிடக்குறது தோஷம்!"

"இருக்கட்டும் பெரியம்மா! இன்னும் என்ன தோஷம் வரவேண்டியிருக்கு? எப்படிப்பட்ட தோஷத்தையும் அனுபவிக்க வேண்டியது என் தலையெழுத்து. அதை இனிமேல் மாத்த முடியுமா?" பானுமதி விசும்பலுடன் அழுதாள்.



கதவுகளை மூடித் தாழிட்டுவந்த பார்கவி, பானுமதியின் அருகிலேயே பாயை விரித்துப் படுத்தாள்.

"லாந்தர் விளக்கின் திரியைக் குறைக்கட்டுமாம்மா?"

"குறைச்சுடுங்க!"

"குழந்தை பானுமதீ..." பார்கவி தாழ்ந்த குரலில் அழைத்தார்.

"என்ன பெரியம்மா?"

"நான் கேட்கிறேனேன்னு தப்பா நினைக்காதே! நீ உங்க வீட்டிலேயே கொஞ்ச நாள் இருந்துட்டு வர்றதுதானே! நேத்து உங்க அப்பா அம்மா வந்து அவ்வளவு தூரம் வற்புறுத்தியும் நீ ஏம்மா போகலை?"

"அவரும் என்கூட வந்திருந்தா நான் புறப்பட்டிருப்பேன். மருமகள் இறந்து பதினாறுநாள்கூட ஆகாததால அவர் வரமுடியாதுன்னு சொல்லிட்டார். அவர் இல்லாம நான் மட்டும் தனியாப் போறது சரியில்லையே பெரியம்மா" பானுமதி பெருமூச்சுடன் பேசினாள்.

நள்ளிரவு வரையில் திரும்பியும் புரண்டும் படுத்ததைத் தவிர பானுமதியால் உறங்க முடியவில்லை. நன்றாகக் குறட்டைவிட்டு உறங்கிய பார்கவியைப் பார்த்தபோது அவளுக்குப் பொறாமையாக இருந்தது!

கணவர் இந்நேரம் உறங்கியிருப்பாரோ? அவர் விளக்கை அணைததுவிட்டுப் படுத்து வெகுநேரமாகிறது. தனியாகப் படுத்துறங்க வேண்டும் என்பதற்காகத்தானோ தன்னிடம் விரதம் என்று கூறினார்?

காலடிச் சத்தம் நெருங்கி நெருங்கி வருவதை உணர்ந்தவுடன் பானுமதி காதுகளைக் கூர்மையாக்கிக் கொண்டு அசையாமல் படுத்தாள். கிழக்குப்புற அறையிலிருந்து யாரோ மெதுவாக நடந்து இந்தப் பக்கமாக வருகின்றனர். இது அவர்தான்! இந்த நேரத்தில் வேறு யார் வீட்டிற்குள் நடந்துவர முடியும்?

"பானுமதி தூங்கிட்டியா?" நடுக்கத்துடன் கேட்டது ஆண்குரல். தனது கணவனேதான்! எதற்காக அப்படிக் கேட்டார் என்பதை அறிய அவளுக்கு ஆர்வம் ஏற்பட்டது. எனவே உறங்கிவிட்டது போல அசையாமல் படுத்திருந்தாள்.

காலடியோசை அகன்று அகன்று... போனது. அவள் ஆச்சரியம் அடைந்தாள். ஒரு பூனை மாதிரிப் பதுங்கிப் பதுங்கி வந்து தூங்கிட்டியா என்று கேட்டுவிட்டு அவர் திரும்பிப் போவது ஏன்? அவளுடைய மனத்தில் இனம்புரியாத சந்தேகம் குடியேறியது.

தென்புற அறையில் விளக்கு எரிந்தது. அவள் கண்களைத் திறந்து அந்தப் பக்கமாகப் பார்த்தாள்.

ஒரு சிறிய நிலவிளக்கை ஏற்றி வைத்துவிட்டு இந்தப் பக்கமாகக் கவனிக்கிறார். எங்கே போகப் பார்க்கிறார்? அதிகரித்த இதயத் துடிப்புடன் அந்தக் காட்சியை ஊன்றிக் கவனித்தாள்.

நிலவிளக்கை எடுத்துக்கொண்டு தென்புறக் கதவை மெதுவாகத் திறந்து திண்ணைக்கு வந்த குமாரன்தம்பி சத்தம் எழுப்பாமல் கதவைச் சாத்தினான்.

அவளது உள்ளம் துடித்தது. இந்த நள்ளிரவில் கணவர் எங்கே போகிறார்? ஒருவேளை சர்ப்பக்காவில் ஏதேனும் பூஜை செய்ய வேண்டி இருக்குமோ? அதற்காகப் போகிறார் என்றால் ஏன் இப்படி ஒளிந்து மறைய வேண்டும்? தான் உறங்கிவிட்டோமா என்று சோதித்த பிறகு விளக்கை ஏற்றிக்கொண்டு எதற்காக வெளியே போக வேண்டும்? அதுவும் ஒரு திருடன் மாதிரி!

தனக்குத் தெரியாத ஏதோ ஒரு ரகசியம் கணவனிடம் உள்ளது. அதைத் தெரிந்துகொள்ளும் உரிமை தனக்கு உண்டு. பானுமதி மெதுவாக எழுந்தாள்.

பார்கவி நல்ல உறக்கத்திலாழ்ந்திருந்தார். லாந்தர் விளக்கின் திரியைச் சற்று உயர்த்திவிட்டு அத்துடன் தென்புற அறையை நோக்கி நடந்தாள். பிறகு கதவைத் திறந்துகொண்டு மெதுவாகத் தென்புறத் திண்ணையில் இறங்கினாள்.



நிலவிளக்கை எடுத்துக்கொண்டு தேங்காய் கிட்டங்கியை நோக்கி மெதுவாகச் செல்கிறார்! அதோ நிலவிளக்கைக் கீழே வைத்துவிட்டு அந்தக் கிட்டங்கியின் கதவைத் திறக்கிறார். பிறகு விளக்குடன் உள்ளே நுழைகிறார். கதவு மூடிக்கொள்கிறது!

தனியாக அந்தப் பக்கம் போவது ஆபத்து என்று கணவர் எச்சரித்திருந்தது நினைவுக்கு வந்தது. இந்தப் பக்கங்களில் இருட்டிவிட்டால் திருட்டுப்பயம் அதிகமாக உள்ளதால் வெளியே வரக்கூடாது என்றும், குறிப்பாக இந்தப் பக்கம் வரவே கூடாது என்றும் கூறியிருந்தார்.

'இப்போது அந்தப் பக்கமாகப் போனால் என்ன?' - அவள் யோசித்தாள். 'தேங்காய்க் கிட்டங்கிக்குள் அவர் இருக்கிறாரே, பயமேற்பட்டால் அவரைக் கூப்பிட்டுக் கொள்ள வேண்டியதுதான்!'

அவள் மெதுவாக முற்றத்திற்கு வந்து கிட்டங்கியை நோக்கி நடந்தாள். மனத்தில் பயம் சிறகடித்தது. உடல் சட்டென்று குளிர்வதுபோல் தோன்றியது. கால்கள் மரத்துப் போவதுபோல்... ஒருவிதமாக அவள் கிட்டங்கியின் முன்புறத்திற்கு வந்தாள்.

பானுமதி திடுக்கிட்டாள். கணவனும் வேறு ஏதோ ஒரு பெண்ணும் தாழ்ந்த குரலில் பேசிக்கொண்டிருக்கின்றனர்! உரத்த குரலில் ஒரு தடவை வாய்விட்டு அழவேண்டும் போலிருந்தது அவளுக்கு. அழகான மனைவியிடம் ஈடுபாடு கொள்ளாத கணவன், வேறொரு பெண்ணுடன் ரகசியத் தொடர்பு வைத்திருக்கிறார்!

இங்கு இப்போது சண்டை போடுவதால் எந்தவிதமான பயனும் இல்லை. மாலை நேரத்திற்கு முன்பாகக் கிட்டங்கியில் அவளைக் கொண்டுவந்து வைத்திருக்கிற கணவன், இந்த நள்ளிரவில் அவளை வெளியே அனுப்பிவிடப் போவதில்லை. ஒருதடவை தான் அவளைத் தனியாகச் சந்திக்க வேண்டும். தனது கணவனுடனான அவளது ரகசியத் தொடர்பு பற்றிய விவரங்களை முழுவதுமாகத் தெரிந்து கொள்ளவேண்டும்.

பானுமதி திரும்பி நடந்தாள். அவளுக்கு மூச்சிரைத்தது. வழியில் அவள் இரண்டு தடவை தடுமாறி விழப் பார்த்தாள்.

வீட்டின் தென்புறத் திண்ணையை அடைந்ததும் சோர்வால் அப்படியே உட்கார்ந்தாள்.

திண்ணையில் உட்கார்ந்தவாறே கிட்டங்கியை எந்த விதமான உணர்வுமற்றவளாகப் பார்த்துக் கொண்டிருந்தாள்.

கிட்டங்கியிலிருந்து வெளியே வந்த குமாரன்தம்பி கதவை மூடிப் பூட்டியபிறகு விளக்குடன் வடபுறமிருந்த குளத்தை நோக்கி நடந்தான். அவள் கவனித்தாள். மிகவும் சோர்வடைந்தவனைப் போல் இருந்தது அவனது நடை. கால்களை இழுத்து இழுத்து நடப்பதைப் போல் தோன்றியது. கரையில் விளக்கை வைத்துவிட்டுக் குளத்தில் இறங்கினான். உடலைச் சுத்தம் செய்யும் முயற்சி!

பானுமதி எழுந்தாள். தென்புறக் கதவைச் சாத்திய பிறகு விளக்குடன் படுத்திருந்த பழைய இடத்திற்கே வந்தாள். அவளுக்குள் கோபம் கொப்பளித்துக் கொண்டிருந்தது.

எப்படிப்பட்ட வஞ்சகம் இது! அக்னி சாட்சியாக கல்யாணம் செய்துள்ள மனைவியை ஒதுக்கி வைத்துவிட்டு, மற்றொரு அன்னியப் பெண்ணுடன் உறவு கொள்கிறார் மதிப்புக்குகந்த மந்திரவாதியான குமாரன்தம்பி! பொழுது விடிவதற்குள் இரண்டில் ஒன்று தெரியவேண்டும். நான்; அல்லது அவள். இரண்டு மனைவிகள் அவருக்குத் தேவையில்லை! விடியற்காலை வேளையில் மற்றவர்கள் கண்விழிப்பதற்கு முன்பாக அவர் போய் அவளை வெளியே அனுப்பவும் வாய்ப்பு உள்ளது. அதற்கு முன்பே தான் அவளைச் சந்தித்துப் பேச வேண்டும்.

தென்புறக் கதவுத் திறக்கும் சத்தம் கேட்டது. அவள் தன் கவனத்தை அந்தப் பக்கமாகத் திருப்பினாள். கதவை மூடித்தாழிட்ட குமாரன்தம்பி ஒரு முறை பானுமதி படுத்திருக்கும் அறைப் பக்கமாகப் பார்த்தான். பிறகு ஏதோ ஒரு பொருளை உட்புற நடு முற்றத்தின் தென்புறமிருந்த உத்திரக் கட்டை மீது வைத்தான். கொடியில் இருந்த வேட்டியை எடுத்து ஈரத்துணியை மாற்றிக் கொண்டான். விளக்கை அணைத்துவிட்டுக் கட்டிலில் ஏறிப் படுத்தான்.



நாழிகைகள் ஊர்ந்து நகர்ந்தன. தான் உறங்கிவிட்டோமா என்பதைச் சற்று நேரத்திற்கு முன் தன் கணவன் சோதித்ததைப் போல, இப்போது அவர் உறங்கிவிட்டாரா என்று தானும் சோதித்துப் பாங்பதென்று தீர்மானித்தாள்.

பானுமதி மெதுவாக எழுந்தாள். சத்தம் எழுப்பாமல் தென்புற அறையை அடைந்தாள். குறட்டைச் சத்தம் உயர்ந்து கொண்டிருந்தது. நல்ல தூக்கம்!

அவள் நடுமுற்றத்தின் உத்திரத்தின் மீது கையை வைத்துத் தேடிப் பார்த்தாள். சாவி ஒன்று கைக்குத் தட்டுப்பட்டது. எடுத்து வலதுகையில் வைத்துக்கொண்டாள்.

படுத்திருந்த பழைய இடத்திற்குத் திரும்பி வந்தவள் பாயில் உட்கார்ந்து யோசனையில் ஆழ்ந்தாள்.

கணவனது கள்ளக் காதலி கிட்டங்கிக்குள்ளே இருப்பது உண்மை. கிட்டங்கியைத் திறந்து தான் உள்ளே நுழைந்தால் ஒரு வேளை அவள் சண்டைக்கு வருவாளோ? அல்லது மனம்விட்டுத் தன்னிடம் உண்மை நிலையைப் பேசுவாளோ?

என்ன வேண்டுமானாலும் நடக்கட்டும். முழுவதும் நனைந்து விட்டோம்; குளித்துவிட்டே கரையேறிவிட வேண்டியதுதான். கிட்டங்கியின் கதவைத் திறக்காமல் முதலில் வெளியிலிருந்து அவளிடம் பேசுவோம். அதன்பிறகு உள்ளே நுழைவதா, வேண்டாமா என்பதைத் தீர்மானிக்கலாம்.

விடிவதற்கு நேரம் அதிகமில்லை; அவர் விழித்தெழுந்து உள்ளே இருப்பவளை வெளியே அனுப்புவதற்குள் அங்கு போய் விட்டு வந்துவிட வேண்டும். வேலைக்காரியும் எழுந்து விடுவாள். இல்லை, மேற்கொண்டு தாமதிக்க நேரமில்லை.

கைகளிலும், கழுத்திலுமிருந்த தங்க நகைகளை கழற்றி வைத்துவிட்டுப் போவது நல்லது. திருடர்களுக்குப் பயப்படுவது அதுபோலவே கணவரது வைப்பாட்டிற்கும் பயப்பட வேண்டும். தன் நகைகளைத் தட்டிப் பறிக்க அவள் முயலமாட்டாள் என்பது என்ன நிச்சயம்?

அவள் லாந்தர் விளக்கின் திரியை ஏற்றினாள். கைகளிலிருந்த வளையல்களையும், கழுத்திலிருந்த செயின்களையும் கழற்றித் தலையணையின் கீழே வைத்தாள். விளக்குடன் சமையலறை வழியாக வெளியே வந்த பானுமதி, வடக்குப்புறக் கதவை மெதுவாகத் திறந்து கொண்டு வெளி முற்றத்தை அடைந்தாள்.

குளத்தையொட்டி தென்புறமாக நடக்கத் தொடங்கிய போது பானுமதிக்கு ஒரு விஷயம் ஞாபகத்திற்கு வந்தது. நகைகளைக் கழற்றி வைக்கும்போது தாயத்தைக் கோத்திருந்த சங்கிலியையும் கழற்றி வைத்துவிட்டோம். எந்தக் காரணத்தாலும் தாயத்து உடலிலிருந்து பிரியக்கூடாதென்று அப்பா எச்சரித்திருந்தார். அவரும் எச்சரித்திருக்கிறார். இவ்வளவு தூரம் வந்த பிறகு இனிமேல் தாயத்தை எடுத்துப் போட்டுக்கொள்ளத் திரும்பிப் போனால் சமையல்காரி எழுந்து விடலாம். கணவரும் எழுந்துவிடலாம்.

வேண்டாம். திரும்பிப் போவது புத்திசாலித்தனமல்ல. கிட்டங்கியை நெருங்கி விட்டோம். ஏதாவது பயமேற்படுவது போல் இருந்தால் வீட்டுக்கு ஓடிவந்து விடலாம்!

கிட்டங்கியை நெருங்கிய பானுமதி இனிமையான திருவாதிரைப் பாட்டைக் கேட்டு அசைவற்று நின்றுபோனாள். கிட்டங்கிக்குள் இருப்பவள் தன்னை மறந்து பாடுகிறாள் என்று தோன்றுகிறது. பானுமதி பற்களை நறநறவென்று கடித்தாள்.

சட்டென்று பாட்டு நின்றது. "யாரது?" கிட்டங்கியிலிருந்து அன்புடன் வந்தது ஒரு கேள்வி.

பதில் சொல்லாமல் விளக்கை உயர்த்தி ஜன்னல் கம்பிகளின் இடைவெளி வழியாகப் பார்த்த பானுமதி வியந்தாள்!

நெஞ்சிற்குள் கூட்டக் குலவை ஒலி உயர்ந்தது. தான் காண்பது கனவா? கிட்டங்கியின் நடுவில் புன்னகைத்தபடி நின்று கொண்டிருந்தாள் ஒரு பேரழகி. இளம்பெண்! மனிதப் பெண்ணா அல்லது தங்கத்தால் வடித்தெடுத்த சிலையா? அவளது பாதங்கள் அசைந்தபோது சலங்கைகள் குலுங்கி நாதமெழுப்பின. பார்ப்பவர் யாராக இருந்தாலும் ஆசைப்படக்கூடிய அற்புத அழகு!



"உண்மையைச் சொல்லு. நீ யார்?" - பானுமதியின் குரல் கோபத்துடன் எழுந்தது.

"உங்க கணவரோட வைப்பாட்டி!" தேம்பி அழுதபடி அவள் தொடர்ந்தாள்; "அவர் இந்தக் கிட்டங்கிக்குள்ள போட்டு என்னைப் பூட்டி வைச்சிருக்கிறார். கதவைத் திறந்துட்டு உள்ளே வாங்களேன். நான் உங்ககிட்ட நிறைய விஷயங்களைப் பேசணும். பிறகுதான் நான் தப்பிக்கணும். எதுக்காகத் தயங்குகிறீங்க? நீங்களும் பெண்தானே, உள்ள வாங்க!"

"நீ எப்போ இதுக்குள்ள நுழைஞ்ச?"

"எல்லாத்தையும் விவரமா உங்ககிட்டச் சொல்கிறேன். சாவி உங்ககிட்ட இருக்கில்லையா... திறந்து உள்ள வாங்க."

பானுமதியின் மனம் இனந்தெரியாத பரபரப்பிலாழ்ந்தது. இவள் யாராக இருக்கக்கூடும்? தன்னிடம் சாவி இருப்பது இவளுக்கு எப்படித் தெரியும்? ஒருவேளை மாந்திரீக சக்தியுள்ள பெண்ணாக இருப்பாளா? சிரிப்பையும் அழுகையையும் மாறிமாறி வரவழைக்கும் இவள் ஒருவேளை பைத்தியக்காரியாக இருப்பாளோ?"

"பொழுது விடியப் போகுது. அவர் எழுந்திருக்கிறதுக்குள்ள கதவைத் திறந்துட்டு உள்ள வந்துடுங்க" - தீனமான குரலில் உள்ளிருந்தவள் விண்ணப்பித்தாள்.

அதற்குமேல் பானுமதி யோசிக்கவில்லை. எது வந்தாலும் சரி என்று கிட்டங்கியின் கதவைத் திறக்க முயன்றாள். சாவித் துவாரத்தில் சாவி நுழையவில்லை. விளக்கை அருகில் கொண்டு போய்ப் பார்த்தபோது ஒரு கறுப்புக் கயிறு சாவித்துளையை அடைத்தபடி குறுக்கும் நெடுக்குமாகக் கட்டி வைக்கப்பட்டிருந்தது. அவளுக்குக் கோபம் கோபமாக வந்தது. தன் கணவர் எவ்வளவு முன்னெச்சரிக்கையுடன் இப்படியெல்லாம் கதவைப் பூட்டி வைத்திருக்கிறார்?

அவள் கயிற்றை இழுத்து அறுத்து தூரத்தில் வீசி எறிந்தாள். பூட்டைத் திறந்தாள்.

கிட்டங்கியின் கதவைத் திறந்து மெதுவாக அதற்குள் நுழைந்தாள்!

## 52

விடியற்காலை வேளையில் பயங்கரக் கனவு கண்டு திடுக்கிட்டு விழித்த குமாரன்தம்பி கட்டிலில் எழுந்து உட்கார்ந்தான். பயம் அவனது மனத்தை 'அம்மானை'யாடிக் கொண்டிருந்தது!

எவ்வளவு பயங்கரமான கனவு - கிணற்றில் நீர் இறைத்துக் கொண்டிருந்த பானுமதி கிணற்றுக்குள் தலைகுப்புற விழுந்ததாக! யாரெல்லாமோ உதவிக்கு வந்து ஒருவிதமாக அவளைக் கிணற்றிலிருந்து வெளியே கொண்டு வந்தனர். மேலே கொண்டு வந்தது பானுமதியின் பிணமாகத்தான் இருந்தது.

திகைப்பிலிருந்து விடுபடாதவனாக அவன் அலறினான்; "பானுமதீ!"

பதிலாகக் கேட்ட கேலித் தொனியிலான அட்டகாசச் சிரிப்பு அவனை நடுங்க வைத்தது. பப்புமாமாவின் உரத்த குரலிலான சிரிப்பு!

"இது ஒரு தொல்லை!" - அவன் முணுமுணுத்தான். தான் துக்கப்படும்போதோ, பயந்திருக்கும்போதோ, ஆபத்தில் அகப்பட்டிருக்கும்போதோ உன்மத்தம் கொண்டவரைப் போல வாய்விட்டுப் பலமாகச் சிரிப்பது பப்புமாமாவிற்கு வழக்கமாகி விட்டது. மருமகனது மாந்திரீக ஸித்திகள் எல்லாம் அழிந்த பிறகுகூட மருமகனை சும்மா விடமாட்டேன் என்கிறார். என்ன ஒரு குரூரம்!

இம்முறை தழுதழுத்த குரலில் அவன் அழைத்தான். "பானுமதீ!" - பதில் குரல் வரவில்லை என்றதும் அவன் எழுந்து சமையலறையை நோக்கி நடந்தான்.

"பானுமதீ!"



பதில் இல்லை.

குறட்டை விட்டபடி உறங்கிக் கொண்டிருந்த சமையற்காரி, குரல் கேட்டு வாரிச் சுருட்டிக்கொண்டு எழுந்தார்.

"விளக்கு எங்கே?" - அவள் முணுமுணுத்தாள். பிறகு பானுமதி படுத்திருந்த பாயைத் தடவிப் பார்த்தது அழைத்தாள்; "பானுமதி, எழுந்திரும்மா. . . அவர் கூப்பிடுறார்."

பாய் காலியாகக் கிடந்தது. பார்கவி வியப்படைந்தாள். பானுமதி எங்கே போயிருப்பாள்? லாந்தர் விளக்கையும் காணவில்லை. ஒருவேளை முற்றத்துக்குப் போயிருப்பாளோ? பொழுது விடிவதற்கு முன்னால் கதவைத் திறந்து தனியாக வெளியேறும் வழக்கம் பானுமதிக்குக் கிடையாதே!

"பானுமதியைக் காணோமே!" - பார்கவி பரபரப்புடன் கூறினார்.

தென்புற அறைக்குச் சென்று மற்றொரு லாந்தரை ஏற்றிக் கொண்டு சமையலறையருகே வந்த குமாரன்தம்பியின் மனத்தில் ஆபத்து சங்கொலி எழுப்பியது.

"இங்கதானே படுத்திருந்தாங்க!" - பார்கவி வெறுமையாகக் கிடந்த பாயைப் பார்த்தபடி தடுமாற்றத்துடன் பேசினார்.

குமாரன்தம்பி சமையற்கட்டை நோக்கித் திரும்பியபோது அவனது வலதுகால் தலையணையைத் தட்டிவிட்டது. தலையணை விசையுடன் விலகியதில் ஏதோ கலகலக்கும் சத்தம். குமாரன்தம்பி கீழே பார்த்தான். அதிர்ந்தான். பானுமதி அணிந்திருந்த நகைகள்! குனிந்து நகைகளையெல்லாம் வாரினான். எதுவும் குறையாமல் எல்லா நகைகளும் இருந்தன. தாயத்து கோத்த சங்கிலி, தாலியிருந்த சங்கிலி எல்லாமே இருந்தன. பத்திரமாக அவற்றை மடியில் முடிந்தவனாகச் சமையலறையை அடைந்தபோது, கதவு விரியத் திறந்து கிடப்பதைப் பார்த்தான். திடுக்கிட்ட அவன் வடக்குப்புற முற்றத்திற்கு வந்தான்.

"பானுமதி... பானுமதி..." என்று உரத்த குரலில் அழைத்தபடி அவன் மேற்குப்புற முற்றம் வழியாக வீட்டை வலம் வந்தான். பார்கவியும் "பானுமதி" என்றபடி அவனைத் தொடர்ந்து வந்தார்.

கிழக்குப்புறக் குளக்கரையில் லாந்தர் ஒன்று எரிந்து கொண்டிருப்பதைப் பார்த்தபோது, குமாரன்தம்பி அந்தப் பக்கம் விரைந்தான்.

"மூடமதே ரண நாடகமாடுதல்..." - சன்னமான குரலில் தவழ்ந்து வந்த பாட்டின் பிறப்பிடம் குளத்தின் படிக்கட்டுகள் என்பது அவனுக்குப் புரிந்தது. அத்துடன் அவனது சப்தநாடிகளும் தளர்ந்தன.

குளத்தின் படிக்கட்டில் அவன் பார்த்த காட்சி... பாடியவாறே மகிழ்ச்சியில் திளைத்துக் குளித்துக் கொண்டிருந்தாள் பானுமதி!

குமாரன்தம்பியால் நாவையசைக்க முடியவில்லை. இதயச் சுவர்களுக்குள் பறையொலிகள் உயர்ந்தன. உடல் நடுங்கியது.

முனகலாகக்கூட ஒரு பாட்டுப் பாடத் தெரியாதவள், தாளம் தவறாமல் கதகளிப்பாட்டு பாடுகிறாள்! அதுவும் லக்ஷ்மிக்குட்டியின் குரலில்!

"பானுமதி, இந்தக் குளிர் நேரத்தில ரொம்ப நேரம் குளத்தில இருக்காதே. சீக்கிரம் கரையேறி வா!" - குமாரன்தம்பி சோர்வடைந்த குரலில் அழைத்தான்.

"ஐய்யய்யோ! நான் உடம்பு தேய்ச்சுக் குளிக்கிறதை வேடிக்கை பார்க்க வந்திருக்கீங்களா குமாரேட்டா? எனக்கு வெட்கமா இருக்கு! நீங்க போங்க; நான் உடனே வர்றேன்" - அவள் தண்ணீரில் பாய்ந்தபடி கிள்ளைக் குரலில் பேசினாள்.

எதையோ நினைவு கூர்ந்தவனாகக் கிட்டங்கியை நோக்கி நடந்தான். கிட்டங்கியின் முன்னால் வந்தவன் அசைவற்றுப் போனான். கிட்டங்கியின் கதவு விரியத் திறந்து கிடந்தது!

"பழிவாங்கிட்டியே லக்ஷ்மிக்குட்டி!" - அவனது குரல் அழுகையின் எல்லையைத் தொட்டது.

நடுமுற்றத்தின் உத்திரத்தில் வைத்திருந்த சாவியை எடுத்துக் கிட்டங்கியைத் திறந்தவள் பானுமதி என்பதை அவனால் நம்ப முடியவில்லை. அவள் எப்படிச் சாவி இருக்குமிடத்தைத் தெரிந்து



கொண்டாள்? கிட்டங்கிக்கு அவள் வரக் காரணம் என்ன? யக்ஷி, பானுமதியின் உடம்பிற்குள் புகுந்து கொண்டதாகத் தெரிகிறதே?

நேராக வீட்டிற்கு வந்த குமாரன்தம்பி உத்திரத்தில் சாவி வைத்திருந்த இடத்தில் தேடினான். சாவி அங்கு இல்லை! இனிமேல் யோசிக்க வேண்டியதில்லையென்று அவனுக்குத் தோன்றியது. பானுமதிதான் சாவியை எடுத்துக் கொண்டுபோய் கிட்டங்கியைத் திறந்திருக்கிறாள். விஷயம் தெரியாமல் பானுமதி, பூட்டில் கட்டியிருந்த கயிற்றை அறுத்து எங்காவது வீசி எறிந்திருப்பாள். தருணம் பார்த்துக் கொண்டிருந்த யக்ஷி சட்டென்று அவள் மீது பாய்ந்து, அவளைப் பிடித்திருக்கும். யக்ஷி, அவளைக் கொல்லாமல் விட்டு வைத்திருப்பதே அதிர்ஷ்டம்தான்!

என்ன செய்யலாம்? பானுமதியின் உடம்பிலிருந்து யக்ஷியை விரட்ட நல்ல ஒரு மாந்திரீகனால் மட்டுமே முடியும். மந்திரசித்தியை முழுவதுமாக இழந்துவிட்ட தான் அதைப் பற்றி யோசிப்பதில் அர்த்தமில்லை. தனக்கு அந்த வல்லமை கிடையாது. புத்தூர் மாந்திரீகன் சொந்த மனைவியை மற்றொரு மாந்திரீகனிடம் அழைத்துச் சென்று உபாதையை அகற்றக் கோரும் கேடுகெட்ட நிலை வந்திருக்கிறதே! கடவுளே! இது எப்படிப்பட்ட சோதனை?

"என் தேவியே... மஹாமாயே! எனக்கு ஏன் இந்தச் சோதனை? என்னை அழிச்சுட்டுத்தான் ஓய்வேன்கிறது, ஜகதீஸ்வரியே உன் முடிவா?" துயரம் தாங்க முடியாதவனாகக் கைகளைக் கூப்பி அவன் இறைஞ்சினான். அப்படியே அசையாமல் நிற்பதைத் தவிர அவனால் வேறு எதுவும் செய்ய முடியவில்லை.

குளித்துவிட்டு முற்றத்துக்கு வந்த பானுமதி அங்கு திக்பிரமை பிடித்து நின்றுபோயிருந்த பார்கவியிடம் கேட்டாள்; "என்னக்கா சௌக்கியம்தானே?"

"என்னம்மா என்னைத் திடீர்னு அக்கான்னு கூப்பிடுற?" - பார்கவி குழம்பினாள்.

"நான் குமாரேட்டனோட மனைவியா இருந்தாலும் நாமெல்லாம் சொந்தக்காரங்க இல்லையாக்கா?" - பானுமதி கேட்டாள்.

பார்கவி வியப்படைந்தாள். 'இந்தப் பெண் திடுமென்று என்னவெல்லாம் பேசுகிறாள்! மணிமங்கலத்து வீட்டாருடன் எனக்கு என்ன உறவு இருக்கிறது? இதற்கென்ன பைத்தியமா?'

வடக்குப்புற முற்றத்தில் பலா மரத்தடியில் சாய்த்து வைத்திருந்த விளக்குமாற்றை எடுத்து முற்றத்தைப் பெருக்கத் தொடங்கிய பானுமதியை, பார்கவி தடுத்தாள். "முற்றத்தைப் பெருக்க குஞ்ஞுச்சிருத வந்துடுவாள். அவள் வரலேன்னாக்கூட நான் பெருக்கி விடுறேன்" - என்றபடி விளக்குமாற்றை அவளிடமிருந்து பிடுங்க முயன்றாள்.

பானுமதியின் போக்கு திடீரென்று மாறியது. "இந்தா பாரும்மா, விளக்குமாத்தை விடு. இந்த வீட்டில என்னென்ன வேலைகளை நான் செய்யணும்கிறதை நானே தீர்மானிச்சுக்கிறேன். பொழுது விடியப் போகுது. போய்ப் பாத்திரங்களைத் துலக்கி வையுங்க."

"ஏங்க... தம்பி! இங்க வாங்களேன். நான் சொல்லச் சொல்லக் கேட்காம பானுமதியம்மா முற்றத்தைப் பெருக்குறாங்க!" - பார்கவி உரத்த குரலில் கூறினாள்.

குமாரன்தம்பி முற்றத்திற்கு வந்தான்.

"பாருங்க தம்பி... நான் எவ்வளவு தடுத்தும் கேட்காம பானுமதியம்மா முற்றத்தைப் பெருக்குறாங்க" - பார்கவி புகார் செய்தாள்.

"பானுமதி விளக்குமாத்தைக் கீழே போடு. நீ முற்றத்தைப் பெருக்க வேணாம்!" குமாரன்தம்பி உத்தரவிட்டான்.

அப்போதும் பெருக்குவதைத் தொடர்ந்த பானுமதி கூறினாள்: "எத்தனை நாள் நான் பெருக்கின முற்றம் இது! குமாரேட்டா, இன்னிலேருந்து நான்தான் முற்றத்தைப் பெருக்குவேன்."

"அதோ குஞ்ஞுச்சிருத வர்றா. விளக்குமாத்தை அவகிட்டக் கொடுத்துவிட்டு கைகாலைக் கழுவிவிட்டு வா பானுமதி".



குமாரன்தம்பி விண்ணப்பித்தான். பானுமதி அதைப் பொருட்படுத்தவில்லை. திருவாதிரைப் பாட்டு ஒன்றை ராகத்தோடு முனகியபடியே அவள்பாட்டுக்குப் பெருக்கிக் கொண்டிருந்தாள்.

"ஐயோ, இதென்ன கொச்சு தம்புராட்டி, இப்படியெல்லாம் செய்றீங்க? விளக்குமாறைக் கீழே போடுங்க. நான் பெருக்கிடுறேன்" - அப்போது முற்றத்துக்கு வந்து குஞ்ஞுச்சிருத பணிவுடன் சொன்னாள்.

தலையை உயர்த்திய பானுமதி, குஞ்ஞுச்சிருதயைக் கடுமையாகப் பார்த்தாள். அந்தப் பார்வையைத் தாங்க முடியாத சிருத ஒதுங்கி நின்றாள்.

பானுமதியின் நடவடிக்கைகளைக் கவனித்த குமாரன் தம்பிக்கு ஒரு விஷயம் தெளிவாகப் புரிந்தது. பானுமதியின் மூலமாக இந்த வீட்டில் வாசம் செய்வதுதான் இந்த யக்ஷியின் திட்டம்.

முற்றத்தைப் பெருக்கி முடித்த பிறகு பானுமதி கைகால்களைக் கழுவினாள். சமையலறைக்கு வந்தவள் அவசர அவசரமாகச் செப்புத் தவலையை எடுத்துக்கொண்டு கிணற்றடிக்கு விரைந்தாள். நிமிட நேரத்துக்குள் அது நிறைய நீரிறைத்தாள். திண்ணையில் நின்று கொண்டிருந்த பார்கவி இந்தக் காட்சியை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள்.

நீர் நிறைந்த செப்புத்தவலையை அனாயாசமாகச் சமையலறைக்கு எடுத்து வந்த பானுமதியை சமையற்காரி பயத்துடன் பார்த்தாள். அவளது மனம் திகைப்பால் பொங்கியது. 'இதெல்லாம் அவராகவே செய்வதல்ல; ஏதோ ஒரு உபாதை இவரைப் பீடித்திருக்கிறது. அது என்னவோ நிச்சயம்!'

"நீங்க ஏன் கண்ணை உருட்டி உருட்டி என்னைப் பாக்குறீங்க?" - பானுமதி சமையற்காரியை அதட்டினாள்.

"அதிசயங்களைப் பார்த்து அசந்துபோனதாலதாம்மா!"

"அப்படின்னா ஒண்ணு செய். இங்கிருந்துட்டு எந்த அதிசயத்தையும் பார்க்க வேண்டாம். முதல்ல இங்கிருந்து போ."

இதைக் கேட்டுப் புன்னகைத்தபடி நின்று கொண்டிருந்த பார்கவிக்கு நேராகக் கொள்ளிக்கட்டை ஒன்றை ஓங்கிக் கொண்டு வந்த பானுமதி அலறினாள்: "சமையலறையிலிருந்து வெளியேறுடி. சமையலறை வேலைகளை நான் பார்த்துக்கிறேன். சாப்பாட்டு நேரத்துக்கு உன்னைக் கூப்பிடும்போது வந்தா போதும்."

சத்தத்தைக் கேட்டு அங்கு வந்த குமாரன்தம்பி கண்டது, சம்கார ருத்ரையைப் போல் நிற்கும் பானுமதியின் முன்னால், பயந்து நடுங்கி நிற்கும் சமையற்காரியைத்தான்.

"பார்கவியம்மா, நீங்க கொஞ்ச நேரம் ஒதுங்கி இருங்க" - குமாரன்தம்பி சொன்னான். பார்கவி நீர் நிறைந்த கண்களுடன் திண்ணைப் பக்கமாகப் போனாள்.

"வாடி இங்க" - அவன் பானுமதியை அழைத்தான். தென்புறமாக அவன் நடக்கத் தொடங்கியதும் பானுமதியும் அவனைத் தொடர்ந்தாள்.

தென்புற அறைக்கு வந்த குமாரன்தம்பி பழைய மந்திரப் பிரம்பைக் கையில் எடுத்தான். அதைப் பார்த்த பானுமதி வாய்விட்டுச் சிரித்தாள்.

"ஒரு நாயை அடிக்கக்கூட அந்தப் பிரம்பு உதவாது, குமாரேட்டா. அதால அடிச்சா எனக்கு வலிக்கும்னா நினைக்கிறீங்க?"

"நீ எதுக்காக இங்க வந்த?"

"உங்களோட புது மனைவி என்னைப் பார்க்க வந்தா. நானும் கூடவே வந்துட்டேன்."

"போகட்டும். அவ உடம்புலேருந்து நீ பிரிஞ்சு போகணும்!"

"என்னைவிட உங்களுக்கு அவகிட்ட அதிக அன்பு. அப்படித்தான?"

"நீ யக்ஷி. அவள் மனுஷப்பெண். அவளை நீ தொல்லைப்படுத்தக் கூடாது!"

"நான் யக்ஷியானதுக்கு யார் காரணம்?"



"உன்கிட்ட என்னால வாதாட முடியாது. நீ போறயா, இல்லையா?"

"போகமாட்டேன் குமாரேட்டா! என்னை விரட்டுறதுதான் உங்க நோக்கம்னா நான் இவளையும் கூட்டிட்டுதான் போவேன். இது சத்தியம்!" - குரலை உயர்த்திச் சொன்ன அவள் சமையற்கட்டை நோக்கி நடந்தாள். சற்று நேரங்கழித்துத் தானிய அறையைத் திறந்து ஒரு செப்புத் தவலை நிறைய நெல்லை நிறைத்து அதை ஒரு பூக்கூடையை எடுத்துச் செல்வது போல் முற்றத்துக்குக் கொண்டு போனாள்.

பானுமதியை நெருங்கிய குமாரன்தம்பி கேட்டான்: "என்ன இதெல்லாம்?"

வடக்குப்புற முற்றத்திலிருந்த அடுப்பில் தவலையை வைத்துத் தண்ணீரை ஊற்றிய பானுமதி கூறினாள்: "நெல் அவிக்கப் போறேன். அரிசி தீரப்போகுது."

பானுமதிக்குத் தெரியாமல் சமையல்காரியிடமும், குஞ்ஞுச் சிருதயிடமும் சைகை காட்டிவிட்டு குமாரன்தம்பி முற்றத்திற்கு வந்தான்.

தென்புற முற்றத்திற்கு வந்த இரு பெண்களிடமும் குமாரன்தம்பி ரகசியக் குரலில் கூறினான்: "அவளை ஏதோ ஆவி பிடிச்சிருக்கு. அதுதான் தொல்லை தருது. நான் புதுமனைத் தந்திரியைப் பார்த்துட்டு உடனே வர்றேன். நான் திரும்பி வர்றது வரைக்கும் அவளை பத்திரமாகப் பார்த்துக்கங்க. அவள் என்ன சொன்னாலும் எதிர்த்துப் பேசாமலிருந்தா போதும்."

"ஐயோ, எங்களுக்குப் பயமா இருக்குது!" - இருவரும் ஏககாலத்தில் ஒரே குரலில் கூறினார்கள்.

"நீங்க பயப்படவேணாம். அவ உங்களை ஒண்ணும் செய்யமாட்டாள். நான் உடனே வந்துடுறேன்" அவசர அவசரமாகச் சொல்லிவிட்டுத் தெருவில் காலெடுத்து வைத்தான்.

அவன் திடுக்கிட்டது சட்டென்றுதான். எங்கிருந்தோ பாய்ந்து வந்த பானுமதி அவனைப் பின்புறமாகப் பிடித்து இழுத்தாள். அவளது முகத்தில் குரூரம் பரவியிருந்தது.

"எங்க போறீங்க?" அவனை வெறித்துப் பார்த்தபடி கேட்டாள்.

"கோயில் வரைக்கும்.. உடனே வந்துவிடுவேன்" - அவன் பதுங்கினான்.

"என்கிட்டயே உங்க வேலையைக் காட்டுறீங்களே! என்னை விரட்டுறதுக்காக, மந்திரவாதியைப் பார்க்கப்போறிங்க இல்லையா?"

"நான்..."

குமாரன்தம்பி தடுமாறுவதைக் கண்ட பானுமதி வாய்விட்டுச் சிரித்தாள். சிரித்து முடித்ததும் சொன்னாள்: "கண்டிப்பா நீங்க போகத்தான் வேணும்னா போய்ட்டு வாங்க. அதுக்கு முன்னால ஒரு உதவி செய்றீங்களா?"

"என்ன வேணும் சொல்!" அன்பு கொண்டவன்போல் குழைந்த குரலில் கேட்டான்.

தன் கழுத்தைத் தடவிக் கொண்டு அவள் சொன்னாள்: "அந்தத் தாலியை எடுத்து என் கழுத்தில கட்டிட்டுப் போங்க. என்னோட இந்த ஒரேயொரு ஆசையை நிறைவேத்துங்க."

"அதுக்கென்ன தாராளமா... இது ஒரு கஷ்டமான வேலையா? தாலி மட்டுமில்ல எல்லா நகைகளையும் உனக்குப் போட்டுவிடுறேன்."

"வேண்டாம். அந்த மாங்கல்யத்தை மட்டும் எடுத்து என் கழுத்தில கட்டுங்க. அப்புறம் மந்திரவாதியை கூட்டிட்டு வந்து என்னைப் பந்தனம் செய்யவோ, விரட்டியோ விடுங்க" - அவளது விழிகளில் நீர் நிறைந்தது. விசும்பியபடி அவள் வீட்டிற்குள் போனாள். கிழக்குப்புற அறையருகே சப்பணமிட்டு உட்கார்ந்த அவள் சொன்னாள்: "குஞ்ஞுச்சிருதயும், பார்கவியம்மாவும் இப்படி வாங்க. குமாரேட்டன் என் கழுத்தில தாலி கட்டும்போது நீங்க குலவையிடணும்!"



வீட்டுக்குள் வந்த குமாரன்தம்பி, நகைக் கூட்டத்திலிருந்து தாலியை மட்டும் பிரித்தெடுத்தான். ஒரு நிமிடம் யோசித்தான். புதிய வழி எதையோ ஒன்றைக் கண்டுபிடித்ததைப் போல் ஒரு முறை சுற்றுமுற்றும் பார்த்த பிறகு தாயத்து கோத்திருந்த சங்கிலியையும் எடுத்தான்.

ஒரு புன்சிரிப்புடன் பானுமதி இருந்த திண்ணைக்கு வந்த குமாரன்தம்பி அவளருகில் உட்கார்ந்து மாலையை அணிவிக்க முயன்றான். திடுக்கிட்டுத் திமிறிப் பாய்ந்து எழுந்த பானுமதி முற்றத்தின் பக்கமாக ஓடினாள். அவள் அலறினாள்: "நீங்க ஒரு வஞ்சகன்! உங்க கையால என் கழுத்தில ஒரு தாலிகட்டிக்க நான் ஆசைப்பட்டேன். ஆனால் என்னை அழிக்கிறதுக்காக நீங்க கொலைக்கயிறோட வந்திருக்கீங்க!"

"நீ தவறாப் புரிஞ்சிட்டிருக்கிற. இதோ பார் இது தாலிதான்" - தாலியை மட்டும் உயர்த்திக் காட்டியபடி அவனும் முற்றத்துக்கு வந்தான்.

"புத்தூர்வீட்டு குமாரன்தம்பி இந்த யக்ஷிகிட்டயா விளையாடுறார்? மகிஷமர்த்தினி தாயத்துள்ள மாலையும் உங்க கையில இருக்கு. என்னை அழிக்கிறதுதான உங்க திட்டம்?" - கிணற்றை நோக்கி ஓடியபடி அவள் அலறினாள்.

பிடித்துவிடும் நோக்கத்தில் குமாரன்தம்பியும் அவளை நோக்கிப் பாய்ந்தான். கிணற்றின் சுற்றுச் சுவரருகே அவளைத் தொட்டும் தொடாமலும் நெருங்கிய நிலையைக் குமாரன்தம்பி அடைவதற்குள் அவள் கிணற்றின் மையப்பகுதியிலிருந்த மர உருளையைப் பிடித்தபடி கிணற்றுக்குள் தொங்கினாள். பற்களை நெரித்தபடி அவள் அவனை வெறியுடன் உற்றுப் பார்த்தாள்.

"கூடாது லக்ஷ்மிக்குட்டி. நீ என்ன சொன்னாலும் அப்படியே செய்றேன்" - குமாரன்தம்பி தீனக்குரலில் அவளிடம் யாசித்தான்.

அலறலின் வேடமணிந்த ஓர் அட்டகாசச் சிரிப்புடன் அவள் மர உருளையைப் பிடித்திருந்த பிடியைச் சட்டென விட்டாள். மறுவிநாடி ஆழமான கிணற்றின் உள்புறமாக அவள் விசையுடன் விழுந்தாள்.

குமாரன்தம்பி அலறி அழுதபடி வேகமாகக் கிணற்றில் குதித்தான். குஞ்ஞுச்சிருதயும், பார்கவியும் உரத்த குரலில் அலறினர்.

சத்தம் கேட்டு அண்டை அயலார் சிலர் ஓடி வந்தனர். கிணற்றுக்குள் குதித்துத் தேடும் குமாரன்தம்பிக்கு உதவ மேலும் இரண்டு இளைஞர்கள் கிணற்றில் இறங்கினா.

அவர்கள் மூவருமாகத் தேடிப் பிடித்து, கிணற்றுக்கு வெளியே கொண்டு வந்தது பானுமதியின் உயிரற்ற உடலைத்தான்!

# 53

துயரத்தின் மனித வடிவங்களைப்போல் புத்தூர் வீட்டை நோக்கிப் பாய்ந்து வந்த மணிமங்கலத்து கேசவன் நாயரும், அவரது மனைவியும் அவர்களுடைய செல்ல மகளின் பிண உடலைப் பார்த்த கணத்திலேயே மயங்கிவிழுந்தனர். பயந்து நடுங்கி, மூச்சுத் திணறிக்கொண்டிருந்த பார்வையாளர்கள் எவராலுமே அவர்களை ஆறுதல்படுத்த முடியவில்லை.

மதியத்திற்கு முன்பாக பானுமதியின் உடலுடன் கேசவன் நாயரும் அவரது உறவினர்களும் மணிமங்கலத்தை நோக்கிப் புறப்பட்டனர். குமாரன்தம்பி ஒரு நடைப்பிணமாக அவர்களைப் பின்தொடர்ந்தான்.

துயரத்தின் கனம் தாங்காதவர்களாகப் புத்தூர் வீட்டின் கிழக்குப்புறத் திண்ணையில் உட்கார்ந்து கண்ணீர் சிந்தி அழுது கொண்டிருந்தனர் குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியும், மகேஸ்வரி தங்கச்சியும். பாட்டிகளின் அருகில் அமர்ந்து கேவிக் கொண்டிருந்தான் கொச்சுராமன்.

உறவினர்களும் ஊராரும் புறப்பட்டுச் சென்றபிறகு மகேஸ்வரி தங்கச்சி தனது சகோதரியிடம் சொன்னார்: "நாமளும் புறப்படலாமே? எதுக்காக இங்க உட்கார்ந்திருக்கணும்?"



"மருமகளோட சவ அடக்கம் முடிஞ்சு குமாரன் வந்தபிறகு நாம புறப்படலாம்" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கூறினார்.

"அவன் வரட்டும்... வராமல் போகட்டும். அதுக்காக நான் இங்க காவலிருக்க முடியாது. நானும் கொச்சுராமனும் புறப்படுறோம். நீங்க வர்றதானால், வாங்க" மகேஸ்வரித் தங்கச்சி புறப்படுவதற்காக எழுந்தார்.

"மகேஸ்வரி, குமாரன் எல்லாருக்கும் மோசமானவனா - வேண்டாதவனா இருந்தாலும் என்னால அவனை அப்படி ஒதுக்கிட முடியுமா? அவனைப் பத்தி நினைக்கும்போது நெஞ்சு வெடிக்குது" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி தேம்பி அழத் தொடங்கினார்.

"அக்கா அழாதீங்க. ஒரு தாய் மனசை என்னால் உணர்ந்துக்க முடியும். அக்கா, நீங்க வேணும்னா ஒண்ணு பண்ணுங்க. கொஞ்ச நாள் இங்கயே இருங்க. குமாரனும் தனியாத்தானே இருக்குறான்."

"நான் இங்க இருக்கிறதா? முடியாது மகேஸ்வரி... இந்த ஜன்மத்தில நான் இங்க இருக்க முடியாது. குமாரன் வந்ததுமே நாம புறப்படலாம். அதுவரையிலும் கொஞ்சம் பொறு!"

முற்றத்தில் நின்றிருந்த பார்கவியும் குஞ்ஞுச்சிருதயும் குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் அருகே வந்தனர்.

"நான் வீட்டுக்குப் போறேன் அம்மச்சி! என்னால மேற்கொண்டும் இங்கு இருக்க முடியாது." பார்கவி வெளிப்படையாகப் பேசினாள்.

"நானும் கிளம்புறேன்..." குஞ்ஞுச்சிருதயும் கூறினாள்.

"நான் எதுவும் சொல்ல விரும்பலை. உங்களுக்கு எப்படித் தோணுதோ அப்படி செய்யுங்க" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி அசிரத்தையாகப் பதிலளித்தார்.

"பாட்டி, எனக்குப் பசிக்குது!" கொச்சுராமன் பாட்டியிடம் சொன்னான்.

கொச்சுராமனைக் கட்டியணைத்த மகேஸ்வரிதங்கச்சி கூறினார்: "உன் மாமா வரட்டும். அதுக்குப் பிறகு நாம வீட்டுக்குப் போய் சாப்பிடலாம்!" பிறகு குஞ்ஞுச்சிருதயின் பக்கம் திரும்பிக் கேட்டார்: "அந்தப் பக்கம் யாராவது இருக்காங்களா? குழந்தைக்கு ஒரு இளநீர் போடறதுக்கு."

"நிறையப் பேர் இருக்காங்க. என் மகன் குஞ்ஞுப்பணிக்கனும் நிக்குறான். இருங்க... உடனே இளநீர் போடச் சொல்றேன்" குஞ்ஞுச்சிருத வடக்குப்புறம் போனாள்.

சற்று நேரத்திற்குள் குஞ்ஞுச்சிருதயும், குஞ்ஞுப்பணிக்கனும் மூன்று செவ்விளநீரைக் கொண்டு வந்தனர். குஞ்ஞுப்பணிக்கன் வெட்டிக் கொடுத்த இளநீரைக் குடித்துச் சோர்வு நீங்கிய பாட்டிகளும் பேரனும் தென்புறத்தையே பார்த்துக் கொண்டிருந்தனர்.

குமாரன் தம்பி வந்தபோது மாலை நேரம் தாண்டியிருந்தது. மகனது மோசமான கோலத்தைக் கண்ட குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் மனம் துயருற்றது.

"நாங்க புறப்படட்டுமா குமாரா?" தாய், மகனிடம் விடைபெற்றார்.

"செய்யுங்க அம்மா!" குமாரன்தம்பி எந்தவிதமான உணர்ச்சியுமற்றுப் பதிலளித்தான்.

"பார்கவியும் போறேன்னு சொல்றாள். ஆமாம், இனிமேல் நீ மட்டும் எப்படித் தனியா இருக்க முடியும்? ஒண்ணு செய், சாப்பாட்டுக்கு நீ அங்க வந்துவிடு. மத்ததெல்லாம் இங்கயே நடக்கட்டும்."

"வேணாம்மா. இந்த வீட்டைவிட்டு நான் எங்கயும் போக மாட்டேன். சாகிறவரை இங்கயேதான் இருப்பேன். என் சாப்பாட்டைப் பத்தி நீங்க கவலைப்படாதீங்க" குமாரன்தம்பியின் குரல் உடைந்திருந்தது.

அம்மாவும், சித்தியும், மருமகனும் நடந்து போவதை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்த குமாரன்தம்பியின் இதயத்தில்



வேதனை தளமமைத்தது. புத்தூர்வீட்டை இருள் சூழ்ந்து ஆட்படுத்திக் கொண்டதை அவன் உணரவில்லை. ஒரு கற்சிலை மாதிரி அப்படியே நின்றுவிட்டிருந்தான்.

"எஜமான் தம்பி!" - என்கிற அழைப்பு குமாரன்தம்பியை விழிக்கச் செய்தது. திரும்பிப் பார்த்தான்

"யார், கோபாலனா?"

"ஆமாங்க..."

"உன் கையில இருக்கிறது என்ன?"

"கொஞ்சம் பழங்களும் பிசைஞ்ச அவலை (அளவான உப்பு கலந்து நீர் தெளித்து, துருவிய தேங்காயப் பூவுடன் குழைத்த அவல்)யும் கொண்டு வந்திருக்கேன்."

"கோபாலா, நீ முதல்ல உள்ளே போய் விளக்கேத்து. நான் குளிச்சுட்டு வர்றேன்!"

கோபாலன் நிலவிளக்கை ஏற்றி கிழக்குப்புறத் திண்ணையில் கொண்டுவந்து வைத்தான். லாந்தர் விளக்கை ஏற்றித் தென்புறத் தளத்தில் வைத்தான். அதற்குள் குமாரன்தம்பி குளித்துவிட்டு வந்தான்.

கோபாலனது வற்புறுத்தலினால் அவன் கொண்டுவந்த பழங்களைத் தின்று தண்ணீர் குடித்தான்.

"எனக்கு இனி யாருமே கிடையாது கோபாலா!" - குமாரன்தம்பி சோகமான குரலில் கூறினான்.

"நீங்க கவலைப்படுறதைப் பார்த்தா அதை என்னால தாங்கிக்க முடியாது. நானும் மீனாக்ஷியும் எங்களோட இரண்டு குழந்தைகளும் உங்க அடிமைங்க. எங்களில் எந்த ஒருத்தர் உயிரோட இருக்கிறவரையில உங்களுக்கு எந்தக் காரியத்திலும் துணையா இருப்போம்."

"கோபாலா, நீதான் இன்னிலேர்ந்து இந்த வீட்டுக் காரியஸ்தன். மீனாக்ஷி சமையற்கட்டைக் கவனிச்சுக்கட்டும். உங்க வீட்டைக் கவனிச்சுக்க கோமதி இருக்கிறாளில்லையா?"

"நீங்க என்ன சொல்றீங்களோ அப்படியே நடந்துக்கிறோம். இப்பவே மீனாக்ஷியைக் கூட்டிட்டு வர்றேன்."

"இன்னிக்கு வேண்டாம் கோபாலா! இன்னிக்கு இனிமேல் நீ எங்கயும் போகவேண்டாம். நாம இன்னிக்கு இங்கயே இருந்துடலாம்."

"உங்க விருப்பப்படியே!" - கோபாலன் தலையாட்டினான்.

இரவில் குட்டப்பமாரார் வந்தார். ஒரு சொம்பு நிறையப் பாலும், ஒரு பெரிய பொட்டலத்தில் பலகாரங்களையும் கொண்டு வந்திருந்தார்.

இம்முறை மாராரின் வற்புறுத்தலுக்காக குமாரன்தம்பி பலகாரங்களையும், பாலையும் சாப்பிட்டான்.

"நீங்க ரெண்டு பேராவது எனக்குத் துணையா இருக்கீங்களே!" - குமாரன்தம்பி தழுதழுத்த குரலில் கூறினான்.

நள்ளிரவு தாண்டிய பிறகு குட்டப்பமாரார் விடைபெற்றார். கஞ்சா போதையில் மூழ்கிவிட்டிருந்த கோபாலன் கிழக்குப்புறத் திண்ணையில் சுருண்டு படுத்தான்.

வழக்கம் போல் தென்புற அறைக்குள் சப்ரமஞ்சத்தில் படுத்த போதிலும் குமாரன்தம்பிக்கு உறக்கம் வரவில்லை. தனக்கு நேர்ந்துவிட்ட துயரங்களை நினைத்துக் கண்ணீர் உகுத்தான். அவன் மனத்தில் சூரக்காட்டுப் பட்டத்திரியும், லக்ஷ்மிக்குட்டியும் கடந்து வந்தனர். அவனது துயரங்கள் ஒட்டுமொத்தமாகக் கோபமாக மாறியது.

தன் காரியஸ்தரையும், மருமகளையும் அநியாயமாகக் கொன்ற துர்மந்திரவாதியையும், தன் உயிருக்குயிரான பானுமதியைக் கிணற்றில் தள்ளிக் கொன்ற யக்ஷியையும் பழிவாங் காவிட்டால் தான் உயிருடன் இருந்து என்ன பயன்? இப்போதே வீட்டாருக்கும் ஊராருக்கும் தான் கேலிக்குரிய ஒரு மனிதனாகி விட்டோம். பானுமதியின் இறுதிச்சடங்குகளின்போது,



அங்கிருந்தவர்கள் அனைவரும் வெறுப்புடன் தன்னைக் கவனித்தனர். மணிமங்கலத்திலிருந்து உடல் குன்றியவனாகத்தான் வெளியேறினோம்.

எவரையும் குற்றம் கூறும் யோக்கியதை தனக்கு இல்லை. பெற்ற தாயே தன்னைக் கைவிட்டுவிட்ட நேரமிது!

ஒரு ஜன்மத்தில் இரண்டு பிறவி! அதுதானே தனது அனுபவம்? கெட்டிக்கார மாந்திரீகனாகப் புகழ் பெற்றிருந்த தான், இன்று ஊராரின் ஒட்டுமொத்த மரியாதையையும் இழந்து விட்டிருக்கிறோம்!

தன்னை மதித்துக் கௌரவித்தவர்கள் எல்லாரும் இன்று தன்னை ஒதுக்கித் தள்ளுகிறார்கள். தன்னைப் புகழ்ந்து வாழ்த்திய வர்கள் இன்று தனக்கு எதிராகத் தூற்றிக் கொண்டிருக்கிறார்கள். வலுவுள்ளவனாக இருந்த நான் இன்று வலுக்குன்றி விட்டிருக்கிறேன்!

தன்னால் பயன் பெற்றவர்கள்கூட இப்போது தன்னை வெறுக்கிறார்கள். பெரும்பாலான மனிதர்கள் நாய்களைவிட மோசமான விலங்குகள். நாய்களுக்காவது நன்றி காட்டும் இயல்பு உண்டு. நன்றியே இல்லாத அவதார மூர்த்திகள்தான் மனிதர்கள்!

தன்னிடம் மந்திரஸித்தி இருந்த காலத்தில் ஊராருக்கெல்லாம் தான் வணக்கத்திற்குரியவனாக இருந்தோம். மந்திரஸித்தி போனவுடன் ஊராருக்கு வேண்டாதவனாகி விட்டோம்.

மொத்தத்தில் தன்னுடன் இப்போதும் நட்புக் கொண்டிருப் பவர்கள் கோபாலனும், குட்டப்பமாராரும் அவர்களது குடும்பத்தினரும் மட்டும்தான்.

சிந்தனைகளின் உச்சியிலிருந்த குமாரன்தம்பி தூக்கமெனும் தாழ்வாரத்தில் வழுக்கி விழுந்தது விடியற்காலை வேளையில்தான்.

சரியாக ஒருநாழிகை நேரமே அவன் தூங்கினான். சட்டென்று திடுக்கிட்டெழுந்த அவன் சுயநினைவு இல்லாதவனைப் போல்

தனக்குத்தானே பேசிக் கொண்டான்: "மகாத்மாவே, என்னை உங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள்... உங்கள் சீடனாக ஏற்றுக் கொள்ளுங்கள். உங்கள் ஸித்திகளில் ஏதாவது ஒன்றை எனக்குத் தாருங்கள்."

பகல்நேர வெளிச்சம் அவனை நனவுலகுக்கு இழுத்து வந்தது. அவன் முணுமுணுத்தான்: "ஓஹோ நான் அவரைச் சந்திச்சது கனவிலா?"

அவனது மனத்திலிருந்து அந்தக் கனவுக் காட்சி மறையவில்லை. தான் கண்ட கனவுக்கு யதார்த்தத்தின் உயிர்த்தன்மை இருந்ததாக அவன் மகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தான்.

என்ன ஓர் அழகான கனவு! இடது கையில் ஒரு துணி மூட்டை. வலது கையில் வெள்ளிப்பூண் வைத்த மந்திரப் பிரம்புடன் வலுவான உடற்கட்டு வாய்ந்த வயதான ஒரு மாந்திரீகன் தனக்கு முன்னால் தோன்றினார். அவர் கேட்டார்: "குமாரா! நீ மறுபடியும் மாந்திரீகனாக வேண்டுமா... அப்படியானால் வா! நான் உன்னைச் சீடனாக ஏற்றுக் கொள்கிறேன். சூரக்காட்டு பட்டத்திரியையும், அந்த யக்ஷியையும் பழிவாங்க வேண்டாமா?"

கனவில் காட்சியளித்த வயதான மாந்திரீகன் யார்? இரக்கத்தை ஏற்படுத்தினாலும் கம்பீரம் துள்ளிக் குதிக்கும் முகம், தீப்பொறி பறக்கும் கண்கள். நரைத்துப் போன தாடியும், மீசையும்! வயதான போதும் கட்டுக்குலையாத உடல்!

நடுநடுவே பைத்தியக்காரத்தனமான சேட்டைகள் புரிந்தும், வாய்விட்டுச் சிரித்துக் கொண்டுமிருந்த அவர், நிச்சயம் அமானுஷ்யமான வல்லமை கொண்ட புனிதராகத்தான் இருக்க வேண்டும்.

அவரை இதற்கு முன்னால் எங்கேயோ பார்த்திருப்பதுபோல் தோன்றுகிறது. எங்கே? எப்போது?

நினைவுகளின் படிகளில் மேற்புறமாக ஏறிய மனம், ஒரு குறிப்பிட்ட படியை அடைந்ததும் பாதங்களை அங்கேயே ஊன்றியது.



திருவிலஞ்ஞால் கோயிலின் கிழக்குப்புறமிருந்த மேடையில் - பத்ரகாளியை வணங்கி, தீயாட்டுவிழா பார்த்துவிட்டுத் திரும்பும் போது கேட்ட குரல்! - திரும்பிப் பார்த்தபோது தட்டுப்பட்ட உருவம்!

ஆமாம்! மேடையின் ஓர் ஓரத்தில் கூனிக்குறுகியிருந்த வயதானவர் தன்னை அழைத்தது நினைவுக்கு வருகிறது. நான் அன்று அவரைப் பொருட்படுத்தாமல் திரும்பியபோது அவர் சொன்ன வார்த்தைகள் இப்போதும் காதில் முழங்குகின்றன. "நீ இப்போது போகலாம்; ஆனால், விரைவிலேயே நீ என்னைத் தேடிவருவாய்!"

சந்தேகமே இல்லை! அவரைத்தான் கனவில் பார்த்தோம். அதே உருவம்... அதே உணர்ச்சிகள்... அதே குரல்!

நான் உடனே அவரைப் பார்க்க வேண்டும். தன் கஷ்ட காலத்துக்கு ஒரு முடிவு கட்டும் வல்லமையுள்ள சித்தர் அவர்தான் என்று தன் மனத்தில் உறுதியான நம்பிக்கை ஏற்படுகிறது.

"எஜமான், நான் போய் மீனாக்ஷியைக் கூட்டிட்டு வர்றேன்" தூங்கி எழுந்து, குமாரன்தம்பியிடம் வந்த கோபாலன் சொன்னான். குமாரன் அதைச் செவிமடுக்காமல் முனகிச் சம்மதித்தான். அவனது மனத்தில் அந்த வயதானவரின், வடிவத் தியானம் நடந்து கெண்டிருந்தது.

சற்று நேரங்கழித்து கோபாலன் மீனாக்ஷியுடன் வந்து சேர்ந்தான்.

"என்ன, இன்னுமா கட்டில்லேருந்து எழுந்திருக்காம இருக்கீங்க?" - கோபாலன் வியப்புடன் கேட்டான். குமாரன்தம்பி அப்போதும் பழையபடி வெறுமே முனக மட்டுமே செய்தான்.

வந்து நுழைந்தவுடனேயே சொந்தவீட்டைப்போல் மீனாக்ஷி வீட்டு வேலைகளில் ஈடுபட்டாள். கோபாலனும் பழக்கப்பட்ட காரியஸ்தனைப்போல் நடந்து கொண்டான். எல்லாவற்றையும் சுவாரஸ்யமற்றுக் கவனித்த குமாரன்தம்பியின் இதயம் அஞ்ஞாதமான (அறிமுகமற்ற) அந்த வயதானவரிடமே லயித்திருந்தது. அவனது காதுகளில் அவரது குரல் மறுபடி மறுபடி

முழங்கிக் கொண்டே இருந்தது. "நீ விரைவிலேயே என்னைத் தேடி வருவாய்!"

எவ்வளவு விரைவில் முடியுமோ அவ்வளவு விரைவில் பெரியவரைச் சந்திக்க வேண்டுமென்று உறுதி கொண்டான். வேக வேகமாகக் காலைக்கடன்களை முடித்தான். மீனாக்ஷி பரிமாறிய பால்கஞ்சியைக் குடித்த பிறகு உடைமாற்றிக் கொண்டான்.

"எங்க போறீங்க?" - கோபாலன் கேட்டான்.

"அவசியமா ஒரு இடம்வரைக்கும் போக வேண்டி இருக்கு. திரும்பி வர்றதுக்குக் கொஞ்ச நேரமாகலாம்" - குமாரன்தம்பி பதிலளித்தான்.

மீனாக்ஷி கணவனைக் கடிந்து கொண்டாள்: "அவரைத் தனியாவா விடுறீங்க? நீங்களும் கூடப் போங்க."

குமாரன்தம்பிதான் இதற்கும் பதிலளித்தான்: "நான் தனியா போகப் போறேன். கோபாலன் என் கூட வரவேண்டாம்."

அவன் திருவிலஞ்ஞால் கோயிலை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

## 54

கோயில் மைதான மேடையில் முதியவரை எதிர்பார்த்துச் சென்ற குமாரன்தம்பி கண்டது என்னவோ அங்கு விளையாடிக் கொண்டிருந்த சிறுவர்களைத்தான். குழந்தைகளிடம் அந்த முதியவரைப் பற்றி விசாரித்தான். தெளிவான பதில் எதுவும் கிடைக்கவில்லை. அவன் கோயிலுக்குள் நுழைந்தான்.

பிராகாரத்துக்குள் போகும் கதவு மூடியிருந்தது. விடியற்கால பூஜைகள் முடிந்துவிட்டதால் 'சாந்திமார்' (கோயில் பூசாரிகள்)



இல்லங்களுக்குச் சென்று விட்டனர். வைரமனை இல்லத்துக்குச் சொந்தமான திருவிலஞ்ஞால் கோயிலில் சாந்தி (பூஜை) நடத்துபவர்கள் இல்லத்துப் போற்றிமார்கள். கோயில் ஊழியர்கள் வேறெவரையும்கூட அங்கு காண முடியவில்லை.

வைரமனை இல்லத்துக்குப் போக வேண்டுமென்று குமாரன்தம்பி தீர்மானித்தான். அந்த முதியவரைப் பற்றிய விவரம் கோயில் பூசாரிக்குத் தெரியாமல் இருக்காது என்று குமாரன்தம்பிக்கு உறுதியாகத் தோன்றியதால், கிழக்குப்புறமாக வைரமனை இல்லத்தை நோக்கி நடக்கத் தொடங்கினான்.

இல்லத்தை அடைந்த குமாரன்தம்பி, சற்று நேரம் முற்றத்திலேயே நின்றான். புத்தூர் தறவாட்டுடன் நெருங்கிய உறவுள்ள இந்த இல்லத்திற்கு, தான் முதல் தடவையாக வருகிறோம் என்பதை நினைத்தபோது கழிவிரக்கம் தோன்றியது.

சேகரனின் அப்பா வீடு அது. பார்வதி சித்தியை, பப்பு மாமாவின் மீது வழக்குத் தொடுக்கச் செய்தவர், சேகரனுடைய அப்பாவான இந்த வீட்டின் மாதவன் போற்றிதான். தறவாட்டின் பாகம் பெறுவதற்கு நடந்த வழக்கு அது. அன்றிலிருந்து தன் குடும்பமும், களீக்கல் (பார்வதி சித்தியின்) குடும்பமும், பகையாளிகளானது. மாதவன் போற்றி காலமாகிவிட்டாலும் பார்வதி சித்தியும், அவர் குழந்தைகளும் மாதத்திற்கு ஒருமுறை தவறாமல் இங்கு வந்து உறவைப் புதுப்பிக்கத் தவறுவதில்லை.

இல்லத்துக்காரர்கள் தன்னிடம் விரோத உணர்வுடன் நடந்து கொள்ள மாட்டார்கள். இருப்பினும் சேகரனது பகையாளி அல்லவா? ஒரே ஒரு விவரத்தைக் கேட்டறிவதுதான் தனது நோக்கம்.

"என்ன முற்றத்திலேயே நின்னுட்டீங்க? படியேறி வாங்க" - திண்ணைக்கு வந்த ஓர் இளைஞன் குமாரன்தம்பியை வரவேற்றான்.

"திருமேனிக்கு என்னைத் தெரியுமா?" - குமாரன்தம்பி வியப்பை வெளிக்காட்டிக் கேட்டான்.

"என்ன கேள்வி இது! புத்தூர் வீட்டு மாந்திரீகனை எங்களுக்குத் தெரியாதா? சேகரனுக்கும் உங்களுக்கும் விரோதம் ஏற்பட்டிருந்தா

நாங்க ஏன் அதையெல்லாம் பொருட்படுத்தணும்? புத்தூர் தறவாடும் எங்க சொந்தக்காரங்களாகிட்ட நிலையில, அந்த வீட்டைச் சேர்ந்தவங்களும் எங்களுக்கு உறவினர்கள்தான். வாங்க."

" ஒரு விவரம் தெரிஞ்சுக்க வந்திருக்கிறேன்."

"என்ன வேணுமோ கேளுங்க."

"பைத்தியம் மாதிரிக் காட்சியளிக்கிற ஒரு பெரியவரை கோயில் மேடையில பார்த்திருக்கேன். ஒரே ஒரு தடவைதான் பார்த்திருக்கிறேன். கொஞ்சம் கோபமான குரல்ல பேசுற பெரியவர்..."

"இப்போ புரியுது. கொஞ்ச நாட்களுக்கு முன்னாலகூட அவர் அங்கேயேதான் பெரும்பாலும் இருப்பார். ஆள் வடக்குப் பக்கம் (வட கேரளம்). அவரோட பழக்க வழக்கங்கள் ரொம்பச் சுவாரசியமானது. கோயிலுக்கு வந்தா தேவியை வணங்க மாட்டார். நாக்கில நல்லதே வராது. ஒரு விகடகவி மாதிரி. கிறுக்கன் மாதிரின்னு கூடச் சொல்லலாம். ஆனா பெரிய மந்திரவாதி. ஏதோ ஒரு துர்த்தேவதை அவரோட உபாசனாமூர்த்தி. என்னவெல்லாம் அதிசயங்கள் காட்டியிருக்கிறார் தெரியுமா அவர்? பனை மரத்தின் உச்சி வரை ஏறி அங்கிருந்து குதிப்பார். இப்படி எத்தனையோ?"

"அவரைச் சந்திக்க என்ன வழி?"

"மேற்குப்புறக் கடற்கரையில ஒரு குடிசை போட்டுட்டு குடியிருக்கிறதா யாரோ சொல்லிக் கேள்விப்பட்டிருக்கேன். கடற்கரையில விசாரிச்சா கண்டிப்பாக் கண்டுபிடிச்சிடலாம்."

"சரி, நான் வரட்டுமா?" - குமாரன்தம்பி விடை பெற்றான்.

"என்ன இது! மத்தியான வேளையில இங்க வந்துட்டுச் சாப்பிடாமப் போறதா? அது கூடாது! வைரமனை இல்லம் நலிவடைய ஆரம்பிச்சிருக்கிறதென்னவோ உண்மைதான். அதுக்காக எங்க விருந்துபசார மரியாதையை விட்டுடலை. கொஞ்சம் பொறுங்க. இதோ வந்துடுறேன்!"



வீட்டிற்குள் சென்ற இளைஞன் இல்லத்துக் காரணவருடன் திரும்பி வந்தான். குமாரன் எழுந்து வயதான அந்த பிராமணரை வணங்கினான்.

"உட்காருங்க... உட்காருங்க. உங்களைப் பத்திக் கேள்விப்பட்டிருக்கேன். சந்திச்சது அதிர்ஷ்டம்தான்" - என்பதைத் தாண்டிய காரணவர் பேச்சைத் தொடங்கி வைத்தார். "சேகரனுக்கா, உங்களுக்கா, யாருக்கு வயசு கூடுதல்?"- கேட்டார்.

"எங்க ரெண்டுபேருக்கும் ஒரே வயசுதான் திருமேனி. நான் ஒரு மாசம் மூத்தவன்." குமாரன்தம்பி பதிலளித்தான்.

"நான் ஒண்ணு சொல்லட்டுமா? திருமேனின்னு என்னைக் கூப்பிடாதீங்க. மற்ற போற்றிமார்களைப் போல எங்களையும் கருதக்கூடாது. வைரமனை இல்லத்துக்காரங்க மாறுபட்டவங்க. உங்க சித்தி என் அண்ணனின் மனைவி - எனக்கு அண்ணி. அவர் வேற திருமணம் செய்து கொள்ளவில்லை. மற்ற போற்றிகளைப் போல் திருமணத்துடன் ஊர் முழுக்கத் தொடர்பு என்று அலையுறவங்கல்ல நாங்க. எங்களுக்கு ஜாதி வித்தியாசத்தில் எந்தவித நம்பிக்கையும் கிடையாது. சேகரன் என்னைச் சித்தப்பான்னு அழைப்பான்; நீங்களும் அப்படியே கூப்பிடலாம்" காரணவர் உபதேசித்தார்.

"சாப்பிட்ட பிறகு மற்றதைப் பேசிக்கலாமே" - வீட்டிற்குள்ளிருந்து ஓர் அந்தர்ஜனத்தின் குரல் எழுந்தது.

இல்லத்து உறுப்பினர்களுடன் அமர்ந்து உணவுண்ட குமாரன் தம்பி மதியத்திற்குப் பிறகு விடை பெற்றான். விடையளித்த இல்லத்துக் காரணவர் சொன்னார்: "களிக்கல் வீட்டோட இருக்கிற சண்டையை எல்லாம் தீர்த்துக்கணும். தறவாடுகளின் பழைய மரபும் நம்பிக்கைகளும்தான் நம்பூதிரி மற்றும் நாயர் குடும்பங்களின் நலிவுக்குக் காரணம்கிற உண்மையை மறந்துடக்கூடாது!"

குமாரன்தம்பி பதில் எதுவும் கூறாமல், காரணவரை வணங்கிவிட்டுப் புறப்பட்டான்.

கடற்கரையை அடைய வேண்டுமானால் நாலைந்து நாழிகைகள் நடக்க வேண்டும். வெயில் தகித்துக் கொண்டிருந்தது.

பரவாயில்லை. கடற்கரையின் நீண்ட மணற்பரப்பில் அவர் எங்கே குடிசை போட்டிருக்கிறார் என்பதை எப்படிக் கண்டுபிடிப்பது? தீவிரமாக யோசித்தாள்.

கொஞ்சம் சிரமப்பட வேண்டியிருக்கும். சிரமமென்பது தனக்குப் புதியதா என்ன? வாழ்க்கையின் இறுதிக்கட்ட எதிர்பார்ப்புக்கு சாபவிமோசனம் தேடியல்லவா நான் புறப்பட்டிருக்கிறேன்? எப்படிப்பட்ட சிரமங்கள் ஏற்பட்டாலும் எப்படியும் அந்தப் பெரியவரைக் கண்டுபிடித்தே தீரவேண்டும்! அவரைச் சந்தித்துவிட்டால் தன் வாழ்க்கைப் பாதையே மாறிவிடுமென்று மனத்திலிருந்து ஒரு குரல் ஒலிக்கிறது. பெரியவர் சாமான்யமானவரல்ல, அசாதாரணமான ஸித்தி பெற்றவர் என்றல்லவா வைரமனை இல்லத்துப் போற்றி கூறினார்? பனைமரத்தின் உச்சியில் ஏறிக் கீழே குதிப்பதும், நீர்ப்பரப்பின் மீது நடப்பதும் ஸித்தி அல்லாமல் வேறு என்ன?

சூரியன் மறையும் நேரத்தில் குமாரன்தம்பி கடற்கரையை அடைந்தான். கண்ணுக்கெட்டிய தூரம்வரை நீண்டிருந்த கடற்பரப்பைப் பார்த்தபடி சற்றுநேரம் நின்றான்.

சிறியதும் பெரியதுமான ஏராளமான படகுகள், சகோதரத்துவத்தின் தூதுவாகனங்கள் போல் கடற்கரையில் வரிசையாக அணிவகுத்திருந்த காட்சி அவனைக் கவர்ந்தது. சில படகுகள் கடலிலிருந்து கரையை நெருங்கின. கூவி விளையாடிக் கொண்டிருந்தனர் குழந்தைகளும் கடற்காற்றும். வெகுதொலைவில் பாய்மரக் கப்பல்கள் நகர்ந்து கொண்டிருந்த காட்சி பார்க்க மிக அழகாக இருந்தது. கடற்கரையில் தென்பட்ட எண்ணற்ற மீனவக் குடிசைகள் அமைதி நிரம்பிய வீடுகளாகத் தோற்றமளித்தன. கடல் தாயின் சந்ததியினர் சமாதானத்துடன் வாழ்ந்து வரும் சொர்க்க பூமிக்கு வந்து சேர்ந்திருக்கிறோம் என்று குமாரன் தம்பிக்குத் தோன்றியது.

கால் பாதங்களை முத்தமிட்டு மூச்சுத்திணறச் செய்த சர்க்கரை போன்ற மணல்துகள்களுடன் கொஞ்சியவாறு, லட்சியம் இல்லாத ஒரு பயணியைப் போல் அவன் நடந்தான். யாரைச் சந்தித்தாலும் அவன் கேட்டுக்கொள்ள ஒரேயொரு கேள்வி தான் கைவசமிருந்தது. "கிறுக்கன் மாதிரித் தென்படும் ஒரு பெரியவரை உங்களுக்குத் தெரியுமா?" பார்க்கவில்லை என்றனர் சிலர். இன்னும் கொஞ்சதூரம் நடந்தால் அவரைப் பார்க்க முடியும் என்றனர் வேறு சிலர்.



எத்தனை நாழிகை தூரம் நடந்து வந்திருக்கிறோம் என்று அவனுக்கே சரியாகத் தெரியவில்லை. நேரம் இருளடையப் போகிறது. அவனது கால்கள் தளர்ந்திருந்தன. வந்து சேர்ந்திருப்பதோ ஆளரவமற்ற தனிமைப் பகுதியில்.

அவன் கடலைப் பார்த்தான். சோர்வடைந்ததாலோ என்னவோ, மயக்கத்திற்குத் தயாராகிக் கொண்டிருந்தாள் கடல் தாய். பகலெல்லாம் ஆவேசத்துடன் பாய்ந்து கொண்டிருந்த அலைகளுக்கு இப்போது அந்தப் பழைய ஆவேசம் இல்லை. அவற்றின் கைகால் சோர்ந்து போனதாலோ என்னவோ பாய்ச்சலுக்குப் பழைய வலு இல்லாதிருந்தது. அவற்றின் இரைச்சலுக்கும் ஓசையில்லை. நத்தை மாதிரி நகர்ந்து கரைக்கு வந்தன. வந்தது போலவே கடலை நோக்கித் திரும்பவும் செய்தன!

அமைதியான அந்தச் சுற்றுப்புறத்தில் அதிக நேரம் தங்கியிருக்க குமாரன்தம்பிக்குத் தைரியம் ஏற்படவில்லை. உடல் சோர்வைப் பொருட்படுத்தாமல் முன்னோக்கி நடந்தான்.

ஒரு சிறிய குடிசை அவனது கண்களுக்குத் தட்டுப்பட்டது. உடனே லட்சியப் பகுதியை நெருங்கும்போது ஏற்படும் உற்சாகக் குதிப்புடன் வேகவேகமாக நடந்தான்.

கொம்புகளாலும், பசுந்தழைகளாலும் வேயப்பட்டிருந்த அந்தச் சிறிய குடிசையின் முன்புறத்தை அடைந்த குமாரன்தம்பி திகைத்தான். சரியாக ஒருவர் மட்டுமே படுத்துக் கொள்ளக்கூடிய நீளமும் அகலமும் கொண்ட சிறு குடிசை! ஒருவேளை குழந்தைகள் விளையாட்டுக்காகக் கட்டி வைத்ததாக இருக்குமோ? ஆள் நடமாட்டமே இல்லாத இந்த இடத்துக்குக் குழந்தைகள் மட்டும் எப்படி வருவார்கள்?

வாசல் இல்லாத குடிசையின் உட்புறத்தை எட்டிப் பார்த்தான். உள்ளே யாருமில்லை. மூலையில் ஒரு பெரிய துணிமூட்டை இருந்தது. தரையில் ஒரு சிவப்புத்துணி விரிக்கப்பட்டிருந்தது. இரண்டு அல்லது மூன்று மண்பாத்திரங்கள் இருந்தன. ஆங்காங்கே எரிந்து அணைந்த தீப்பந்தங்களின் மிச்சங்கள்!

அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். மருந்துக்குக்கூட மனித வாசனை தட்டுப்படவில்லை. கடுமையான தனிமை அடக்கியாளும் இந்த இடத்தில், எழுந்து நிற்கும் இந்தக் குடிசையில் வசிப்பவர் யாராக இருக்கக்கூடும்? ஒரு வேளை இந்தக் குடிசை அந்தப் பெரியவருடையதாக இருக்குமோ?

சற்றுநேரம் அப்படியே குடிசைக்கு முன்னால் நின்றபோது அவனுக்கு மூச்சுத்திணறுவது போல் இருந்தது.

இனி வேறு எங்கு போவது? இன்னும் முன்புறமாக நடந்தால் ஜனநடமாட்டம் இருக்கும் என்பதற்கு என்ன உத்தரவாதம்? சரி, வந்த வழியே திரும்பி நடந்தால்தான் ஜன நடமாட்டமுள்ள பகுதியை அடைய முடியும்.

அவன் குடிசையின் முன்புறத்திலிருந்து சற்று விலகி நடக்கத் தொடங்கினான். கால்கள் மிகவும் சோர்ந்து போனதால் அங்கேயே மணலில் அமர்ந்தான். கண்களைக் கடல்தாயிடம் அர்ப்பணித்துவிட்டு அலைகளின் மெதுவான போக்குவரத்தைக் கவனித்துக் கொண்டிருந்தான். சட்டென்று ஒரு காட்சியைக் கண்ட குமாரன்தம்பி திடுக்கிட்டான். ஓர் அலை ஏனைய அலைகளை மிகச் சுலபமாக ஒதுக்கித் தள்ளிவிட்டுக் கெட்டிக்காரத்தனமாகக் கரையை நோக்கிப் பாய்ந்து வந்து கொண்டிருந்தது! குறிப்பிட்ட அந்த ஓர் அலையின் வேகப்பாய்ச்சலைப் பார்த்த குமாரன்தம்பி சட்டென்று எழுந்து நின்றான். அவனுடைய மனத்தில் திகைப்புப் படையணி வகுத்து நின்றது. நல்ல உடற்கட்டுடன் கூடிய ஒரு மனிதன் அந்த அலையின் உச்சியில் நடந்து வந்து கொண்டிருந்தார். அவரது வலது கையில் ஒரு பிரம்பு இருந்தது!

அலை வந்த வழியே திரும்பிப் போனது. அலையில் வந்த மனிதன் மட்டும் கரையேறி வந்தார்.



அவரேதான்! தான் தேடி வந்திருக்கும் மனிதரேதான். பத்ரகாளி கோயிலில் தியாட்டு பார்த்துவிட்டுத் திரும்பும்போது பார்த்த மனிதர். இன்று காலையில் கனவில் காட்சியளித்த அதே மனிதர்!

எந்தப் பக்கமும் பார்க்காமல் குடிசையை லட்சியமாக்கி நடந்த அந்தப் பெரியவரது பின்புறமாக ஓடிவந்த குமாரன்தம்பி பெரியவரது கால்களில் சாஷ்டாங்கமாக விழுந்தான்.

பயமேற்படுத்தும் கிழவரது அட்டகாசமான சிரிப்புச்சத்தம் கடல் மொத்தத்திலும் அலையெழுப்பியது. குமாரன்தம்பி அவரது பாதங்களைக் கெட்டியாக இருகைகளாலும் பற்றிக்கொண்டான்.

"எழுந்திருடா!" - பெரியவர் கட்டளையிட்டார்.

எழுந்திருந்த குமாரன்தம்பி கைகளைக் கூப்பி வணங்கினான். பெரியவரது சிவந்த விழிகள் தீயை உமிழ்வதாகத் தோன்றவே குமாரன்தம்பி தன் கண்களை இறுக மூடிக்கொண்டான்.

"ம்... நட!" - கட்டளையிட்ட பெரியவர் குடிசைக்குள் நுழைந்தார். குமாரன்தம்பி அவரைப் பின்தொடர்ந்தான்.

குடிசைக்குள் இருள் பரவிவிட்டிருந்தது. சிறிய ஒரு தீப்பந்தத்தைக் கொளுத்தித் தரையில் ஊன்றி வைத்த பெரியவர் கூறினார்: "உட்கார்!"

தரையில் விரித்திருந்த சிவப்புத் துணியின் ஒரு தலைப்பில் பெரியவரும், அவருக்கு நேராக மறுதலைப்பில் குமாரன்தம்பியும் உட்கார்ந்தனர்.

"எல்லா வழியும் அடைஞ்சிடுச்சுன்னு புரிஞ்ச பிறகு இந்த வழியைக் கண்டுபிடிச்சிருக்கிற இல்லையா?" - பெரியவரது குரலில் கேலி கலந்திருந்தது.

"மன்னிக்கணும். அன்னிக்கு நான் உங்களைப் புரிஞ்சுக்கலை!"

"இப்பவும் நீ என்னைச் சரியா புரிஞ்சுக்கலை. நான் யாருன்னு தெரியுமா உனக்கு?"

பதிலளிக்காமல் பெரியவரையே தயக்கத்துடன் பார்த்துக் கொண்டு உட்கார்ந்திருந்த குமாரன்தம்பியை உற்றுப்பார்த்த பெரியவர் பேசத் துவங்கினார்: "நான் யார்னு இப்பக்கூட உனக்குத் தெரியாது. கடவுள்கிட்ட அபயம் பெறமுடியாதபோது, பிசாசைச் சரணடையறது மனுஷ இயல்புதான். என்னைப் பார்த்தால் ஏதாவது பிரயோஜனம் இருக்குமான்னு பரிசோதிக்கத்தான வந்திருக்கிற?"

"அன்னிக்கு ராத்திரி கோயில் நாட்டிய மேடையிலிருந்து நீங்க என்னை கூப்பிட்டபோதே நான் உங்ககிட்ட வந்திருக்கணும். அப்படி வந்திருந்தால் நான் இந்த அளவுக்கு மோசமா பாதிப்படைஞ் சிருக்க மாட்டேன்."

"அன்னிக்கு நீ வந்திருந்தால் மூணு மனுஷ உயிர்கள் காப்பாத்தப்பட்டிருக்கும். உன் காரியஸ்தன், மருமகள், மனைவி - இந்த மூவருமே!"

"என்னை மன்னிச்சிடுங்க. எனக்கு இனிமேல் உங்களைவிட்டா வேறவழியே கிடையாது. என்னை அனுக்கிரகம் செய்யுங்க."

"நான் யார்னு இன்னமும் தெரிஞ்சுக்காமத்தானே நீ பேசிட்டிருக்கிற? சரி, நானே சொல்றேன். புத்தூர் தறவாட்டுக்கு மந்திரஸித்தி கிடைச்ச வரலாறு தெரியுமா உனக்கு?"

"தெரியும். சிறய்க்கல் கோவிலகத்து மங்குப்பாட்டி கிட்டேருந்து..."

"ப்பூ... உன் பொல்லாத மங்குப்பாட்டி! உங்க மங்குப்பட்டியின் அழகைக் கண்டு மயங்கி ஆபத்தில சிக்கிக்கொண்ட என்னோட பெரிய காரணவர் கேளு நாயர் கிட்டேருந்து உங்க பாட்டிக்கு மந்திரச் சுவடிகள் கிடைச்சது. கருடசேவகனும் மாந்திரீகனுமா இருந்த சிறய்க்கல் கோவிலகம் (அரண்மனையின்) படைத் தலைவர் கேளுநாயரைப் பத்தி நீ கேள்விப்பட்டதில்லையா?"

"கேள்விப்பட்டிருக்கேன்."

"இப்பத் தெரிஞ்சுக்க... கேளுநாயரின் ஐந்தாவது தலைமுறையைச் சேர்ந்த கடைசி உறுப்பினர் நான். என் பெயர்



குஞ்ஞம்பு நாயர். கேளு மாமாவின் தலையைக் கொய்த சிறய்க்கல் ராஜ பரம்பரையைப் பழிவாங்க அவரோட தம்பி ரைருமாமா வார்த்தாளியை உபாசித்துப் பிரத்தியக்ஷப்படுத்தினார். கோவிலகம் அரண்மனையை அழிக்க முடிஞ்சது. என்றாலும் தறவாட்டில் சந்ததி குறுகிவிட்டது. தறவாட்டின் கடைசி மாந்திரீகனான என்னோட இந்தத் தறவாடு முடிவடையுது. இல்லை... முடிவடையக்கூடாது என்றுதான் பிடிவாதத்தோட கேளு மாமாவின் சந்ததி திருவிதாங்கூர் பகுதியில் இருப்பதைத் தெரிந்துகொண்டு இந்தப்பக்கமா வந்தேன். உன் மந்திரஸித்தி அழிந்துவிட்டதை அறிந்துகொண்டு இந்தப் பக்கத்திலேயே அலைந்து கொண்டிருக்கிறேன்."

"அது என்னோட அதிர்ஷ்டம்!"

"அப்படியும் சொல்லமுடியாது. ஒருவேளை இது உன்னோட துரதிர்ஷ்ட மாகவும் இருக்கலாம். என் மந்திர ஸித்தி சத்ரு சம்காரத்திற்கானது (எதிரியை அழிப்பதற்கானது). நல்ல மந்திர வாதங்கள் எனக்குத் தெரியாது. ஷட் பிரயோகங்களோட மற்ற எல்லாத்தையும் வார்த்தாளியின் உதவியோட நான் செய்றதுண்டு. ஒரு துர்மந்திரவாதியின் சீடனாக உனக்குச் சம்மதமா? அதுக்கு நீ தயாரா?"

"தயார் குருவே! சத்ருசம்காரம் செய்றதுக்குள்ள ஸித்தி மட்டும் எனக்குப் போதும்!"

"சரி! நீ ஒரு மந்திரமண்டபத்தைக் கட்டியிருக்கிறயே? நாம அங்க போகலாம். என் மரணவேளை நெருங்கிடுச்சு. உனக்கு மந்திரோபதேசம் தந்தவுடனே நான் இறந்து விழுந்துடுவேன்."

"ஐயோ!"

"மாந்திரீகன் ஒருபோதும் கோழையாகக்கூடாது. எழுந்திருடா... போகலாம்."

சிவப்புத் துணியை எடுத்து குஞ்ஞம்பு நாயர் தலையில் கட்டிக் கொண்டார். துணிமூட்டையை இடது புறத்தோளில் ஏற்றிக்

கொண்டார். வலதுகையில் பிரம்பைப் பிடித்தபடி அவர் குடிசையிலிருந்து வெளியேறினார். குமாரன்தம்பி பெரியவரைப் பின்தொடர்ந்தான்.

"அந்தப் பந்தத்தைக் கையில எடுத்துக்க. நடக்குறதுக்கு வெளிச்சம் வேண்டாமா?" குஞ்ஞம்பு நாயர் கூறினார்.

குமாரன்தம்பி குடிசையுள் நுழைந்து தீப்பந்தத்தை எடுத்து வந்தான்.

"நீ முன்புறமா நட... எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவு சீக்கிரமா உன் வீட்டை அடையணும்!" - சிரித்தபடியே குஞ்ஞம்பு நாயர் தொடர்ந்தார்: "உன்னோட தறவாட்டில சுவாரசியமான சில சம்பவங்கள் நடந்திருக்கு."

குமாரன்தம்பியின் நெஞ்சு பதறியது. 'அப்படி என்ன சுவாரசியமான சம்பவங்கள் வீட்டில் நடந்திருக்கும்?'

## 55

"வீட்டை நெருங்கிட்டோம்!" புத்தூர் வீட்டை நோக்கித் திரும்பும் குறுக்கு வழியை அடைந்ததும் குமாரன்தம்பி, குஞ்ஞம்பு நாயரிடம் கூறினான்.

வழியோரத்தில் குமாரன்தம்பியை எதிர்நோக்கிக் காத்திருந்த கோபாலனும் குட்டப்ப மாராரும் சட்டென்று குமாரன்தம்பியை வழி மறித்தனர்.

"தம்பி எஜமான், நீங்க இப்ப வீட்டுக்குள்ள நுழையக்கூடாது" கோபாலன் பயத்துடன் கூறினான்.

"ஏன் கோபாலா, அங்க என்ன விசேஷம்?" - குமாரன்தம்பி பரபரத்தான்.



"வீட்டுக்குள்ள ஒரு ரக்ஷஸ் நுழைஞ்சிருக்கு. நானும் மீனாக்ஷியும் உயிரைக் கையில பிடிச்சுட்டு ஓடித் தப்பிச்சோம் பயத்துல காய்ச்சல் வந்து மீனாக்ஷி வீட்டில படுத்த படுக்கையா கிடக்கிறா."

"ரக்ஷஸா?" - திடுக்கிட்டுக் கேட்ட குமாரன்தம்பி, குஞ்ஞம் நாயரின் முகத்தைப் பரிதாபத்துடன் பார்த்தான்.

"அவர் சொல்றதை முழுசாக் கேள்" - குஞ்ஞம்பு நாய புன்னகைத்தபடி கூறினார்.

நடந்த சம்பவங்களை கோபாலன் விவரித்தான். விவரிப்பின் நடுவே அவனது உடல் பயத்தால் நடுங்கிக் கொண்டிருந்தது.

சாயங்கால வேளையில் கிழக்குப்புறக் குளத்தில் குளிப்பதற்காகச் சென்ற மீனாக்ஷியின் உடுதுணிகள் மாயமாக மறைவதிலிருந்துதான் சிக்கல்கள் தொடர ஆரம்பித்தன. அவள் நீரில் நனைத்து குளப்படிக்கட்டில் பிழிந்து வைத்த துணிகள் முதலில் மாயமாக மறைந்தன. குளத்திற்கு அருகே யாரும் வரவும் இல்லை நிகைப்படைந்த மீனாக்ஷி குளத்தில் இறங்கி உடுத்தியிருந்த துணியை அவிழ்த்துத் தலை துவட்டத் தொடங்கியபோது யாரோ அவளிட மிருந்து துணியை வலுவாகப் பிடித்து இழுத்தனர். ஆனால், இழுத் நபர் யாரென்று கண்களுக்குத் தட்டுப்படவில்லை.

மீனாக்ஷியின் அலறல் சத்தத்தைக் கேட்டு முற்றட பகுதியிலிருந்த கோபாலன் குளத்திற்கு விரைந்தான். நாணத்தை மறைக்கத் துணியில்லாமல் கழுத்தளவுத் தண்ணீரில் நின்றுகொண்டிருந்தாள் மீனாக்ஷி - அவமானத்துடன்!

விவரமறிந்த கோபாலன் வியப்படைந்தவனாகத் துண எடுத்து வருவதற்காக வீட்டை நோக்கிப் பாய்ந்தான். கதவை நெருங்கியபோது அது உட்புறமாக மூடப்பட்டிருந்தது. இவ்வளவ விரைவில் வீட்டிற்குள் நுழைந்து கதவை மூடியது யாரா இருக்கும்? கோபாலன் கதவைத் தட்டி அழைத்தான். எந் அசைவும் இல்லை. பிறகு வடக்கு, தெற்கு என்று ஒவ்வொ

கதவாகச் சென்று தட்டினாள். எந்தவிதமான பயனும் இல்லை. வேறு வழியேதும் தெரியாத கோபாலன் குளத்திற்குச் சென்று தான் கட்டியிருந்த வேட்டியை அவிழ்த்துக் கொடுத்தான். கடைசியில் கோபாலன் கோவணாண்டியாக நிற்க நேரிட்டது.

வீட்டிற்குள் யாரோ நுழைந்திருக்கிறார்கள் என்பதை கோபாலனிடமிருந்து தெரிந்துகொண்ட மீனாக்ஷி கோபத்துடன் கிழக்குப்புறத் திண்ணைப் பக்கமாக விரைந்தாள்.

"யார் உள்ள, கதவைத் திற!" மீனாக்ஷி கத்தினாள். உள்ளே ஒரு பெண் இனிமையான குரலில் பாடத் தொடங்கினாள். மீனாக்ஷிக்கும் நன்கு தெரிந்த திருவாதிரைப் பாட்டின் வரிகள் சங்கீதமாக அலைபாய்ந்தது. பாடியவாறே கிழக்குப்புற அறையைப் பெருக்கும் சத்தம் கேட்டது.

"கதவைத் திற!" - மீனாக்ஷி முடிந்தமட்டும் உரத்த குரலில் கத்தினாள். ஆனால், பலனேதும் இல்லை!

பின்பு அவள், கணவனுடன் சேர்ந்து கதவை எட்டி உதைத்தாள். அதன்பிறகு உள்ளே இருந்தவள் கதவைத் திறந்தாள்.

மீனாக்ஷியும், கோபாலனும் மலைத்துப் போனார்கள். வலதுகையில் விளக்குமாற்றுடன் நின்று கொண்டிருந்தாள் அழகான இளம்பெண்ணொருத்தி. வெற்றிலை போட்டுச் சிவந்திருந்த உதட்டில் புன்னகையை வரவழைத்தபடி அவள் கேட்டாள்: "என்ன வேணும்?"

மீனாக்ஷியால் தன் கண்களையே நம்ப முடியவில்லை. இப்படிப்பட்ட அழகி இந்த வீட்டுக்குள் நுழையவேண்டிய காரணம் என்ன? தான் காண்பது கனவோ என்றுகூட அவளுக்குச் சந்தேகம் தோன்றியது. முன்பு எப்போதோ இவளைப் பார்த்திருப்பதாகவும் மீனாக்ஷிக்குத் தோன்றியது.

"நீ யார்?" - உள்ளே நுழைந்த மீனாக்ஷி கேட்டாள்.

"நான் யாருன்னு உனக்குத் தெரியாது இல்லையா? நான் வீட்டில இல்லாத நேரம் பார்த்து நீயும் உன் வீட்டுக்காரரும்



இங்க குடியிருக்க வந்துட்டிங்க அப்படித்தானே? முதல்ல வெளியே போடி!" - அலறிக்கொண்டே மீனாக்ஷியைப் பிடித்து வெளியே தள்ளினாள். கோபாலன் நல்ல வேளையாக அவளைத் தாங்கிப் பிடித்திருக்காவிட்டால் மீனாக்ஷி தரையில் விழுந்திருப்பாள்.

"இவள் யாரோ திருடியா இருக்கணும். நாம வீட்ல இல்லாத நேரம் பார்த்துத் திருட வந்திருக்கிறா. முதல்ல இவளைப் பிடிச்சுக் கட்டி வைப்போம்"- மீனாக்ஷி கோபாலனிடம் கூறினாள்.

கணவனும் மனைவியும் சேர்ந்து அவளைக் கட்டிப் போட முயன்றபோது அந்த அழகிக்குப் பதிலாக பயங்கர வடிவம் கொண்ட ஒரு பெண்ணுருவம் அங்கு காட்சியளித்தது. மீனாக்ஷியும் கோபாலனும் கிடுகிடுவென்று நடுங்கித் தொடங்கினர்.

அலறியடித்துக் கொண்டு இருவரும் ஒருவிதமாகத் திண்ணையில் குதித்தனர். ஓரளவு நிர்வாணத்தை மறைத்திருந்த மீனாக்ஷியும், கோவணம் மட்டும் கட்டியிருந்த கோபாலனும் மற்றதையெல்லாம் மறந்துவிட்டுத் தப்பித்தால் போதுமென்று உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு ஓடத்தொடங்கினர்.

அவர்களது வீட்டை அடைந்த பிறகுதான் நிதானமாக மூச்சுவிடத் தொடங்கினர். "நான் இனிமேல் புத்தூர் வீட்டுப்பக்கமே வரமாட்டேன்!" பீதியடைந்திருந்த மீனாக்ஷி உயிர் மீதிருந்த பயத்துடன் கூறினாள். குமாரன்தம்பி திரும்பி வரும்போது வீட்டுக்குப்போய் ஆபத்தில் சிக்கிக்கொள்ளக் கூடாதென்று நினைத்துத்தான் கோபாலன், குட்டப்ப மாராருடன் பாதையில் காத்திருந்தான்.

வீட்டிற்குள் நுழைந்திருப்பது ரக்ஷஸ் அல்ல, யக்ஷியான லக்ஷ்மிக்குட்டிதான் என்பதை குமாரன்தம்பியால் ஊகித்தறிய முடிந்தது. பானுமதியைக் கிணற்றில் தள்ளிக் கொன்ற பிறகு எங்கேயோ தொலைந்துபோயிருந்த யக்ஷி மீண்டும் வருமென்று அவன் எதிர்பார்க்கவே இல்லை! அவளைக் கட்டுப்படுத்தவோ, தண்டிக்கவோ தன்னால் முடியாது என்று நினைத்ததால் அவள் திரும்பி வந்திருக்கிறாள் என்றும் உணர்ந்து கொண்டான். குமாரன்

தம்பியின் முகம் சோகத்தால் வாடியது. அவன் கண்களில் நீர் நிறைந்தது.

குமாரன்தம்பியின் தோளில் தட்டிய குஞ்ஞம்பு நாயர் கூறினார் "நீ ஏன் கண்டதையும் நினைச்சுக் கவலைப்படுற? சீக்கிரமா நட. உன் காதலியான யக்ஷியை நான் நேர்ல பார்க்கணும்!"

"அப்ப நாங்க விடைபெற்றுக்கிறோம்" - கோபாலன் நழுவும் பாணியில் கூறினான். குட்டப்பமாராரும் கையெடுத்து வணங்கினார்.

"நீங்க ரெண்டு பேரும் பயப்படாம எங்ககூட வாங்க!" கட்டளையிடுவதுபோல் குஞ்ஞம்பு நாயர் அவர்களிடம் கூறினார்.

கோபாலனும், குட்டப்பமாராரும் பரஸ்பரம் ஒருவரை ஒருவர் பார்த்துக் கண்ணைச் சிமிட்டிக் கொண்டனர். அதைக் கவனித்த குமாரன்தம்பி சிரித்தபடி கூறினான்: "இவர் யார்னு தெரியுமா உங்களுக்கு? மகா மாந்திரீகரான இவருக்கு முன்னால யக்ஷி, கந்தர்வ-ரக்ஷஸ்கள் எதுவும் அசையக்கூட முடியாது. பயப்படாம வாங்க. உங்களால சில காரியங்கள் ஆக வேண்டியிருக்கு."

நான்கு பேரும் புத்தூர் வீட்டை அடைந்தனர். வீட்டுக்குள் வெளிச்சம் தெரிந்தது. சன்னமான குரலில் பாட்டு ஒன்றும் கேட்டுக் கொண்டிருந்தது.

வீட்டுத் திண்ணையில் முதலில் காலெடுத்து வைத்தவர் குஞ்ஞம்பு நாயர்தான். மூடியிருந்த கதவில் வலது காலை உயர்த்தி மிதித்தபடி சொன்னார்: "கதவைத் திற!"

எந்தவிதமான பதிலும் வராமற் போகவே குஞ்ஞம்பு நாயருக்குக் கோபம் வந்தது: "கதவைத் திறக்கமாட்ட இல்லையா? சரி, நானே திறந்துக்கிறேன்" - அவர் கண்களை மூடி பிரம்புநுனியைக் கதவின் மீது படிய வைத்தார். கதவு விரியத் திறந்தது.

குஞ்ஞம்பு நாயரின் நிழல் மாதிரி குமாரன்தம்பியும் வீட்டுக்குள் நுழைந்தான். யாரோ சமையற்கட்டை நோக்கி ஓடுவதாகத் தெரிந்தது.



"நமக்குச் சாப்பாடு போடுறதுக்காகச் சமையற்கட்டுக்குப் போறாள் குமாரா" வடக்குப்புறமாகப் பார்வையைச் செலுத்திய அவர் கேலியாகச் சொன்னார். தொடர்ந்து கண்களை மூடி எதையோ மந்திரித்தார்.

சமையலறையிலிருந்து யக்ஷியின் தீனக்குரல் எழுந்தது. "நான் போயிடுறேன்; என்னைப் பந்தனம் செஞ்சுடாதீங்க..."

"நான் சொல்றபடி நடந்துக்கிறயா? அந்த ஒரு வழிதான் உனக்கு இருக்கு. இல்லை வீண்வீம்பு செய்றதுதான் உன் நோக்கம்னா உன்னை ஹோமிச்சுடுவேன்" - குஞ்ஞம்பு நாயரின் முகபாவம் மாறியது.

"நீங்க சொன்னபடியே செய்றேன்" - பதில் வந்தது.

"குமாரா! வீட்டின் மேற்குப்புறத்திலதானே பாலை மரம் இருக்கு?"

"மேற்கயும் உண்டு. கிழக்குப்புறத்திலுள்ள காவிலயும் இருக்கு." குமாரன்தம்பி விளக்கினான்.

குஞ்ஞம்பு நாயர் யக்ஷியிடம் அந்தத் திசையைப் பார்த்தபடி கூறினார்: "இந்தத் தறவாட்டில உன்னை வைச்சுட்டு நான் கேள்வி கேட்கமாட்டேன். நீ மேற்குப்புறமுள்ள பாலைமரத்திற்குப் போ. நான் அங்க வர்றேன்."

குஞ்ஞம்பு நாயர் கிழக்குப்புற முற்றத்திற்கு வந்தார். குமாரன் தம்பியும் அவருடன் வந்தான். முற்றத்தில் பயத்துடன் நடுங்கியபடி நின்று கொண்டிருந்த கோபாலனிடமும், குட்டப்பனிடமும் குஞ்ஞம்பு நாயர் கேட்டார்: "யக்ஷியைப் பார்க்க வர்றீங்களா?"

"வேண்டாம்!" - இருவரும் ஒரே குரலில் மறுத்தனர்.

"குமாரா, நீ ஒரு கருங்கல் துண்டை எடுத்துட்டு வா!" குஞ்ஞம்பு நாயர் கட்டளையிட்டார்.

முற்றத்திலிருந்த எட்டிமர அடியிலிருந்த கல் குவியலிலிருந்து துண்டையான ஒரு கருங்கல்லை எடுத்த குமாரன்தம்பி, குஞ்ஞம்பு நாயருடன் மேற்குப்புறம் போனான்.

அவர்கள் பாலைமரத்தின் அடிப்பகுதியை நெருங்கியதும் மரம் குலுங்கியது. சற்றுத் தொலைவில் எங்கேயோ நாய் ஒன்று ஊளையிடும் குரல் உயர்ந்தது. குஞ்ஞும்பு நாயர் பாலைமரத்தின் கீழே உட்கார்ந்தார். குமாரன்தம்பியும் அவர் அருகே உட்கார்ந்தான். குமாரன்தம்பியிடமிருந்து கருங்கல்லை வாங்கித் தனக்கு முன்பாக வைத்துவிட்டு குஞ்ஞும்பு நாயர் மேற்புறம் பார்த்துக் கேட்டார்: "நம்ம வேலையை ஆரம்பிக்கலாமில்லையா?"

"என்னை விட்டுடுங்க. நான் இனிமேல் ஒருபோதும் இந்தப் பக்கம் வரமாட்டேன். இது சத்தியம்!" பாலைமரத்தின் மேலிருந்து வந்தது விண்ணப்பம்.

"அதெப்படி முடியும்? நீ இந்தத் தறவாட்டில குடியிருக்க வந்தவளாச்சே? இங்கிருந்து உன்னை வெளியேத்தறது முறையாகுமா?"

அதுவரை மௌனமாக இருந்த குமாரன்தம்பி துயரத்தையும் கோபத்தையும் அடக்கமுடியாமல் கூறினான்: "இந்தப் பயங்கரமானவள், எனக்குச் செஞ்சிருக்கிற துரோகங்கள் கொஞ்சநஞ்சமில்ல. என்னைச் சபிச்சாள்; என் மனைவியைக் கொன்னுட்டா. இவளை அழிச்சாத்தான் என் மனசு ஆறும்."

திடுமென்று யக்ஷியின் குரல் உயர்ந்தது: "குமாரேட்டனை உயிருக்கு மேலா நேசிச்சவ நான். மனுஷப் பெண்ணா இருந்தபோதும், யக்ஷியானபோதும் வேறொரு ஆணோட வாசனைகூட என்மேல பட்டதில்லை. ஆனால், குமாரேட்டன் என்னை வேதனைப்படத்தான் விட்டிங்க. நான் மட்டும் இல்லாதிருந்தா வடயக்ஷிணி என்னிக்கோ உங்களைக் கொன்னு போட்டிருக்கும். குமாரேட்டனை நான் சபிச்சது உண்மைதான். எனக்கு மட்டுமே சொந்தமான நீங்க, வேறொரு பெண்ணைச் சொந்தப்படுத்திக்கிறதை என்னால தாங்கிக்க முடியலை. பானுமதியை நான்தான் கொன்னேன். புத்தூர் தறவாட்டு நிலவறையில் உள்ள ஐந்துதலை நாகம் என்னைக் கொத்திக் கொன்னபோது நீங்க தாங்கிக்கலையா? அதே மாதிரி இதையும் தாங்கிக்கங்க!"



குஞ்ஞும்பு நாயருக்குக் கோபம் வந்தது. அவர் யக்ஷியிடம் சொன்னார்:

"இங்க வாதப் பிரதிவாதங்கள் எதுவும் தேவையில்லை. உன்னை நான் புத்தூர் தறவாட்டின் காவல்காரியா மாத்துறேன்."

"நீங்க என்னை ஸ்தம்பிக்க வைக்கப் போறீங்களா?"

"முட்டாள்தனமாப் பேசாதே. உன்னை நான் ஒரு பூஜா விக்கிரகமா மாற்றி, மரியாதை செய்யப்போறேன்" மந்திரக்கோலை மேற்புறமாக உயர்த்திய குஞ்ஞும்பு நாயர் மந்திரஜபம் தொடர்ந்தார்.

"என்னை ஒண்ணுமில்லாமப் பண்ணிடாதீங்க!" - யக்ஷியின் அலறல் உயர்ந்துகொண்டே இருந்தது. மாந்திரீகன் அதைக் கிஞ்சித்தும் பொருட்படுத்தவில்லை. அந்த யக்ஷியைக் கல்லில் ஆவாஹம் செய்யும் கர்மத்தில் தன் கவனத்தை ஒருமுகப்படுத்தினார்.

மேற்புறமாக இரு கைகளையும் உயர்த்தியபடி மேலிருந்து மெது மெதுவாக இறங்கிவந்த யக்ஷி, கல்லின் மீது அசைவற்று நின்றது. மூடியிருந்த அவளது கண்களிலிருந்து நீர் வழிந்து கொண்டிருந்தது. இரக்கத்திற்குரிய அவளது தோற்றத்தைக் கண்ட குமாரன்தம்பியின் உள்ளம் நெகிழ்ந்தது. அவன் கண்களை மூடி தலை தாழ்த்திக் கொண்டான்.

சட்டென்று யக்ஷியின் உருவம் மறைந்தது. உயிர்பெற்றதைப் போல அந்தக் கருங்கல் உருண்டை ஒரு தடவை அசைந்தது.

"உனக்கு விருப்பமானவள் கல்லுக்குள்ள இறங்கி இருக்கிறா. இதை எங்க பதிச்சு வைக்கலாம்?" குஞ்ஞும்பு நாயர் கேட்டார்.

"இந்தப் பாலை மரத்தடியிலேயே பதிச்சுட்டா என்ன?" - குமாரன்தம்பி கேட்டான்.

"அப்படியே செஞ்சுடலாம்" குஞ்ஞும்பு நாயர் அந்தக் கருங்கல் துண்டை மண்ணில் பதித்து வைத்தார்.

கிழக்குப்புற முற்றத்தை நோக்கி நடக்கும்போது குஞ்ஞும்பு நாயர் கேட்டார்: "உன் காரணவரோட ஆத்மா உன்கிட்ட விரோதம் பாராட்டிட்டிருக்கு இல்லையா?"

"ஆமாம்... பப்புமாமா என்னைச் சபிச்சதோட என் பத்ரகாளி சேவையையும் தடுத்துட்டார். மேற்கொண்டும் எனக்குத் தொல்லை தருவாரோன்னு பயமா இருக்கு!" பயந்தவனாக குமாரன்தம்பி கூறினான்.

"நீ என் சீடனா மாறிட்டா... உன் பழைய குருவான பப்புத்தம்பி விலகிப் போயிடுவார். மற்றொரு மாந்திரீகனது வாரிசை மிரட்ட அவருக்கு ஏது உரிமை? இன்னிக்கு ராத்திரியிலேயே உனக்கு மந்திரோபதேசம் தந்துடலாம்னு நினைக்கிறேன். இந்த நிமிஷத்திலிருந்தே புதிய மந்திரமண்டபத்தில பூஜைக்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செஞ்சுடு. நிலவிளக்குகளோட பந்தங்களும் தேவை. ஹோமத்துக்குச் சந்தனக்கட்டைகள் கொஞ்சம் அதிகமாவே தேவைப்படும்."

"பூஜாத் திரவியங்கள்லாம் தயாரா இருக்கு. வீட்டுக்குள்ள தேவையான அளவுக்குச் சந்தனக்கட்டைகளும் இருக்கு. மிச்சத்தையும் உடனே தயார் செஞ்சுடுறேன்."

"குமாரா, மந்திரமண்டபத்துக்குத் தென்புறத்தில ஒரு பள்ளம் வெட்டணும். அந்தப் பள்ளம் ஒரு ஆளோட நீளத்துக்கு இருக்கட்டும்" குஞ்ஞம்பு நாயரின் குரல் தழுதழுப்புடன் வெளிப்பட்டது.

## 56

நிலவிளக்குகள், பூஜைப் பொருள்கள், சந்தனக்கட்டைகள் ஆகியவற்றைச் சர்ப்பக்காவில் உள்ள மந்திர மண்டபத்துக்குக் கொண்டு செல்ல கோபாலனும் குட்டப்பமாராரும், குமாரன் தம்பிக்கு உதவினர்.

நேரம் நள்ளிரவைத் தாண்டியிருந்தது. மந்திர மண்டபத்தில் உட்கார்ந்து திப்பந்தங்களைத் தயார் செய்து கொண்டிருந்தான்



குமாரன்தம்பி. கோபாலனும், குட்டப்பமாராரும் மந்திர மண்டபத்தின் தென்புறத்தில் குழிவெட்டிக் கொண்டிருந்தனர்.

அப்போது புத்தூர் வீட்டின் கிழக்குப்புற முற்றத்தில் நீட்டி நிமிர்ந்து படுத்திருந்தார் குஞ்ஞம்பு நாயர். ஆனால், உறங்கவில்லை.

"குஞ்ஞம்பு நாயரே!" - என்கிற அழைப்பைக் கேட்டுத் தலையை உயர்த்தினார். பிறகு புன்னகைத்தபடி கேட்டார்: "பப்புத்தம்பி தானே?"

"ஆமாம்" - அசரீரி ஒலித்தது.

குஞ்ஞம்பு நாயர் எழுந்து உட்கார்ந்து அமைதியான குரலில் கேட்டார்: "என்ன விசேஷம்?"

"முப்பாட்டன் வீட்டிலிருந்து விருந்து வந்திருக்கிறவரைப் பார்க்கணும்னு தோணுச்சு!"

"ரொம்பவும் சந்தோஷம். சீக்கிரமாவே நானும் அங்க வந்து சேர்ந்துடுறேன். இனிமே நாம அடிக்கடி சந்திக்கலாம்!"

"நான் உங்களோட இருக்கமுடியாது. நம்ம பாதைகள் வித்தியாசமானது."

"புரியலை..."

"நீங்க துர்மந்திரவாதியாச்சே?"

"அதிலென்ன சந்தேகம்? அது போகட்டும்... நல்ல மந்திரவாதம் செஞ்சு வந்திருக்கிற உங்க தறவாடு மட்டும் என்னத்தைச் சம்பாதிச்சிருக்கு?"

"புண்ணியத்தை நிறையச் சம்பாதிச்சிருக்கு. குமாரனால அது கொஞ்சம் அழிஞ்சுபோயிருக்கு. அவ்வளவுதான்."

உரத்த குரலில் வாய்விட்டுச் சிரித்த குஞ்ஞம்பு நாயர் கூறினார்: "பாவம், குமாரனை வீணா எதுக்காகப் பழி சொல்லணும்? தறவாட்டின் கர்மஸித்தி முடிவடைஞ்சு போனதுக்கு அவனைக் குற்றம் சொல்லி என்ன பயன்? அவன் ஒரு பலிகடாவாகி

யிருக்கிறான். அவ்வளவுதான். ஆனா, நான் அவனை பலசாலியாக்குவேன்!"

"நீங்க அவனுக்கு மந்திரோபதேசம் தரக் கூடாது. புத்தூர் தறவாட்டில யாரும் துர்மந்திரவாதம் நடத்தினதா வரலாறு கிடையாது!"

"பெரிய்ய... புத்தூர் தறவாடு! உங்க தறவாட்டுக்கு மந்திர ஸித்தியைத் தந்தது யார்? என் பூர்வீகரான கேளுநாயர். எங்க தறவாட்டு மந்திரச் சுவடிகளோட உங்க கொள்ளுப்பாட்டி தப்பிச்சுட்டார். எங்க காரணவர் கசாப்பு செய்யப்பட்டார். கேளு மாமாவைக் கொன்னவங்களையும், சிறய்க்கல் அரச குலத்தையும் அழிக்கிறதுக்காகத்தான் எங்க தறவாட்டில துர்மந்திரவாதத்தை ஆரம்பிச்சோம். உங்க நல்ல மந்திரவாதம் அழிஞ்சு போயிடலையா? இனி மேல் கொஞ்சநாள் துர்மந்திரவாதம் நடக்கட்டுமே..."

"துர்மந்திரவாதம் மூலமா குமாரன் மேற்கொண்டு எதையெல்லாம் வரவழைச்சுக்கப்போறானோ?"

"கர்மபலத்தை அவன் அனுபவிச்சுட்டுப் போறான். நீங்க ஏன் அதைப் பத்திக் கவலைப்படுறீங்க? தறவாட்டு கொட்டாரத்தில உள்ள சமாதியில அமைதியா காலத்தைக் கழியுங்க."

"குமாரன் அங்கயும் வந்து தொல்லை தருவான். அவன் ஒரு அதிகப்பிரசங்கி."

"இல்லை. அவன் கொட்டாரத்துக்கு வரமாட்டான். என் வாரிசு உங்களை ஒருபோதும் தொல்லை செய்யமாட்டான் பப்புத்தம்பி!"

அசரீரி நின்றுவிட்டது. குஞ்ஞம்பு நாயர் தனக்குத் தானே பேசிக்கொண்டார். "அப்பாவியான பப்புத்தம்பி! அவரோட நல்ல மந்திரவாதம் மேல அவருக்குள்ள நம்பிக்கை! நன்மை மட்டும்தான் சரின்னு நம்புற சாது. இந்தக் கலியுகத்தில தீமைதான் வெற்றி பெறும்கிற உண்மையைத் தெரிஞ்சுக்காத மனுஷர்."

குஞ்ஞம்பு நாயருக்கு முன்பாக வந்த குமாரன்தம்பி வினயமாகச் சொன்னான்: "எல்லாம் தயாரா இருக்கு."



"சரி, நாம சர்ப்பக்காவுக்குப் போகலாம்" - குஞ்ஞம்பு நாயர் எழுந்தார்.

கோபாலனும், குட்டப்ப மாராரும் விடைபெற்றுப் புறப்பட்டனர். இடதுதோளில் துணிமூட்டையும், வலதுகையில் மாந்திரீகப் பிரம்புமாக குஞ்ஞம்பு நாயர் கிழக்குப்புறமாக நடந்தார். சிறியதொரு கைவிளக்கை ஏந்தி, குமாரன்தம்பி குருவைப் பின் தொடர்ந்தான்.

திடுமென்று சுற்றுப்புற அமைதியைக் கிழித்துக்கொண்டு சிறகடியோசை எழுந்தது. குஞ்ஞம்பு நாயர் பதற்றப்படவில்லை. ஆனால், குமாரன்தம்பி பயந்து நடுங்கினான். சிறகடியோசை படிப்படியாகக் குறைந்து, கடைசியில் நின்றுபோனது.

"நீ பயந்துட்ட இல்லையா?" குஞ்ஞம்பு நாயர் கேட்டார்.

"கருடன் ரொம்பக் கோபத்தோட இருக்கிறதாத் தோணுது!" - குமாரன்தம்பி நடுக்கத்துடன் கூறினான்.

குஞ்ஞம்பு நாயருக்கு கடுமையான கோபம் தோன்றியது. "உனக்கு ஏற்பட்ட நாசங்களுக்கெல்லாம் காரணம், உன் மனத்தில் ஏற்படுற சஞ்சலம்தான். மனசை உறுதியோட நிறகவை. கருடனை உன் மனசிலிருந்து தூக்கி எறி. கிருஷ்ணப்பருந்தை வந்தனை செய்யவோ, நிந்தனை செய்யவோ நீ முற்படாமலிருந்தா அதனால் உனக்கு எந்தவித ஆபத்தும் ஏற்படாது!" - குஞ்ஞம்பு நாயர் கோபக்குரலில் கூறினார்.

மந்திர மண்டபத்திற்குள் நுழைந்த குஞ்ஞம்பு நாயர் நிலவிளக்குகளை ஏற்றினார். பந்தங்களைக் கொளுத்தினார். பிறகு கீழே இறங்கினார். மந்திர மண்டபத்தின் தென்புறத்தில் தோண்டி வைத்திருந்த குழியின் அருகில் வந்த குஞ்ஞம்பு நாயர், ஒரு நீண்ட பெருமூச்சுடன் கூறினார்: "கேளுமாமாவோட மனைவியின் தறவாட்டு மண்ணில கலந்துடணும்கிறதுதான் என் விதி. சிறய்க்கல் அரச வம்சத்தின் ரத்தமும் என் தறவாட்டு ரத்தமும் இந்த மண்ணில இருக்கு" - குனிந்து ஒரு பிடி மண்ணைக் குழியிலிருந்து

வாரியெடுத்து வாயிலிட்டு, சுவையான பலகாரத்தை மெல்லுவதுபோல மென்று விழுங்கினார். "என் கடைசி உணவையும் சாப்பிட்டுட்டேன்!" - மந்திர மண்டபத்திற்குள் நுழைந்து கொண்டே குஞ்ஞம்பு நாயர் கூறினார்.

"வா குமாரா!" - அவர் குமாரன்தம்பியை அழைத்தார்.

கூப்பிய கைகளுடன் மந்திர மண்டபத்திற்கு வந்த குமாரன் தம்பி, குருவின் முன்னால் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கினான். சீடனின் தலையை வருடியபடி குஞ்ஞம்பு நாயர் தழுதழுத்த குரலில் கூறினார். "எழுந்திரு குமாரா!"

குஞ்ஞம்பு நாயர் துணிமூட்டையை அவிழ்த்து அதிலிருந்த தோல்சுருணை ஒன்றைச் சீடனிடம் கொடுத்தார். "இதுல உட்கார். எருமைக்கிடாவோட தோல் இது. மாந்திரீகக் கர்மங்களைச் செய்யும்போது இதிலதான் நீ உட்காரணும்."

குமாரன்தம்பி தோலின் மீது பத்மாசனமிட்டு அமர்ந்தான். நீர் நிறைந்த அவனது விழிகள் குருவின் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தன.

"இன்னிக்கு அமாவாசை. சுபதினம்!" சீடனது தலையின் மேற்புறமாக வலதுகையை வைத்து ஆசீர்வதித்த குஞ்ஞம்பு நாயர் தொடர்ந்தார்: "நீ மறுபிறவியெடுக்கிற! பழையதை எல்லாம் நீ மறந்துடணும். இருக்கிற எல்லா மூர்த்திகளிலும் ரொம்பவும் உக்கிரமானது வார்த்தாளி. வார்த்தாளி தேவிதான் இனிமேல் உன்னோட உபாசனாமூர்த்தி. புரிஞ்சதா?"

"புரிஞ்சது."

"மந்திரஸித்திக்குப் பிறகு எப்படிப்பட்ட உயர்ந்த சக்தியையும் நீ நேரிட முடியும். ஆனால், கருடன் அல்லது கிருஷ்ணப் பருந்தை மகிழ்ச்சிப்படுத்தவோ, எதிர்க்கவோ நீ ஒருபோதும் முயலக்கூடாது. உன் தறவாட்டிற்குள்ளோ, நிலவறைக்குள்ளோ, கொட்டாரத்திற் குள்ளோ நீ நுழையக்கூடாது. எதிரிகளைத் தவிர மற்றவர் மீது ஷ"த்ர (செய்வினை) கர்மங்களை பிரயோகிக்கக்கூடாது..."



சற்று நேரம் தியானத்திலாழ்ந்த அவர், அவனது இடதுகாதில் ரகசிய மந்திரத்தை உபதேசித்தார். பிறகு வலதுகாதிலும் உபதேசித்தார். பிறகு துணிமூட்டையிலிருந்து ஓலைச்சுவடி ஒன்றை எடுத்து, அதை இரு கரங்களால் சீடனிடம் வழங்கினார். குமாரன்தம்பி அதைப் பணிவுடன் பெற்றுக் கொண்டான்.

"வார்த்தாளி மந்திரங்களையும் `அதனோட தொடர்புள்ள தந்த்ரங்களையும் கவனத்தோட படிக்கணும். அதன் பிறகுதான் கர்மங்களைச் செய்யணும். மூலமந்திரத்தை நான் இப்போ சொல்கிறேன். ஓலைச்சுவடியைப் பார்த்தபடி நீயும் என்கூட சேர்ந்து அதைச் சொல்லணும்."

குஞ்ஞம்பு நாயர் கண்களை மூடி, பக்திபூர்வமாக மந்திர ஜபத்தைத் தொடங்கினார். குருவுடன் சேர்ந்து சீடனும் மந்திர ஜபத்தைத் தொடர்ந்தான்:

*ரக்தாம் போருஹ கர்ண்ணிகோ பரிகதே*
*சாவாஸனே சம்ஸ்திதாம்*
*முண்டஸ்ரக் பரிராஜமான ஹ்ருதயாம்*
*நீலாஸ்ம ஸத்ரோசிஷம்*
*ஹஸ்தாப் ஜைர்ம்முஸலம் ஹலாபயவரான்*
*ஸம்பி ப்ரதீம் ஸல்குசாம்*
*வார்த்தாளீ மருணாம்பராம் த்ரிநயனாம்*
*வந்தே வராஹானனாம்*

மந்திரஜபத்தை நிறுத்திவிட்டு குரு உபதேசித்தார்: "சுவடியிலி ருக்கிற எல்லா மந்திரங்களையும், மந்திர-தந்த்ரப் பிரயோகங் களையும் கவனத்தோட படிக்கணும். அதற்குப் பிறகு மந்திரஸித்தி பெறுறதற்கான யக்ஞ(யாக)த்தை எச்சரிக்கையோட செய்யணும்."

சற்றுநேரம் சிந்தனையில் ஆழ்ந்த குஞ்ஞம்பு நாயர் மந்திரப்பிரம்பைக் கையில் எடுத்தார்.

"குமாரா, இந்த மந்திரப்பிரம்பை நான் உன்கிட்ட ஒப்படைத்த வினாடியிலேயே என்னோட எல்லா சக்தியும் உன்னை அடைஞ்சுடும். நான் இங்க இறந்து விழுவேன்!"

"குருவே!" - குமாரன்தம்பி விசும்பினான்.

"அந்தக் குழிக்குள்ள சந்தனக்கட்டைகளை அடுக்கி வைச்சு அதுக்கு மேல என் உடம்பைப் படுக்க வைச்சு எரிக்கணும். சிதைக்குத் நீ மூட்டினதும் நீ வார்த்தாளி மந்திரத்தை உரத்த குரலில் ஜபிக்கணும். சிதையின் நெருப்பு தணிஞ்ச பிறகு அந்தச் சாம்பலை உடல் முழுக்கப் பூசிட்டு சுவடியை நீ மனப்பாடம் செய்யத் தொடங்கணும். புரிஞ்சதா?"

"புரிஞ்சது குருவே!"

"சுவடியைப் படிச்சு முடிச்ச பிறகுதான் ஹோமம் தொடங்கணும். முதல்நாள் ஹோம மந்திரத்தைப் பதினேழாயிரம் தடவை ஜபிச்சு, எள்ளாலும், சிவப்புப் பூக்களாலும் ஹோமிக்கணும். இரண்டாம்நாள் மரமஞ்சள், சந்தனம், அரக்கு போன்றவற்றை ஹோமிக்கணும். மூணாவது நாளன்று ஒரு ஆட்டுக்கிடாவைப் பலி கொடுத்து ஒரு லட்சம் தடவை மந்திரம் ஜபிக்கணும். எப்படிப்பட்ட சோதனைகள் ஏற்பட்டாலும் நீ பதற்றமடையக் கூடாது. அப்படி நடந்துக்கிட்டாதான் உனக்கு ஸித்தி ஏற்படும்!"

மந்திரக்கோலைச் சீடனிடம் ஒப்படைத்த வினாடியிலேயே குஞ்ஞம்பு நாயர் பின்புறமாக மல்லாக்க விழுந்தார். அவரது உயிர் பிரிந்திருந்தது.

குருவின் மரணம் குமாரன்தம்பியின் மனத்தை வலுவாகத் தாக்கியது. அவன் துயரத்தை அடக்கிக்கொண்டு குருவின் அசைவற்ற முகத்திலும், திருப்பாதங்களிலும் முத்தமிட்டான்.

குழியில் சந்தனக் கட்டைகளை வரிசையாக அடுக்கிய பிறகு, குருவின் பூதவுடலை குறுக்குவாட்டில் தூக்கி, பக்திபூர்வமாகச் சிதையில் வைத்தான். ஜடத்தின் மீதும் சந்தனக்கட்டைகளை அடுக்கினான். மந்திர ஜபத்தைத் தொடர்ந்தவாறே சிதைக்குத் தீ மூட்டினான்.

ஓலைச்சுவடியைக் கையில் எடுத்தான். வார்த்தாளி மந்திரங்களை உருவிட்டபடி குமாரன்தம்பி குருவின் சிதையை வலம் வந்தான்.



சிதை கொழுந்துவிட்டு எரிந்தது. தீச்சுவாலைகளிலிருந்து உக்கிரமான வெப்பத்தை அவன் உடல் உணர்ந்தபோதும் அவன் அதைப் பொருட்படுத்தவில்லை. குருபக்தியின் கவர்ச்சிகரமான சக்தி அவனுக்கு மனத்துணிவை நல்கியது. மந்திர உச்சாடனம் செய்தபடி அவன் சிதையை இடைவிடாது வலம் வந்தான்.

நெருப்பின் வெப்பத்தை அவன் உணரவில்லை. விடியலின் வரவையும் அவன் தெரிந்து கொள்ளவில்லை.

குமாரன்தம்பி குருசமாதியை வலம் வந்துகொண்டே இருந்தான். சர்ப்பக்காவிற்கு வந்த கோபாலன் சற்றுத் தூரத்தில் நின்றபடி இந்தக் காட்சியைக் கவனித்தான். குமாரன்தம்பியின் தோற்றத்தையும், தோரணையையும், ஜபத்தையும் கண்ட கோபாலன் மலைத்தே போனான். வெகுநேரம் வேடிக்கை பார்த்தவன் மெளனமாகத் திரும்பிப் போனான்.

சிதை அணைந்து சாம்பலாகியது. அப்போதும் குமாரன்தம்பி வலம் வருவதை நிறுத்தவே இல்லை!

## 57

இரண்டாம் நாளன்று மாலை வேளையில் குமாரன்தம்பி வலம் வருவதை நிறுத்தினான். குருவின் சிதையிலிருந்து திருநீறை எடுத்து உடல் முழுவதும் பூசிக்கொண்டான்.

முற்றிலும் புதிய ஓர் ஆவேசத்தின் வசப்பட்ட குமாரன்தம்பி மந்திரமண்டபத்திற்குள் துள்ளிச் சென்றான். அணைந்து போயிருந்த தீபங்களையும், தீப்பந்தங்களையும் ஏற்றினான். கவனத்துடன் சுவடிகளைப் படிக்கத் தொடங்கினான்.

மறுநாள் பொழுது விடிவதற்குள் சுவடியிலிருந்த மந்திர-தந்திரப் பிரயோகங்கள் அனைத்தையும் மனப்பாடமாக்கியிருந்தான். உடனே ஹோமத்தைத் தொடங்கினான். பசியும் களைப்பும்

அவனைவிட்டு அகன்றன. உறக்கம் பயத்துடன் விலகியது. பக்தியின் போதையில் அவன் மூழ்கிக் கொண்டிருந்தான்.

ஒரு பகலும் இரவும் கடந்தபோது யக்ஞத்தின் முதல் கட்டம் முடிவடைந்தது. ஒரு நீண்ட பெருமூச்சுடன் அவன் சுற்றுமுற்றும் பார்த்தான். சர்ப்பக்காவின் நுழைவு வாசலில் சோகத்துடன் நின்று கொண்டிருந்த கோபாலன் அவனது கண்களில் தட்டுப்பட்டான். அவன் கோபாலனைக் கைநீட்டி அழைத்தான்.

மேலும் இரு கட்டங்களாக நடத்த வேண்டிய ஹோமத்திற்குத் தேவையான பொருள்கள், மிருகபலிக்குத் தேவையான ஆட்டுக்கிடா போன்றவற்றை எவ்வளவு விரைவில் கொண்டுவர முடியுமோ, அவ்வளவு விரைவில் கொண்டுவந்து சேர்க்குமாறு அவனிடம் பொறுப்பை ஒப்படைத்தான்.

"நீங்க பச்சைத் தண்ணியைப் பல்லில விட்டு எத்தனை நாளாச்சு? நான் கொஞ்சம் பால் கொண்டு வந்திருக்கேன். சாப்பிடுறீங்களா?" - கோபாலன் வேண்டினான்.

"வேண்டாம் கோபாலா. கர்மங்கள் எப்ப முடிவடையுதோ அப்பதான் நான் உபவாசத்தை நிறுத்துவேன். நான் உன்கிட்ட சொன்ன வேலையை நீ முதல்ல செய். சீக்கிரமா வந்து சேர்!"

கோபாலன் திரும்பி வந்தது மதியம் தாண்டிய பிறகுதான். அதுவரையில் சுவடியை திரும்பத் திரும்பப் படித்து, வெவ்வேறு மந்திரப் பிரயோகங்களைக் கற்றுக்கொண்டான்.

"எல்லாத்தையும் வைச்சுட்டு நீ போகலாம்" - குமாரன்தம்பி கட்டளையிட்டான்.

ஆட்டுக்கிடாவை அருகிலிருந்த ஒரு மரத்தில் கட்டிவிட்டு, பூஜை மற்றும் ஹோமத்திற்கான பொருள்களை மண்டபத்திற்குள் வைத்துவிட்டுத் தென்புறமிருந்த குழியை சந்தேகத்துடன் பார்த்த கோபாலன் திடுக்கிட்டதை குமாரன்தம்பியும் கவனித்தான்.

"நான் ஹோமம் தொடங்கணும். நீ புறப்படு கோபாலா" குமாரன் தம்பி கூறினான்.



"அவர் போய்ட்டாரா?" - தயங்கித் தயங்கித்தான் கோபாலன் கேட்டான். அதற்குப் பதிலாக எதையோ முனகிய குமாரன்தம்பி, கோபாலனை வெளியேறும்படி ஜாடை காட்டினான். கோபாலன் நடந்து மறைந்தான்.

மந்திரமண்டபம் மறுபடி உயிர் பெற்றது. ஹோமகுண்டம் நெருப்புச்சுவாலைகளை எழுப்பிக்கொண்டு கொழுந்துவிட்டு எரிந்தது. சர்ப்பக்காவு யாகசாலையாக மாறியது. இரவின் கடைசி யாமம் முடிவடைந்தபோது யக்ஞத்தின் இரண்டாவது கட்டம் நிறைவடைந்தது. தனக்குப் புதியதொரு சக்தி வந்திருப்பதாக குமாரன்தம்பிக்குத் தோன்றியது.

அப்போதுதான் அது நடைபெற்றது! தடித்துக் கொழுத்துப் போயிருந்த நாய் ஒன்று மந்திர மண்டபத்திற்கு முன்னால் வந்து நின்று குரைக்கத் தொடங்கியது. மந்திர மண்டபத்திற்குள் பாய்ந்து விடுவதைப் போல் குரைத்துக் கொண்டிருந்த நாயை ஒருகணம் உற்றுப்பார்த்த அவன், மந்திரப்பிரம்பை எடுத்து நாய்க்கு நேராக நீட்டினான். வார்த்தாளீ மந்திரத்தையும் உருப்போட்டான். ஒரு கணத்தில் நாய் மாயமாக மறைந்தது.

சில நிமிட இடைவெளிக்குப் பிறகு எருமைக்கிடா ஒன்று உறுமியபடி சர்ப்பக்காவிற்குள் ஓடிவந்தது. மதம் பிடித்ததைப் போல் அது மந்திர மண்டபத்தைச் சுற்றிச்சுற்றி வந்தது. புன் சிரிப்புடன் குமாரன்தம்பி மந்திரஜபம் செய்தபடி மந்திரக்கோலை மாட்டின் முன் நீட்டினான். அதன்பிறகு அந்த எருமை கண்களுக்குத் தட்டுப்படவில்லை.

குமாரன்தம்பி யக்ஞத்தின் மூன்றாவது கட்டத்திற்கு வந்தான். முதலில் ஆட்டுக்கிடாவை அவிழ்த்துக் கொண்டு வந்து பலியிட்டான். ஆட்டின் உடம்பை ஹோமகுண்டத்திற்குள் எறிந்துவிட்டு அவன் முன்பைவிட ஆவேசத்துடனும், பக்தியுடனும் மந்திரம் ஜபித்தான்.

இடியோசை கேட்டது. சர்ப்பக்காவிலிருந்த மரங்கள் பேயாட்டம் ஆடின. மந்திரமண்டபமே குலுங்கியது.

சர்ப்பக்காவு முழுவதும் கண்ணைப் பறிக்கும் ஒளி பரவியது! அத்துடன் பயங்கரமான ஓர் அலறலும் உயர்ந்தது. குமாரன்தம்பி கொஞ்சங்கூடப் பதற்றப்படாமல் மந்திரஜபத்தைத் தொடர்ந்து கொண்டிருந்தான்.

ஹோமகுண்டத்தின் முன்பாக அலறியபடி ஒரு பயங்கர வடிவம் வெளிப்பட்டது. நீண்ட கொடுவாளுடன் (நீண்ட முனையில் சந்திரப் பிறைபோல வளைந்திருக்கும் வாள்) அலறல் குரலெழுப்பும் உக்கிரரூபினியான வார்த்தாளி தேவிதான் வந்திக்கிறார் என்பது குமாரனுக்கும் புரிந்தது. ஆயுதங்களை ஏந்திய நான்கு கைகள், அழகான ஸ்தனங்கள், மூன்று கண்கள், பன்றிமுகம், சிவப்புப் பட்டாடை, பயங்கர உருவம் கொண்ட வார்த்தாளீயைப் பற்றித் தனது குருநாதர் சொல்லியிருந்த எல்லா அடையாளங்களும் பொருந்தியிருக்கும் வடிவம் இது!

குமாரன்தம்பி எழுந்து நின்று கைகளைக் கூப்பினான். அவனுடைய நாவிலிருந்து வார்த்தாளீ மந்திரங்கள் நீரூற்றுப் போல் பிரவகித்துக் கொண்டிருந்தன.

"பக்தனே, உன் பக்தியில் மகிழ்ந்து அருள் புரிகிறோம்" ஆசீர்வாதம் வழங்கியபின் வார்த்தாளீயின் உருவம் மறைந்தது.

குமாரன்தம்பி மகிழ்ச்சிப்பெருக்கில் துள்ளிக்குதித்தான். மறுபடியும் மந்திரஸித்தி கை வந்துள்ளது! பழைய ஸித்தியைவிட எத்தனையோ மடங்கு பலம் பொருந்திய அபூர்வ ஸித்தியைப் பெற்றிருக்கிறோம்! கிருஷ்ணப்பருந்தையும், தேவியையும், ஹனுமானையும், பணிமிழக்கச் செய்யும் அசாதாரணமான வல்லமை, தன் ஆராதனா மூர்த்தியான வார்த்தாளீக்கு உண்டு.

புத்தூர் குமாரன்தம்பி இதோ முன்னிலும் அதிகச் சக்தி பெற்றிருக்கிறான்! முன்னைக்காட்டிலும் அதிக தைரியம் பெற்றிருக்கிறான். தன்னைப் புறக்கணித்தவர்கள் எல்லாரும் இனிமேல் தன்னை வாழ்த்த வருவார்கள். மரியாதை காட்டுவார்கள்.

தனது ஜன்மப் பகைவனும், தன் தறவாட்டுக்குத் துரோகம் புரிந்திருப்பவனுமான சூரக்காட்டு பட்டத்திரி எனும் மந்திரவாதியை



வீழ்த்துவதுதான் தனது முதல் லட்சியம். தான் விரும்பினால் அவனைத் துண்டு துண்டாக வெட்ட முடியும். ஆனால், அவன் அவ்வளவு சுலபமாக, எளிதில் இறந்துவிடக்கூடாது. அவனைக் கொல்லாமல் கொல்லவேண்டும்! எவ்வளவு துன்ப துயரங்களை அனுபவிக்க முடியுமோ, அவ்வளவையும் அனுபவித்த பிறகே அவன் இறக்க வேண்டும். முன்னொரு நாள், தான் அவனிடம் சபதம் செய்ததை நிறைவேற்றுவதன் அடையாளமாக அவன் பைத்தியம் பிடித்து அலைய வேண்டும். மாந்திரீக ஸித்தியை இழந்து, சித்தப்பிரமை பிடித்து, ஒரு பைத்தியக்கார நாய் மாதிரி தெருத்தெருவாக அவன் அலைந்து திரிந்து சாகவேண்டும்! அவனுடைய உபாசனா மூர்த்திகளான வடயக்ஷிணியையும், தூமாவதியையும் அழிக்க வேண்டும்.

மந்திரப்பிரம்பை வலதுகையில் பிடித்தபடி மந்திர மண்டபத்திற்குள்ளேயே அங்கும் இங்கும் உலவினான். தனது எதிர்காலத் திட்டங்களை - எப்படியெல்லாம் செயல்படுத்துவது என்பதை மனம் உள்ளுக்குள் திட்டமிட்டுக் கொண்டிருந்தது.

"பூஜையெல்லாம் முடிஞ்சிடுச்சா எஜமான்?" கோபாலன் கேட்டான்.

"எல்லாம் மங்களகரமா முடிஞ்சிடுச்சு கோபாலா. நாம வீட்டுக்குப் போக வேண்டியதுதான்."

நிலவிளக்குகளை அங்கிருந்து எடுக்க முயன்ற கோபாலனைத் தடுத்த குமாரன்தம்பி, "எல்லாம் இங்கயே இருக்கட்டும் கோபாலா! யாரும் வந்து எதையும் திருட மாட்டாங்க. ராத்திரி நேரத்துல மறுபடியும் ஒரு பூஜை செய்ய வேண்டியிருக்கு" சொல்லிவிட்டு வீட்டை நோக்கி நடந்தான். கோபாலன் அவனைப் பின் தொடர்ந்தான்.

கோபாலனுக்கு வியப்பாக இருந்தது. இத்தனை நாட்களாக உபவாச விரதத்துடன், தூங்காமல் கடுமையான ஜபம் நடத்திய மனுஷனுக்குக் கொஞ்சம்கூடக் களைப்பே இல்லையா? எவ்வளவு உற்சாகமாக மந்திரப்பிரம்புடன் கம்பீரமாக நடக்கிறார்!

வீட்டு முற்றத்தை அடைந்த குமாரன்தம்பி பெருமிதத்துடன் கூறினான்: "கோபாலா, எனக்கு மந்திரஸித்தி கை வந்திருக்குது. இனிமேல் என்னை யாராலும் வெற்றி கொள்ள முடியாது. நான் முன்னவிட ரொம்பவும் சக்தி வாய்ந்த மாந்திரீகன்!"

"எல்லாம் பகவானோட கருணை!" கோபாலன் கண்களை மூடி நின்றான்.

"உன்னோட அந்தப் பகவான் யார்? வார்த்தாளீ தேவியோட கருணைன்னு சொல்லுடா மடையா... நமது தெய்வம் வார்த்தாளீதான். அனைத்துக் கடவுள்களும் வார்த்தாளீக்குக் கீழேதான்கிறதுல சந்தேகமே வேண்டாம்?"

"ஓ... வார்த்தாளீ தேவி!" கோபாலன் தலை சொறிந்தபடி நின்றான்.

கிழக்குப்புறத் திண்ணையில் சாய்வு நாற்காலியில் உட்கார்ந்த குமாரன்தம்பியிடம், கோபாலன் காய்ச்சிய பாலைக் கொண்டுவந்து கொடுத்தான்.

"குளித்துச்சுட்டுத்தானே சாப்பிடப் போறீங்க?" கோபாலன் கேட்டான்.

"ஆமாம். சமையல் வேலையை யார் கவனிக்கிறது?"

"ஒரு பெரியம்மாவை ஏற்பாடு செஞ்சிருக்கிறேன். சமையல்ல கெட்டிக்காரர்."

"சரி. நான் குளிச்சுட்டு வர்றேன். நல்ல பசியெடுக்குது!"

குமாரன்தம்பி சாய்வு நாற்காலியிலிருந்து எழுந்து மந்திரப் பிரம்பைத் தென்புற அறைக்குள் கொண்டுபோய் வைத்தான். பழைய மந்திரப்பிரம்பு அந்த அறைக்குள் இருப்பது அவனது கண்களில் தட்டுப்பட்டது. கோபத்துடன் அதைக் கையால் எடுத்து முற்றத்தின் பக்கமாக வீசி எறிந்த பிறகு நிந்தனைக் குரலில் முணுமுணுத்தான்: "புத்தூர் தறவாட்டின் மாந்திரீகப் பிரம்பு! இனிமேல் அது அடுப்பெரிக்கத்தான் உதவும்."



குளித்து, உணவு உண்ட குமாரன்தம்பி தென்புற அறையிலிருந்த சப்ரமஞ்சக் கட்டிலில் படுத்தான். கண்களை மூடத் தொடங்கியபோது பானுமதியின் குரல் கேட்டது போல் தோன்றியது. சட்டென்று தலையை உயர்த்திப் பார்த்தபிறகு மீண்டும் படுத்துக் கொண்டான். பானுமதியின் முடிவைப் பற்றி நினைத்தபோது அவனது கண்கள் நீரால் நிறைந்தன.

எப்படிப்பட்ட மோசமான ஒரு விதி அவளுடையது? சுமங்கலியான பிறகும் தாம்பத்திய சுகத்தை அனுபவிக்க முடியாமல் குமைந்து குமைந்தே வாழ்ந்த பானுமதி, மிகவும் குறுகிய நாள்கள்தான் இந்த வீட்டில் வாழ்ந்தாள். தனது 'கிரகக் கோளாறு' சட்டென்று மாறிவிடும் என்றும், பானுமதியுடன் இணைந்து மகிழ்ச்சிகரமான வாழ்க்கையை மேற்கொள்ளலாம் என்றும் எதிர்பார்த்தோம். கடைசியில்...? தன் கண்ணுக்கு முன்பாகவே தனது இதயராணி இரக்கமின்றிக் கொல்லப்பட்டாள். அவளைக் காப்பாற்றும் வல்லமை அன்று தனக்கு இல்லை. ஒரு யக்ஷியின் முன்பாக எதுவும் செய்ய முடியாத கேவல நிலையில் தான் இருக்க நேர்ந்ததே!

விதியை யாரால் தடுக்க முடியும்? புத்தூர் தறவாட்டின் மாந்திரீகப் பாரம்பரியம் அழிந்ததும் விதியால்தானே! மேன்மையான தேவதைகளை மட்டுமே உபாசித்து நல்ல கர்மங்களை மட்டுமே செய்துவந்த புத்தூர் தறவாட்டில், வார்த்தாளீ நுழைய நேர்ந்ததும் விதிவசத்தால்தானே! தான் ஒரு துர்மந்திரவாதியாக மாற நேர்ந்ததும் விதியின் விளையாட்டுத்தானே?

மேன்மையான தேவதைகளை உபாசித்து சாந்தி (பரிகார) கர்மங்களை அனுஷ்டிக்கும் வல்லமையைத் தான் இழந்து போயிருப்பினும், வேறு கர்மானுஷ்டானங்களின் மூலமாக சத்ருசம்காரம் செய்யும் வல்லமை கிடைத்துவிட்டதே! இந்த ஒன்றைத் தவிர தன் வாழ்க்கையில் இனி வேறு எந்த லட்சியமும் கிடையாது. எல்லா வழிகளிலும் தன்னை வெகுவாகக் கஷ்டப்படுத்தியதுடன் தன் காரியஸ்தரையும் மருமகளையும் பைசாசிகமான முறையில் கொல்லவும் செய்த தூரக்காட்டு

பட்டத்திரியை அழித்தால்தான் பேறு பெற்றவனாவோம். தன்னை நிந்திக்கத் தொடங்கியிருக்கும் தனது தறவாட்டின் மற்ற உறுப்பினர்களுக்கு முன்னால் தலையை உயர்த்தி நடக்கும் வாய்ப்பு ஏற்படாதா? ஊரார் மத்தியில் தான் இழந்துவிட்ட கௌரவத்தை மறுபடியும் பெறுவதற்கான ஒரு சந்தர்ப்பமல்லவா இப்போது வாய்த்திருப்பது!

புத்தூர் தறவாட்டின் மாந்திரீக ஆசார்யனான கேளு நாயர் தாத்தாவின் குடும்பத்தைச் சேர்ந்த குஞ்ஞும்பு நாயரின் சீடன்தான். புத்தூர் தறவாட்டின் கடைசி மாந்திரீகனான தான் என்பது எவ்வளவு பெருமிதத்துக்குரிய விஷயம். தனது குரு உபதேசித்ததைப் போலப் பழையதையெல்லாம் மறந்தே தீரவேண்டும். தான் புதுப்பிறவி எடுத்திருக்கிறோம். புத்தூர் தறவாட்டின் ஆராதனா மூர்த்தியான கிருஷ்ணப்பருந்துக்கும், தனக்கும் இனிமேல் எந்தவிதமான தொடர்பும் கிடையாது. தனது உபாசனா மூர்த்தி வார்த்தாளீதான். தன் குரு குஞ்ஞும்பு நாயர்!

கிருஷ்ணப்பருந்தையும், தேவியையும், ஹனுமானையும் உபாசனை செய்ததற்கான தண்டனையைத் தேவையான அளவுக்கு அனுபவித்து விட்டோமே? அனுஷ்டானங்களில் ஏதாவது தவறு நேர்ந்துவிட்டால் பக்தனைக் கைவிடுவதுடன், தயவு தாட்சண்யமின்றித் தொல்லை தரவும் தயங்காத மூர்த்திகளை யல்லவா இதுவரையில் சேவித்து வந்தோம். அதை நினைக்கும் போது மனத்தில் வருத்தம் தோன்றுகிறது. எல்லாம் முன்ஜன்ம அனுபவங்கள் என்று ஆறுதலடைவதுதான் நிம்மதி பெற ஒரே வழி!

"தேவீ வார்த்தாளீ, எனக்கு இனிமேல் நீ மட்டுமே துணை" குமாரன்தம்பியின் இதயக்கோயிலில் வார்த்தாளீயின் உக்கிரமான வடிவம் உயர்ந்து நிறைந்தது.

வார்த்தாளீ நினைவுடன் கண்களைமூடிப் படுத்திருந்த குமாரனை நித்திராதேவி அனுக்கிரகித்தாள். அவன் உறக்கத்துக்குள் வீழ்ந்தான்.

# 58

நள்ளிரவில் குமாரன்தம்பி திடுக்கிட்டு விழித்தான். சோர்வு காரணமாக உறங்கி விட்டதற்காக வருத்தப்பட்டான். இதற்குள் நூரக்காட்டு பட்டத்திரிக்கு எதிரான பிரயோகங்களைத் துவங்கியிருக்க வேண்டும். உறக்க சுகத்திற்காக, கடமையை மறந்துவிட்டதாக அவனுக்குள் குற்றவுணர்வு தோன்றியது.

குமாரன்தம்பி துள்ளியெழுந்தான். முதலில் லாந்தர் விளக்கின் திரியை உயர்த்தினான். பிறகு சிறிய கைவிளக்கில் எண்ணெய் ஊற்றித் திரியேற்றினான். ஓலைச்சுவடியை எடுத்து மடியில் பத்திரமாக முடிந்தான். மந்திரப்பிரம்பை வலது கையில் எடுத்துக்கொண்டான். விளக்குடன் கிழக்குத் தளத்தை அடைந்து, கதவைத் திறந்தான். திண்ணையில் படுத்துத் தூங்கிக் கொண்டிருந்த கோபாலனை எழுப்பினான்.

"எங்க போறீங்க?" கோபாலன் கேட்டான்.

"சர்ப்பக்காவுக்குப் போறேன். வீட்டுக்குள்ள போய் கதவுகளை மூடிட்டுப் படுத்துக்க"-கோபாலனிடம் கூறிவிட்டு நடக்கத் தொடங்கினான்.

மந்திரமண்டபத்தை அடைந்த குமாரன்தம்பி விளக்குகளையும், பந்தங்களையும் ஏற்றினான். மடியிலிருந்து சுவடியை எடுத்து ஸ்தம்பன கர்மத்தை நடத்துவது தொடர்பான விதிகளில் தோன்றிய சில சந்தேகங்களை நிவர்த்தி செய்துகொண்டான்.

பட்டத்திரிக்கு எதிராக ஸ்தம்பன கர்மத்தை ஆரம்பிக்க குமாரன்தம்பி தயாரானான். வார்த்தாளீயை மனம் ஒன்றித் தியானித்தபடி மந்திரம் ஜபிக்கத் தொடங்கினான்.

ஓம் ஐம் க்ளௌம் ஐம்
நமோ பகவதி வார்த்தாளீ வாராஹி
வாராஹி வாராமுகி ஐம் க்ளௌம்
ஐம் அந்தி அந்தினி நமோ
ருன்தே ருன்தினி நமோ ஜம்பே
ஜம்பினி நமோ மோஹே மோஹினி நம:
ஸ்தம்பே ஸ்தம்பினி நம: ஐம் க்ளௌம்
ஐம் ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம்
ஸர்வவாக்சித்த சக்ஷுர்ம் முககரி
ஜிஹ்வா ஸ்தம்பம் குருகுரு சீஹ்ரம்
வஸ்யம் குருகுரு ஐம் க்ளௌம் ஐம்
ட: ட: ட: ஹூம்ஃபட் ஸ்வாஹா

அதைத் தொடர்ந்து விதிப்படியான கர்மங்களைத் தொடங்கினான்.

விடியற்காலை வேளையில் மோசமான கனவு கண்டு திடுக்கிட்டு விழித்த ராமன் பட்டத்திரியின் மனம் பயத்தால் நிறைந்திருந்தது. தனது யக்ஷிக்காவில் மற்றொரு மந்திரவாதி நுழைந்து தனக்கு எதிரான ஸ்தம்பன கர்மத்தைத் தொடங்கியிருப்பது அவர் கண்ட கனவு.

தன்னுடைய யக்ஷிக்காவுக்குள் நுழையுமளவுக்குத் தைரியமுள்ள மந்திரவாதிகூட இந்த நாட்டில் இருக்கிறானா என்ன? அதையும் மீறித் தனக்கு எதிராக ஸ்தம்பன கர்மம் வேறு செய்கிறானா? அப்படிப்பட்ட திறமைசாலி யாராக இருக்க முடியும்? ஒருவேளை தனது பயம் வீணானதோ?

மறுபடியும் கட்டிலில் படுத்த ராமன் பட்டத்திரிக்கு ஒரு யோசனை தோன்றியது. தான் கண்டது மோசமான வெறும் கனவாக இருந்தாலும், கர்ணப்பிசாசினியைத் தியானித்துக் கனவின் பலனைக் கேட்போமே!

அவர் எழுந்து விளக்கேற்றினார். பூஜை அறைக்குள் நுழைந்து கர்ணப்பிசாசினியைப் பக்தி பூர்வமாகத் தியானித்தார்.



வலதுகாதில் கர்ணப் பிசாசினியின் மந்திரச் செய்தி ஒலித்தது. கேட்ட பட்டத்திரி திடுக்கிட்டு நடுங்கினார்.

"என்ன! குமாரன்தம்பி வார்த்தாளீயை உபாஸித்து மந்திரஸித்தி பெற்று விட்டானா? இப்போது புத்தூர் சர்ப்பக்காவில் உட்கார்ந்து தனக்கு எதிராக உண்மையிலேயே ஸ்தம்பனகர்மம் செய்து கொண்டிருக்கிறானா!"

வார்த்தாளீயைத் தியானித்துக் கொண்டு குமாரன் நடத்தும் கர்மப் பிரயோகத்தைத் தடை செய்யாவிட்டால், தன்னுடைய கதி அதோகதிதான் என்பது நிச்சயம். வார்த்தாளீயை எதிர்ப்பதும் ஆபத்தானது! எப்படி இருந்தாலும் மாற்றுப் பிரயோகம் செய்ய வேண்டும். குமாரனுக்கு எதிராகத் தானும் ஸ்தம்பன கர்மத்தைச் செய்ய வேண்டும். அது மட்டும்தான் ஒரே வழி!

பட்டத்திரி நெய்விளக்கை ஏற்றினார். அதை எடுத்துக் கொண்டு யக்ஷிக்காவிற்குள் பாய்ந்தார். அவருடைய நெஞ்சுக்குள் திகைப்பு, இடியோசைகளை இறக்கிக் கொண்டிருந்தது.

அவர் மந்திர மண்டபத்தில் உட்கார்ந்து வடயக்ஷிணி மந்திரத்தையும், தூமாவதி மந்திரத்தையும் உச்சரித்தார். பிறகு குமாரன்தம்பியை ஸ்தம்பனம் செய்வதற்குரிய கர்மங்களுடன், ஸ்தம்பன மந்திரத்தையும் ஜபித்தார்.

ஓம் ஹ்ரீம் ஹூம் ஹ்ரீம் ஃபட்

தன்னுடைய கர்மங்கள் பலிக்கவில்லை என்பதை உணர்ந்த குமாரன்தம்பி மந்திரப்பிரம்பை அந்தரத்தில் சுழற்றியபடி வார்த்தாளீயைப் பிரார்த்தித்தான். "யாரோ என் கர்மத்தைத் தடை செய்யுறதாத் தோணுது தேவி. என்ன நடக்கிறது என்பதைக் காட்டித் தாருங்கள்!"

சட்டென்று குமாரன்தம்பியின் முன்பாக நிழற்காட்சி ஒன்று தென்பட்டது. அதில் சூரக்காட்டு பட்டத்திரி, யக்ஷிக்காவில் உட்கார்ந்து ஸ்தம்பனகர்மம் செய்து கொண்டிருப்பது தெரிந்தது.

குமாரன்தம்பி வியப்படைந்தான். தனது செயல்களைப் பட்டத்திரி தெரிந்து கொள்கிறான். தான் இன்னும் பழைய குமாரன் தம்பியாகவே இருப்போம் என்று பட்டத்திரி நினைத்திருப்பான். அப்படியானால் அப்படி இல்லையென்பதையும் அவனுக்கு உணர்த்திவிட வேண்டியதுதான்.

அவன் முன்னைவிட ஆவேசத்துடன் கர்மத்தைத் தொடர்ந்தான்:

*ஐம் க்ளௌம் ஐம்*
*ட: ட: ட:*
*ஹ்ரூம் ஃபள் ஸ்வாஹா*

மந்திர ஜபம் தொடர்ந்தது.

என்ன, தனது பதிலடியை குமாரன்தம்பி தெரிந்து கொண்டானா? அவனது கிரியைகளின் சக்தி அதிகமாகி இருக்கிறதா?

அப்படியானால் மோதிப் பார்த்துவிட வேண்டியதுதான். இந்த ராமன் பட்டத்திரியை அவன் இன்னும் சரியாகப் புரிந்து கொள்ளவில்லை என்று தோன்றுகிறது.

*ஓம் ஹ்ரீம் ஹ்ரூம் ஹ்ரீம் ஃபட்*

"டேய் பட்டேரி, மந்திரத்தை உரத்த குரலில் சொன்னால் புத்தூர் குமாரன்தம்பியை ஸ்தம்பனம் செய்துவிடலாம் என்பது உன் எண்ணமா? நான் வார்த்தாளியின் பக்தனடா!"

*ஐம் க்ளௌம் ஐம்*
*ட: ட: ட: ஹ்ரூம்ஃபள் ஸ்வாஹா*

*"ஓம் ஹ்ரீம் ஹ்ரூம் ஹ்ரீம் ஃபட்"* பட்டேரியும் விட்டுத்தர வில்லை.

*"ஐம் க்ளௌம் ஐம் ட:*
*ட: ட: ட: ஃபள் ஸ்வாஹா"*



குமாரன்தம்பி சவாலை ஏற்றுக் கொண்டது போல் மந்திரம் ஜபித்தான்.

பட்டத்திரி நடத்தும் கர்மங்களை நிழல் வடிவில் பார்த்தபடி குமாரன்தம்பி கர்மங்களைத் தொடர்ந்தான். குமாரன்தம்பியின் கர்மங்களை, கர்ணப்பிசாசினி மூலமாக பட்டத்திரியும் உடனுக்குடன் புரிந்து கொண்டார்.

பொழுது விடிந்தது. பரஸ்பரம் ஒருவருடன் ஒருவர் போட்டி போட்டுக் கொண்டு இருவரும் மந்திர பிரயோகங்களைச் செய்தனரே தவிர, யாரும் வெற்றி-தோல்வியை எட்டவில்லை!

குமாரன்தம்பியின் மனத்தில் வேறொரு யோசனை தோன்றியது. நேராகப் பட்டத்திரியின் யக்ஷிக்காவுக்கே போனால் என்ன? அங்கு சென்று தங்களது பலாபலத்தைச் சோதித்து விடலாம். வார்த்தாளீ தேவிக்கு முன்பாக வடயக்ஷிணியும், தூமாவதியும் தாக்குப் பிடிக்க முடியுமா?

குமாரன்தம்பி சுவடியை எடுத்துப் பத்திரமாக இடுப்பில் செருகிக் கொண்டான். மந்திரப்பிரம்புடன் குருவின் சமாதிக்குச் சென்றான். கொஞ்சம் சிதைச் சாம்பலை எடுத்து ஓர் இலைத்துண்டில் மடித்தான். கைவிளக்கை எடுத்துக் கொண்டு வார்த்தாளீ மந்திரத்தை ஜபித்தபடி பட்டத்திரியின் யக்ஷிக்காவை நோக்கி நடந்தான்.

நேரடியாகத் தன்னுடன் மோதுவதற்குத் தயாராக எதிராளி தன் இருப்பிடத்திற்கே வருவதை உணர்ந்து கொண்ட பட்டத்திரி, மனத்துணிவைக் கைவிடாமல் வடயக்ஷிணியையும், தூமா வதியையும் தியானித்தபடி எச்சரிக்கையுடனிருந்தார்.

யக்ஷிக்காவிற்குள் நுழைந்த குமாரன்தம்பி மந்திரப் பிரம்பை காற்று வெளியில் வீசியபடி, ஒரு ராணுவ வீரனது தோரணையுடன் மந்திர மண்டபத்தை நெருங்கினான்.

பட்டத்திரி திக்பிரமை பிடித்தவரைப் போலானார். யக்ஷிக்காவிற்குள் அத்துமீறி நுழையும் எவரையும் நேரடியாகப்

பாய்ந்து தாக்கும் வடயக்ஷிணியும், தூமாவதியும் எங்கே போய்த் தொலைந்தார்கள்? குமாரனது மந்திரப்பிரம்பிற்கு இவ்வளவு சக்தியா? அப்படியானால் அதன் வல்லமையைப் பரிசோதித்து விடத் தூமாவதியையே வரவழைப்போம்.

*தும் தும் தூமாவதி ஸ்வாஹா*
*தும் தும் தூமாவதி ஸ்வாஹா*

பட்டத்திரி தூமாவதி மந்திரத்தை இடைவிடாமல் ஜபித்தார்.

மேற்புறம் ஒரு நெருப்பு உருண்டை தோன்றியதும் பட்டத்திரி முகம் தெளிவடைந்தது. அவர், வெற்றிப் பெருமிதத்துடன் குமாரன் தம்பியைப் பார்த்தார்.

குமாரன்தம்பி ஒரு சிட்டிகைச் சாம்பலை எடுத்து மேற்புறமாக வீசியெறிந்தான். பிறகு மந்திரப் பிரம்பை மேற்புறமாக உயர்த்திக் கொண்டு தியானத்தில் ஈடுபட்டான். நெருப்புக்கோளம் சட்டென்று மறைந்தது!

"பட்டேரி... எங்கே போனதடா உன் தூமாவதி?" - குமாரன் தம்பி கேலித்தொனியில் கொக்கரித்தான்.

உள்ளுக்குள் ஏற்பட்ட நடுக்கத்தை முற்றிலுமாகக் கட்டுப்படுத்திக் கொண்டு பட்டத்திரி கண்களை மூடி வடயக்ஷிணி மந்திம் ஜபித்தார்.

*ஏஹ்யேஹி யக்ஷியக்ஷி*
*வடவ்ருக்ஷ நிவாஸினி!*
*சீஹ்ரம் மே ஸர்வ ஸௌக்யம்*
*குருகுரு ஸ்வாஹா*

வினாடி நேரத்துக்குள் கால் சலங்கைகளின் சல்சல் நாதம் கேட்டது. குமாரன்தம்பி மந்திரப்பிரம்பை இறுகப் பிடித்தவாறு எச்சரிக்கையுடன் நின்றான்.

சிவப்புப் பட்டாடை உடுத்திய அழகான ஒரு பெண்மணி குமாரன்தம்பிக்கு முன்பாக வெளிப்பட்டாள். கண்மூடித் திறப்பதற்குள் பயங்கர வடிவம் கொண்டவளாக மாறிய வடயக்ஷிணி அலறியபடி குமாரன்தம்பியை நெருங்கி வந்தாள்.



குமாரன்தம்பி சாம்பலின் ஒரு சிறு பகுதியை யக்ஷிக்கு நேராக வீசிப் பறக்கவிட்டு மந்திரப்பிரம்பை நீட்டினான்.

வடயக்ஷிணி பின்வாங்காததைக் கண்டு குமாரன்தம்பி வியப்படைந்தான். அவன் ஓரடி பின்னோக்கி நகர்ந்தான். உடனே வடயக்ஷிணியும் அவனை நோக்கி ஓரடி மேலும் முன்னேறியது.

ராமன் பட்டத்திரி அட்டகாசமான குரலில் சிரித்தார்: "யக்ஷித் தாயே! அவனது நெஞ்சைப் பிளந்து ரத்தத்தைக் குடி!" - குரோதத்துடன் அலறினார்.

குமாரன்தம்பி குருவை மனத்தில் இருத்தி மனம் நொந்து வார்த்தாளீயைப் பிரார்த்தித்தான்:

*ஓம் ஐம் க்ளௌம் நமோ*
*பகவதி வார்த்தாளீ வராஹி வராஹி*
*வாராஹிமுகீ ஐம் க்ளௌம் ருந்தே*
*அந்தி அந்தினி நமேருந்தே*
*ருந்தினிநமோ ஜம்பே ஜம்பினி நமோ*
*மோஹ மோஹினி நம: ஸ்தம்பே*
*ஸ்தம்பினி நம: ஐம் கிளௌம் ஐம்*
*ஸர்வதுஷ்ட ப்ரதுஷ்டானாம் ஸர்வேஷாம்*
*ஸர்வவாக் சித்த ககஷுர்மமக கிரி*
*ஜிஹ்வா ஸ்தம்பம் குருகுரு ஸீஹ்ரம்*
*வஸ்யம் குருகுரு ஐம் க்ளௌம்*
*ஐம் ட: ட: ட: ட:*
*ஹூம் ஃபட் ஸ்வாஹா*

இடியோசையும் தொடர்ந்து சூறாவளியும் தோன்றியது. வடவ்ருக்ஷம் எனப்படும் ஆலமரம் குலுங்கியது. மந்திரமண்டபம் சுழலத் தொடங்கியது.

அலறல் குரலைக் கேட்டு பட்டத்திரி நடுங்கினார். குமாரன்தம்பியின் முன்னாலிருந்து பின் வாங்கியது வடயக்ஷிணி. பிறகு அது மந்திர மண்டபத்தைச் சுற்றி ஓடத் தொடங்கியது.

உக்கிர ரூபினியான வார்த்தாளீதேவி, தன் கைக்கொடுவாளை உயர்த்தியபடி மந்திர மண்டபத்திற்கு முன்னால் வெளிப்பட்டாள். வடயக்ஷிணி இரு கரங்களையும் கூப்பியபடி வார்த்தாளியின் பாதங்களில் விழுந்தது.

வடயக்ஷிணியின் முதுகில் ஏறி நின்றுகொண்டு வார்த்தாளீ அலறியது. பின்பு மந்திர மண்டபத்திற்குள் பயந்துநடுங்கி நின்று கொண்டிருந்த பட்டத்திரிக்கு நேராக வார்த்தாளீ வாளை ஓங்கியது.

"தேவி, அவனைக் கொன்னுடாதீங்க. பைத்தியமாக்கி அலையவிட்டால் போதும்!" - கூப்பித் தொழுத கைகளுடன் குமாரன்தம்பி வேண்டினான்.

குலைநடுக்கமேற்படுத்தும் அலறலுடன் வார்த்தாளீ மந்திர மண்டபத்திற்குள் நுழைந்தவுடன் பட்டத்திரி சுயநினைவை இழந்து தரையில் விழுந்தார்.

ஓர் அலறலுடன் வார்த்தாளீ மறைந்தது.

"வடயக்ஷிணி நீ எங்க இருக்கிற?" - குமாரன்தம்பி குரல் எழுப்பினான்.

மறையத் தொடங்கியிருந்த வடயக்ஷிணி அழகியின் வடிவத்துக்கு மாறி குமாரன்தம்பியின் முன்பாக, நேரெதிரில் வந்து நின்றது.

"உன்னை நான் ஆவாஹம் பண்ணிக் கொண்டுபோகப் போறேன்" - குமாரன்தம்பி கூறினான்.

"என்னை விட்டுடுங்க. நான் எங்கயாவது ஓடிப்போய் பிழைச்சுக்கிறேன்!" - வடயக்ஷிணி கண்ணீர் சிந்தியபடி மன்றாடியது.

"என்னோட காரியஸ்தரைக் கொடூரமாகக் கொன்ன உன்னை அவ்வளவு சுலபமாக விட்டுடுறதா?" - ஒரு சிறிய கல்லெடுத்த குமாரன்தம்பி, வடயக்ஷிணியை அதில் ஆவாஹம் செய்தான்.



"தூமாவதி, நீயும் மரியாதையா என் முன்னால வா!"- அவன் மேற்புறமாக மந்திரப்பிரம்பைச் சுழற்றிக்காட்டினான்.

நெருப்புக் கோளம் ஒன்று மெதுவாகக் கீழே இறங்கியது. சட்டென்று அது வெடித்துச் சிதறியது. தீக்கங்குகள் நாலு புறங்களிலும் சிதறின. எங்கும் ஓரே புகைப்படலம்! புகைப்படலத்துக்குள்ளாக தூமாவதியின் உருவம் தெளிவடையத் தொடங்கியது.

மற்றொரு கல் எடுத்துத் தூமாவதியையும் ஆவாஹித்தான். இரண்டு கற்களுடன் குமாரன் புறப்படத் தொடங்கினான். மந்திர மண்டபத்துக்குள் ஏதோ சத்தம் கேட்டது போல் தோன்றவே, குமாரன் தம்பி அந்தத் திசையில் பார்வையைச் செலுத்தினான். பட்டத்திரி பைத்தியக்காரத்தனமான சேட்டைகள் காட்டிக் கொண்டிருந்தார்.

மந்திரமண்டபத்தை விட்டு வெளியேறிய பட்டத்திரி சர்ப்பக்காவைச் சுற்றி ஓடியலைந்தார். மந்திரங்களைத் தப்பும் தவறுமாக உச்சரித்து அழுது புலம்பிக்கொண்டிருந்த பட்டத்திரியை வெறுப்புடன் பார்த்துவிட்டு குமாரன்தம்பி நடக்கத் தொடங்கினான்.

தனது சர்ப்பக்காவை அடைந்த குமாரன்தம்பி இரண்டு கற்களையும் குருசமாதிக்கு அருகே ஊன்றி வைத்தான். "அவருக்குக் காவற்காரிகளாக இங்கேயே இருங்கள்!" - என்று கேலிக் குரலில் சொல்லவும் தவறவில்லை.

வீட்டுக்கு வந்த குமாரன்தம்பி பார்த்தது, கிழக்குப்புற முற்றத்தில் அமர்ந்திருந்த பட்டத்திரியைத்தான். கோபாலன் இரக்கத்துடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"நீ எதுக்காக இங்க வந்திருக்கிற?" குமாரன்தம்பி கேட்டான்.

பட்டத்திரி இரு கைகளையும் கூப்பி வணங்கியபடி எழுந்தார். "என் வடயக்ஷிணியையும் தூமாவதியையும் திரும்பத் தா" - பட்டத்திரி அழத் தொடங்கினார்.

"மரியாதையா இங்கேருந்து போறயா இல்லையா?"

"எனக்கு மந்திரோபதேசம் தர்றியா? வார்த்தாளீயை பூஜை செய்யணும்னு எனக்கு ஆசை!"

"இங்கேருந்து முதல்ல கிளம்பு!" - குமாரன்தம்பி மந்திரப் பிரம்பை ஓங்கினான்.

பட்டத்திரி பொருளற்றுப் புலம்பியபடி அங்கிருந்து ஓடத் தொடங்கினார்.

பட்டத்திரி போவதையே பார்த்துக் கொண்டிருந்த குமாரன்தம்பியின் மனத்தில் எதுவோ ஒன்று உறுத்தியது. எதிரியாக இருந்தாலும் அவரது நிலை குமாரன்தம்பிக்குள் இரக்கத்தை ஏற்படுத்தியது.

"பட்டேரித் திருமேனிக்கு என்ன ஆச்சு, தம்பி எஜமான்?" கோபாலன் துயரக் குரலில் கேட்டான்.

"பைத்தியம்!" - குமாரன்தம்பி தாழ்ந்த குரலில் பதிலளித்தான்.

## 59

புத்தூர் வீடு மீண்டும் உயிர் பெற்றது. மந்திரவாதியைத் தேடி வருபவர்களின் எண்ணிக்கை நாளுக்கு நாள் அதிகரித்தது. குமாரன்தம்பி மூலமாக மந்திரக் கர்மங்களைச் செய்ய விரும்பி வெளியூர்களிலிருந்தும் கூட ஆட்கள் வந்தனர். நல்லதொரு தொகையைப் பெற்றுக் கொண்ட குமாரன்தம்பி அவர்களுக்கு வேண்டியதைச் செய்து கொடுத்தான்.

எல்லா நாட்களிலும் சர்ப்பக்காவிலிருந்த மந்திர மண்டபத்தில் ஹோமமும், விலங்குகளின் உயிர்ப்பலியும் நடைபெற்றன. குமாரன்தம்பியின் ஊழியக்காரர்களது எண்ணிக்கையும்



அதிகரித்தது. கோபாலன், குட்டப்பமாரார் என்ற இருவரைத் தவிர மேலும் ஐந்து பேர் அந்த வீட்டிலேயே தங்கி ஊழியம் புரிந்தனர்.

புத்தூர் மாந்திரீகனைக் கண்டு ஊரே பயப்பட்டது. தன்னை வெறுத்து ஒதுக்கியவர்களே இப்போது மரியாதையுடன் நடந்து கொள்வது குமாரனைப் பெருமிதம் கொள்ள வைத்தது. பெருமிதம் ஆணவமாக மாற அதிக நாளாகவில்லை. பணமும் புகழும் பெருகியதுடன் அவனது தலைக்கனமும் அதிகரித்தது.

முழுப் பைத்தியமாகிவிட்ட பட்டத்திரி ஊர் முழுக்க அலைந்து திரிந்தார். குமாரன்தம்பியின் மோசமான மந்திரவாதப் பிரயோகம்தான் பட்டத்திரியைப் பைத்தியமாக்கியிருக்கிறது என்று ஊரார் உணர்ந்து கொண்டனர்.

குமாரன்தம்பியின் மோசமான மந்திரவாதப் பிரயோகங்களால் பாதிக்கப்பட்டவர்கள், புதுமனைத் தந்த்ரியைச் சரண் அடைந்தனர். மாற்று கர்மங்கள் செய்து அவர்களைக் காப்பாற்றி உதவி புரியும் வல்லமையும், நல்ல மனமும் கொண்ட வேறு எந்த ஒரு நல்ல மாந்திரீகரும் அந்தப் பகுதியிலேயே கிடையாது.

"இதுவரை இந்த நாட்டில் நடைபெறாத அளவுக்கு, இப்போது மோசமான மந்திரவாதம் தலைவிரித்து ஆடுகிறது. புத்தூர் குமாரன் தம்பியா பணத்துக்காக இப்படியெல்லாம் செய்கிறார் என்று என்னால் நம்ப முடியவில்லை!" புதுமனை தந்திரி பலரிடமும் இதையே கூறினார்.

குமாரன்தம்பியை இது தொடர்பாக கலந்தாலோசித்தால் என்ன என்று அவருக்கு தோன்றியது. அவர் தனது காரியஸ்தரை அழைத்துக் கூறினார்: "நீங்க போய்ப் புத்தூர் குமாரன்தம்பி கிட்டச் சொல்லுங்க. நான் அத்தியாவசியமா அவர் கிட்டக் கொஞ்சம் பேச வேண்டியிருக்கு. அவருக்கு எப்போ சௌகரியமோ அப்போ வரட்டும்."

புதுமனை தந்த்ரியின் காரியஸ்தர் புத்தூர் வீட்டுக்கு வந்து குமாரன்தம்பியிடம் தகவல் சொன்னார். குமாரன்தம்பி கோபத்தில்

பொரிந்து தள்ளினான்: "புதுமனை தந்த்ரியை நான் அவரோட வீட்டுல போய்ப் பார்க்குறதா? அப்படிச் சொல்ல அவர் யார்? அவர் என்னைப் பார்க்க விரும்பினா இங்க வரட்டும். வந்து காத்திருந்து என்னைச் சந்திக்கட்டும்."

காரியஸ்தரிடமிருந்து விவரத்தைத் தெரிந்துகொண்ட புதுமனை தந்தரி புன்னகை புரிந்தார்: "குமாரன்தம்பி சொன்னது நியாயம்தானே? அவரைப் போன்ற ஒரு மகாமாந்திரீகனை அங்கேயே போய்ச் சந்திக்கிறதுதானே முறை? தவறு என்னோடது தான்" அவர் காரியஸ்தரிடம் கூறினார்.

புத்தூர் வீட்டுக்குச் சென்று குமாரன்தம்பியைச் சந்திப்பதென்று தந்த்ரி தீர்மானித்தார். ஒரு மத்தியான வேளையில் அவர் புத்தூர் வீட்டை அடைந்தார். குமாரன்தம்பி சர்ப்பக்காவிலுள்ள மந்தர மண்டபத்திலிருப்பதை அறிந்து, வீட்டு முற்றத்திலேயே காத்திருந்தார். திண்ணைக்கு வந்து நாற்காலியில் உட்காருமாறு கோபாலனும் குட்டப்பமாராரும் கேட்டுக் கொண்டனர். எனினும் அவர் அதைக் காதிலேயே போட்டுக் கொள்ளவில்லை. குமாரன் தம்பி வரும்வரை முற்றத்திலேயே காத்திருந்தார்.

"என்ன தந்த்ரீ, விசேஷமா ஏதாவது செய்தி உண்டா?" தந்த்ரியைக் கண்டதும் குமாரன்தம்பி கம்பீரத்துடன் கேட்டான்.

எடுத்தெறிந்து பேசும் தோரணையும், எகத்தாளமான குரலும் தந்த்ரியைச் சற்றுத் துணுக்குற வைத்தன. இருப்பினும் அவர் சாந்தமாகப் பேசத் தொடங்கினார்: "இதுவரை இந்தத் தறவாட்டைச் சேர்ந்த யாரும் சாத்வீகமான மந்திரகர்மங்களைத் தவிர, துர்மந்திரவாதம் செஞ்சதா நான் கேள்விப்பட்டதில்லை. நீங்க சமீபகாலமா அப்படிப்பட்ட மந்திரவாதம் செய்றதா நிறைய புகார் வருது. ஒரு மாந்திரீகன் ஷட்கர்மங்களை நடத்துறது தவறு அல்ல; ஆனால், அதையும் சாத்வீகமான கர்மங்களாகச் செய்றதுதான் தர்மம்."

"தந்த்ரீ, உங்களுக்கு விவரம் தெரியாதா என்ன? ஸ்தம்பனம், மாரணம், உச்சாடனம் போன்றவற்றை சாத்வீகக் கர்மங்களாக முடியுமா என்ன? எதிரிகளை அழிக்க, சாத்வீகக் கர்மங்களால முடியுமா என்ன?"

"அதிலென்ன சந்தேகம்? வசியம், ஸ்தம்பனம், வித்வேஷணம், உச்சாடனம், மாரணம் போன்ற கர்மங்களை சாத்வீகக் கர்மங்களாகவும் செய்யலாம்; குரூரமான கர்மங்களாகவும் செய்யலாம். அதுக்கு சில உதாரணங்களைச் சொல்லட்டுமா?"

"தேவையில்லை. சாத்வீக மூர்த்தியோட உபாசகனல்ல நான். சாத்வீகக் கர்மங்கள் செய்ததோட பலனை நான் அனுபவிச் சுட்டேன். நான் இப்போ வார்த்தாளியை உபாசிக்கிறேன். சத்ரு சம்காரத்திற்காக என்னை அணுகுறவங்களுக்கு உதவ வேண்டியது என் கடமை. நீங்க வேற ஏதாவது சொல்ல வேண்டி இருக்கா? எனக்கு அவசரமான வேலை இருக்கு!"

"நான் ஒண்ணே ஒண்ணு மட்டும் சொல்ல விரும்புறேன். நீங்க வார்த்தாளியையே உபாசியுங்க. ஆனால், மந்த்ர - தந்த்ர விதிகள்ல காணப்படுற பிரயோகங்களைப் பணம் சம்பாதிக்கவும், புகழுக்காவும் பயன்படுத்துறது உங்க உபாசனா மூர்த்தியை எடுபிடி வேலைகளுக்குப் பயன்படுத்துறதுக்கு ஒப்பானது. ஒரு வேளை அது ஆபத்தாகவும் முடியலாம்."

"ஆபத்தாக இருந்தா வர்றதை நான் ஏத்துக்கிறேன். அதுக்காகப் பாவம் நீங்க வருத்தப்பட வேணாம்!"

"வயசில மூத்தவன்கிற முறையில எனக்குப் பட்டதைச் சொன்னேன். நான் புறப்படுறேன். ஜகதீஸ்வரி உங்களைக் காப்பாத்தட்டும்!"

புதுமனை தந்த்ரி புறப்பட்டுச் சென்றவுடன் கோபாலன், குமாரன்தம்பியிடம் நயந்த குரலில் கூறினான். "நீங்க தந்த்ரிப் பெரியவர்கிட்ட கொஞ்சம் அதிகப்படியா பேசிட்டீங்க!"

"கோபாலா, நீ உன் வேலையைப் பார். என்னோட ஆபத்துக் காலத்தில எனக்கு உதவாதவர் அந்த மனுஷர். எனக்கு ஆபத்து ஏற்படலாமாம். வாழ்க்கையில எப்படிப்பட்ட ஆபத்துகளை

யெல்லாம் சந்திச்சவன் நான்? எனக்கு இனிமேல் எது நடந்து என்ன? ஆனால், ஒரு விஷயம் சொல்றேன். என்னை எதிர்க்க வர்றவங்களுக்கெல்லாம் பாடம் கற்றுக்கொடுத்த பிறகுதான் நான் சாவேன். நான் உயிரோட இருக்கிற வரையில பணமும், பதவியும் எனக்குக் கட்டாயமாத் தேவை." குமாரன்தம்பி உறுதியான குரலில் பேசினான்.

யதேச்சையாக வடக்குப்புற வீட்டைப் பார்த்த குமாரன் தம்பியின் கண்களுக்குத் தட்டுப்பட்டவன், களீக்கல் வீட்டு முற்றத்தில் உலாவிக் கொண்டிருந்த சேகரன்தம்பி.

"கோபாலா, சேகரன்தம்பி சமீபகாலமா ஊமை மாதிரி ஆகியிருக்கானே. தறவாட்டுக் கொட்டாரம், சொத்துக்களெல்லாம் தேவையே இல்லைங்கிற முடிவுக்கு வந்துட்டானா?"

எதையோ சட்டென்று நினைவு கூர்ந்தவனாக கோபாலன் சொன்னான: "எஜமான், நான் ஒரு விஷயத்தைச் சொல்ல மறந்துட்டேன். நேத்து நம்ம கொட்டாரத்துக்குப் போய் தேங்கா வெட்டும்போது களீக்கல் காரியஸ்தர் அங்க வந்திருந்தார்!"

"அப்புறம்?"

"சேகரன்தம்பி அவரோட வீட்டில அஷ்டமங்கல்ய பிரஸ்னம் நடத்தப் போறாராம். தறவாட்டில ஏற்பட்ட தோஷங்களுக்குப் பரிகாரம் காண பிரஸ்னம் வைக்கிறாங்களாம்"

"ஓகோ! பெரிய தறவாட்டு நேசி! அஷ்டமங்கல்ய பிரஸ்னமோ, பாவப் பரிகாரமோ எது வேணுமானாலும் செஞ்சுட்டுப் போகட்டும். கொட்டாரத்துக்குள்ள நுழைஞ்சு பூஜை கீஜை செய்ய முயன்றால், அதுதான் அவனோட வாழ்க்கையின் கடைசி நாளா இருக்கும்."

குமாரன்தம்பியின் முகத்தில் தெரிந்த கோபத்தைக் கண்ட கோபாலன் நடுங்கினான். அஷ்டமங்கல்ய பிரஸ்னம் குறித்துச் சொன்னதே தப்போ என்று அவனுக்குத் தோன்றியது.

"யாரு... அம்மாதான வர்றாங்க?" யதேச்சையாகக் கிழக்குப்புற வயல் வெளியைப் பார்த்த குமாரன்தம்பி கேட்டான்.



பானுமதி இறந்தபிறகு இங்கிருந்து போன அம்மா இதுவரை வந்ததே இல்லை என்பதுடன், தானும் அங்கு சென்று அவரைச் சந்திக்கவில்லை என்பதும் அவனது நினைவில் எழுந்தது. தனது புதிய மந்திரஸித்தி பற்றியும் இங்கு நடைபெறும் கர்மங்கள் குறித்தும் அம்மா கேள்விப்பட்டிருக்க வேண்டும். இனி இவர் வந்து என்னவெல்லாம் சொல்லப் போகிறாரோ? ஒருவேளை திட்டித் தீர்ப்பதற்காக வருகிறாரோ என்னவோ?

கொச்சுராமனுடன் வீட்டின் கிழக்குப்புற முற்றத்துக்கு வந்த குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி துளசிமாடத்தைப் பார்த்துப் பதறியவராக தன் நெஞ்சில் வலதுகரத்தைப் பதித்தார். அவரது விழிகளில் நீர் நிறைந்தன. மகனைக் கடுமையாகப் பார்த்தபடி கேட்டார்:

"துளசிமாடத்துல இருக்கிற கிருஷ்ணதுளசிச் செடியோட இலைகளை யார் இப்படிப் பிடுங்கிப் போட்டிருக்கிறது?"

"நான்தான்!" குமாரன்தம்பி தலைகுனிந்தபடி கூறினான்.

"டேய், மகாபாவி! உன்னால இந்தத் தறவாட்டுக்கு நேர்ந்ததெல்லாம் போதாதா? முற்றத்தில வளர்ற இந்தச் செடியை இப்படிச் செய்ய உனக்கு எப்படித்தான் மனசு வந்துச்சு?"

"என் உபாசனா மூர்த்திக்கு துளசி பிடிக்காது!"

"ஆமாமா... நானும் மறந்துபோயிட்டேன். துர்த்தேவதைகளுக்குத் துளசின்னாலே ஆகாதே! நீ இப்ப உபாசிக்கிறது துர்மூர்த்தியைத்தானே?"-குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி ஏளனமாகக் கேட்டார்.

"வார்த்தாளீ தேவியை!"

"கடவுளே, கருடபகவானோட இருப்பிடமான புத்தூர் தறவாட்டில வார்த்தாளீயைப் பூஜை செய்யவும் ஆரம்பிச்சுட்டியா? கருடசேவகன், கருடனை ஒதுக்கிட்டு துர்த்தேவதையை சேவிக்கிறான்! என் பித்ருக்களே, இந்தத் தறவாட்டில இன்னும் என்னவெல்லாம் நடக்கப் போகுதோ? அதையெல்லாம்

பார்த்துட்டிருக்க என்னை மண்ணில விட்டு வைக்காதீங்க!"- குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி அடக்க முடியாமல் கண்ணீர் சிந்தினார்.

"நாம போலாமா பாட்டி?"-கொச்சுராமன் பாட்டியின் வலது கையைப் பிடித்தபடி கேட்டான்.

"போகவேண்டியதுதான் குஞ்ஞுராமா. துர்த்தேவதைகளோட நடமாட்டமுள்ள இந்த வீட்டு முற்றத்தில நின்னுட்டிருக்கிறதே பாவம்."

"அம்மா, இவ்வளவு தூரம் வந்துட்டு வீட்டுக்குள்ள நுழையாம கோவிச்சுட்டுப் போறீங்களா?" - குமாரன்தம்பி துயரத்துடன் கேட்டான்.

"நாசமாயிட்ட இந்த வீட்டுக்குள்ள நான் நுழையுறதா? இந்த ஜன்மத்தில அது நடக்காது. எனக்கு நீ ஒரு உதவி செய்யணும், செய்வியா?"

"சொல்லுங்கம்மா..."

"என்னோட காலம் முடியப்போகுது. உன்கிட்ட ஒரேயொரு விண்ணப்பம். உன் துர்மந்திரவாதம் உன் காலத்தோட முடிஞ்சுடணும். உனக்கு வயசாகும்போது, இந்தப் பையனுக்கு அதை உபதேசம் பண்ணக் கூடாது!"

"என்னம்மா சொல்றீங்க? கிருஷ்ணப்பருந்தைவிடச் சக்தி வாய்ந்தது வார்த்தாளீ! எனக்குக் கிடைச்சிருக்கிற இந்த அபூர்வமான ஸித்தி இந்தத் தறவாட்டின் பின்வாரிசுகளுக்கு வேண்டாம்கிறதுதான் உங்க முடிவா?"

"வேண்டாம்! புத்தூர் தறவாட்டுக்கு துர்த்தேவதைகளோட ஆசி தேவையே இல்லை! ஒரு விஷயத்தை நீ ஞாபகத்துல வைச்சுக்க. கிருஷ்ணப்பருந்தோட ஒப்பிட்டா உன் வார்த்தாளீ ஒண்ணுமே இல்லை. கிருஷ்ணப்பருந்து எழுந்தருளினா வார்த்தாளீ ஓட வேண்டியதுதான்."

"வீண் வார்த்தை பேசாதீங்க அம்மா! வார்த்தாளீயின் அருகில் கூட கிருஷ்ணப்பருந்து வரமுடியாது."



"நாக்கு அழுகிப் போற வார்த்தைகளைப் பேசக்கூடாது குமாரா! கருடபகவானைக் கோபம் கொள்ள வைச்சா அது ஆபத்துங்கிறதைப் புரிஞ்சுக்க!"

"ஆபத்தைக் கண்டு நான் பயப்படப் போறதில்லை. நான் எதையும் தாங்கிப்பேன். உங்க பொல்லாத கிருஷ்ணப்பருந்தும், ஒரு தறவாடும்..."

"சரி, கிருஷ்ணப்பருந்தைவிட சக்தி வாய்ஞ்சது வார்த்தாளீ நானே? உனக்கு இனிமேல் கிருஷ்ணப்பருந்தோட துணை வேண்டாமே?"

"வேண்டவே வேண்டாம்!"

"அப்படின்னா நீ ஒரு காரியம் செய். கிருஷ்ணப்பருந்தோட உறைவிடமான கொட்டாரத்தை விட்டுக்கொடு. அதோட சாவியை சேகரன்கிட்ட ஒப்படைச்சுடு."

குமாரன்தம்பி திடுக்கிட்டான். "கொட்டாரத்தை யாருக்கும் விட்டுத்தர மாட்டேன். தறவாட்டுக் காரணவரும் மாந்திரீகனும் நான்தான்!"

"குமாரா... கொட்டாரத்தைச் சேர்ந்த சொத்துக்கள்லேருந்து வருமானத்தை எடுத்துக்கிறதைத் தவிர, இப்ப அதற்கும் உனக்கும் என்ன தொடர்பு? நீயோ கொட்டரத்துக்குள்ள நுழையுறதில்லை. சமாதிமாடங்கள்ல விளக்கேத்தி எவ்வளவு நாளாச்சு? அமாவாசை பூஜையும், கருடபூஜையும் நின்னு போய் எவ்வளவு காலமாகுது? வார்த்தாளீயை சேவிக்கும் துர்மந்திரவாதிக்கு, நல்ல மந்திரவாதத்தில் நம்பிக்கை கொண்ட புத்தூர் தறவாட்டின் சொத்துகள் மேல என்ன உரிமை இருக்கு? நான் சொன்னபடி செய்றதுதான் உனக்கு நல்லது."

"அது மட்டும் முடியாதும்மா. என் உயிரே போறதா இருந்தாலும் தறவாட்டுக் கொட்டாரத்தை நான் ஒருபோதும் விட்டுத்தர மாட்டேன். இது வார்த்தாளீ தேவிமீது ஆணை!"

அதன் பிறகு வாயைத் திறக்காத குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி பேரனுடன் வடக்கு வீட்டை நோக்கி நடந்தார்.

"அம்மச்சியும், குழந்தையும் களிக்கல் வீட்டுக்கில்ல போறாங்க?" - கோபாலன் வியப்புடன் கூறினான். அப்போதுதான் குமாரன்தம்பியும் அதைக் கவனித்தான்.

"என் தாய் என்னைவிட அதிகமா நேசிக்கிறது புத்தூர் தறவாட்டைத்தான்! அஷ்டமங்கல்ய பிரஸ்னம் செஞ்சு தறவாட்டின் குறை, சாபங்களைக் களைஞ்சு முன்னேறுறதைப் பத்தித் தெரிஞ்சுக்கப் போறாங்க போலிருக்கு" - லேசான புன்னகையுடன் குமாரன்தம்பி பேசினான்.

"எஜமான், அஷ்டமங்கல்யப் பிரஸ்னம்னா என்ன?". கோபாலன் தன் சந்தேகத்தை நேரடியாகவே கேட்டான்.

"குலவை தர்ப்பணம் தீபம் கலசம் வஸ்த்ரமக்ஷதம் அங்கனா ஹேமஸம்யுக்த மஷ்டங்கல்யம் லக்ஷணம். அதாவது குலவை, கண்ணாடி, விளக்கு, பூரண கும்பம், உடை, மரக்கால் நிறைய நெல், சுமங்கலிப் பெண், தங்கம் இவையெல்லாம்தான் அஷ்டமங்கல்யம்கிறது. இதையெல்லாம் பயன்படுத்தி தறவாட்டின் சீர்கெட்ட நிலைக்குப் பரிகாரம் செய்றதுக்காக நடத்துற பிரஸ்னம்தான் அஷ்டமங்கல்யப் பிரஸ்னம்" - குமாரன்தம்பி விளக்கினான்.

"அதனால உங்களுக்கு ஏதாவது ஆகுமோங்கிறது என்னோட பயம்!"

"அந்த நினைப்பையே குப்பையில போடுடா கோபாலா! என்னை வெற்றிகொள்ள எந்தச் சக்தியாலும் முடியாது!". குமாரன்தம்பி வாய்விட்டு உரத்த குரலில் சிரித்தான்.

## 60

களிக்கல் வீட்டுச் சவுக்கையில் அஷ்டமங்கல்யப் பிரஸ்னம் ஆரம்பமானது. புகழ்பெற்ற ஐந்து ஜோதிடர்கள் வரிசையாக அமர்ந்து பிரஸ்னம் வைத்து விவாதித்தனர். புத்தூர் தறவாட்டைச் சேர்ந்த எல்லாக் கிளை உறுப்பினர்களும், பிரஸ்னத்தின் முடிவைத் தெரிந்து கொள்ள ஆர்வமாகக் குழுமியிருந்தனர்.



"எஜமான், வடக்கு வீட்டில அஷ்டமங்கல்யப் பிரஸ்னம் ஆரம்பமாகிடுச்சு." - கோபாலன், குமாரன்தம்பியிடம் விவரம் சொன்னான்.

"செய்யட்டும் கோபாலா... அப்படியும் களிக்கல் வீட்டாரோட பணம் கொஞ்சம் செலவாகட்டுமே" - குமாரன்தம்பி கேலித் தொனியில் கூறினான்.

திடுமென்று குமாரன்தம்பியின் மனத்தில் ஒருவகையான நிம்மதிக் குலைவு ஏற்பட்டது. 'ஜோதிடர்கள் எப்படிப்பட்ட பரிகாரங்களை முன்வைப்பார்களோ?' இந்தச் சிந்தனை அவனது மனத்தை வலுவாகத் தாக்கத் தொடங்கியது. தறவாட்டின் ஆராதனா மூர்த்தியான கருடனையும், ஹனுமானையும், தேவியையும் பித்ருக்களையும் மகிழ்ச்சிப்படுத்துவதற்கான பூஜைகள் எதையாவது நடத்தவேண்டுமென்று பிரஸ்னத்தில் ஜோதிடர்கள் சொல்வார்களோ? அப்படிப்பட்ட பூஜைகள் ஏதாவது நடக்கும் பட்சத்தில் அது, வார்த்தாளீ உபாசகனான தன்னை ஏதாவது ஒரு வகையில் பாதிக்குமா? தான் புதிய பிரச்சினைகளைச் சமாளிக்க வேண்டி இருக்குமா?

"எஜமான் மதியத்திலயாவது நிம்மதியா உட்கார்ந்து கொஞ்சம் சாப்பிடுங்களேன்."-கோபாலன் கூறினான்.

"எனக்குப் பசியில்லை கோபாலா... நீங்க சாப்பிட்டுக்கங்க!"

எதுவோ ஒரு தீர்மானத்துக்கு வந்தவனைப்போல் மந்திரப் பிரம்பை எடுத்துகொண்டு மந்திரமண்டபத்தை நோக்கி நடந்தான்.

விடியற்காலையில் ஆரம்பித்த அஷ்டமங்கல்யப் பிரஸ்னத்தை மதியமானபோது தற்காலிகமாக நிறுத்தினர். தறவாட்டின் ஆரம்பம், மாந்திரீகப் பாரம்பரியம், கருடசேவை போன்ற விவரங்களை

மதியமாவதற்குள் பிரஸ்னத்தில் தெளிவாக அறிந்து கொள்ள முடிந்தது.

மதிய உணவை முடித்து, சிறிய ஓய்வெடுத்த பிறகு ஜோதிடர்கள் மீண்டும் தங்கள் பணியில் ஈடுபட்டனர். சோழியைப் பரப்பிய ஜோதிடர்கள் ஐந்து பேரும் ஏக காலத்தில் திடுக்கிட்டனர்!

"என்ன ஆச்சு? இது ஓர் அசுப சூசனையாச்சே?"-ஜோதிடத்தில் ஓரளவு புலமையுள்ள குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வியப்புடன் கேட்டார். மற்ற பார்வையாளர்கள் பயத்துடன் நின்று கொண்டிருந்தனர்.

"பிரஸ்னம் தடைப்படுது. யாரோ தடை செய்றாங்க!" - ஜோதிடர்களில் முக்கியமானவரான வாரியார் ஆசான் சொன்னார். சற்றுநேரம் கண்களை மூடி யோசனையில் ஆழ்ந்தவர் தொடர்ந்தார்: "நம்ம பிரஸ்னத்தை ஒரு துர்த்தேவதை தடை செய்யுது. இந்தத் தடையை விலக்காம பிரஸ்னத்தைத் தொடர முடியாது!"

மந்திரமண்டபத்தில் அமர்ந்து மந்திரப்பிரம்பைச் சுழற்றிக் கொண்டு குமாரன்தம்பி ஆர்ப்பரித்தான்."என்னடா சேகரா! அஷ்டமங்கல்யப் பிரஸ்னம் நின்னு போச்சா? நீ விளையாடுறது சக்தி வாய்ந்த ஒரு மாந்திரீகன்கிட்டங்கிறதை இப்பவாவது புரிஞ்சுக்க. என்னோட அம்மா அங்க இருக்கிறதால நான் இந்த மட்டில நிறுத்திக்கிறேன். இல்லேன்னா பிரஸ்னம் பார்ப்பவர்களையும், அதற்கு ஏற்பாடு செஞ்சவங்களையும் ஒரு வழி செஞ்சிருப்பேன்." குமாரன்தம்பி உரத்த குரலில் சிரித்தான். பிறகு வார்த்தாளீ மந்திரங்களை உருவிட்டபடி ஸ்தம்பனப் பிரயோகத்தைத் தொடங்கினான். ஜோதிடர்களைச் செயலிழக்கச் செய்வதுதான் அவனது நோக்கமாக இருந்தது.

"இதுக்கு மாற்றுவழி கண்டுபிடிக்கணுமே, வாரியார் ஆசானே!" - சேகரன்தம்பி பரபரத்தான்.

"அதுதான் பார்க்குறீங்களே!- சோழியைக் கையால தொடவே முடியலை!" சோழியை ஒரு தடவை தொட்டுவிட்டுச் சட்டென்று கையைப் பின்னுக்கு இழுத்தவாறு வாரியார் ஆசான் கூறினார்.



பிரஸ்னம் நடைபெறும் இடத்துக்கு அருகிலேயே அமர்ந்திருந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி நீர் நிறைந்த கண்களுடன் கூறினார்: "இந்தத் தறவாட்டைச் சேர்ந்தவங்க எல்லாரும் கருடமூர்த்தியைத் தியானியுங்க. பக்ஷிராஜா மனம் கனிகிறாரான்னு பார்ப்போம்."

எல்லோரும் கரங்களைக் கூப்பி எழுந்து நின்றனர். குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் உதடுகள் அசைந்து கொண்டிருந்தன. அவருடைய மனத்தில் கிருஷ்ணப்பருந்தின் உருவம் மட்டுமே இருந்தது.

சிறகடியோசை கேட்டு எல்லாரும் திடுக்கிட்டனர். குஞ்ஞுக் குட்டித் தங்கச்சி மட்டும் கருடனைத் தியானித்துக் கொண்டிருந்தார்.

சிறகடியோசை ஓய்ந்தது. கண்களைத் திறந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி ஜோதிடர்களை நோக்கிப் புன்னகைத்தார்: "பிரஸ்னம் நடக்கட்டும்!"

தயங்கித் தயங்கித்தான் ஜோதிடர்கள் மறுபடியும் பிரஸ்ன கர்மத்தைத் தொடங்கினர். அவர்களுக்கே வியப்பாக இருந்தது. தடை நீங்கியிருந்தது! அஷ்டமங்கல்யப் பிரஸ்னம் தடையின்றி முன்னேறியது.

கண்கள் இருளடைவதைப்போல் உணர்ந்த குமாரன்தம்பிக்கு வியப்புத் தோன்றியது. பகல்வேளையில் தன் கண்களுக்குப் பார்வைக் குறைவா?

அவன் மந்திரப்பிரம்பை சுழற்றியபடி யோசனையில் ஆழ்ந்தான்.

என்ன! கருட சேவையின் மூலம் யாரோ தன் பிரயோகத்தைத் தகர்த்தெறிந்து விட்டனர். அப்படியானால் ஸ்தம்பன கர்மத்திற்குப் பதிலாக மாரணகர்மம் செய்து வெற்றி பெறவும் தன்னால் முடியும்!

சட்டென்று தன் குருவின் உபதேசத்தைக் குமாரன்தம்பி நினைவு கூர்ந்தான். கருடனை நெருங்கவோ, பகைத்துக்

கொள்ளவோ முயலக்கூடாது என்ற குருவின் வார்த்தைக்குக் கட்டுப்படுவதுதான் நல்லதென்று அவன் மனம் எச்சரித்தது.

"அஷ்டமங்கல்ய பிரஸ்னத்தை நடத்திக்கொள்ளுங்க. ஆனால், பரிகார கர்மங்களைச் செய்ய முற்படும்போது பார்த்துக்கிறேன்."- தனக்குத்தானே பேசிக் கொண்டான்.

மந்திரமண்டபத்தை விட்டு வெளியே வந்தபோது கண்பார்வை பழையபடி தெளிவடைந்தது. வெளிச்சம் நிறைந்த சுற்றுப்புறம்! அவன் வீட்டை நோக்கி நடந்தான்.

மூன்று நாட்களாகத் தொடர்ந்த அஷ்டமங்கல்யப் பிரஸ்னம் மூன்றாவது நாளன்று மாலை நேரத்தில் முடிவடைந்தது.

தறவாட்டில் ஏற்பட்டுள்ள சீரழிவுக்கான காரணங்களை அறிந்த தறவாட்டைச் சேர்ந்தவர்கள் கவலை கொண்டார்கள். கருடமூர்த்தி ஏறத்தாழ தறவாட்டைக் கைவிட்டுவிட்டாற் போலத்தான். ஹனுமானும் தேவியும் தறவாட்டின்மீது கோபங் கொண்டுள்ளனர். பித்ருக்கள் ஏற்கெனவே தறவாட்டுடன் கருத்து வேறுபாடு கொண்டிருந்தனர். தறவாட்டின கர்மஸித்தியான மாந்திரீகஸித்தி இனி ஒருபோதும் திரும்பக் கிடைக்கப் போவதில்லை. தறவாட்டு மாந்திரீகன் துர்த்தேவதையை உபாசனை செய்வதால், கருடன் அதிருப்தி கொண்டுள்ளார். ஆசாரங்களும், பூஜைகளும் தடைப்பட்டுப் போனதால் தறவாட்டின் ஐஸ்வரியம் முழுவதுமாக அழிந்துவிட்டது. தறவாட்டில் விரைவிலேயே ஒரு துர்மரணம் நிகழப்போகிறது.

பரிகார வழிகளையும் ஜோதிடர்கள் கண்டுபிடித்துக் கூறியிருந்தனர். முதலில் செய்ய வேண்டியது தறவாட்டுக் கொட்டாரத்தில் கருட பூஜை. அதன்பிறகு தறவாட்டின் சர்ப்பக்காவில் சர்ப்பங்களுக்குப் பலியும், நாகபூஜையும் செய்யவேண்டும். மட்டுமின்றி இன்றோ நாளையோ இடிந்து விழுவதுபோல் சிதிலமாகி உள்ள கொட்டாரத்தைப் பிரித்துவிட்டு அங்கு ஒரு கோயில் கட்ட வேண்டும். கொட்டாரத்தின் பீடம், உடைவாள், ஓலைச்சுவடிகள் போன்றவற்றை புதிய கோயிலின் கருவறைக்குள் ஸ்தாபிதம் செய்யவேண்டும். நாள்தோறும் பூஜை,



நிவேதனம் செய்வதுடன் வருடத்துக்கு ஒரு முறை நடத்தும் அமாவாசை மற்றும் கருட பூஜைகளையும் நிறுத்தக் கூடாது.

தறவாட்டு உறுப்பினர்கள் ஒன்றாகக்கூடி இதைப்பற்றி ஆலோசனை செய்தனர். குமாரன்தம்பியிடமும் இதைப்பற்றிக் கருத்துக் கேட்கவேண்டும் என்ற ஒரு சிலரது வேண்டுகோளை சேகரன்தம்பி முற்றாக ஒதுக்கித் தள்ளினான்.

"எதுக்காக நாம அவனுக்குப் பயப்படணும்? கொட்டாரத்தில பூஜை செய்வதற்கோ, கொட்டாரத்தைப் பிரிச்சுக் கோயில் கட்டுறதுக்கோ அவனோட அனுமதி எதுக்கு? நம்ம தறவாட்டைச் சேர்ந்த சர்ப்பக்காவில் பூஜை செய்றதுக்கு அதோட சொந்தக்காரரான குஞ்ஞுக்குட்டிப் பெரியம்மா சம்மதிச்சாப் போதுமே?" சேகரன்தம்பி கூறினான்.

"சேகரா!"-ஆலோசனையில் பங்கெடுத்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி அழைத்தார்.

"என்ன பெரியம்மா?"

"ஆயிரம் இருந்தாலும் குமாரன் என் வயித்துல பிறந்துட்டானே? நானும் மகேஸ்வரியும் சேர்ந்து முதல்ல அவன் கிட்டப் பேசுறோம். துர்மந்திரவாதத்தை நிறுத்திட்டு தறவாட்டைக் காப்பாத்துன்னு அவன்கிட்டச் சொல்லிப் பார்ப்போம். அவனும் நம்மோட சேர்ந்துட்டா அதுவும் நல்லதுதானே?"

"பெரியம்மா, உங்க விருப்பப்படியே செய்யுங்க"-சேகரன்தம்பி ஒப்புக்கொண்டான்.

மகேஸ்வரிதங்கச்சியை அழைத்துக் கொண்டு குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி வீட்டை நோக்கி நடந்தார். குளக்கரை ஓரமாக வீட்டு முற்றத்துக்கு வந்தபோது யதேச்சையாகக் குளத்தைக் கவனித்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி மலைத்துப் போனார்.

"மகேஸ்வரி அங்க பார்த்தியா? குமாரன் தண்ணியில மிதந்தபடி உக்காந்திருக்கிறதை?"

குளத்தின் பக்கமாகப் பார்த்த மகேஸ்வரித் தங்கச்சி சொன்னார்: "இப்படிப்பட்ட ஜாலவித்தைகளை நல்ல மந்திரவாதம் செய்றவங்க நடத்துவாங்களா அக்கா? துர்த்தேவதையோட சுவாதீனத்தால ஆணவம் கொண்டிருக்கிறான் குமாரன்."

அக்காளும், தங்கையும் கிழக்குப்புற முற்றத்திலேயே நின்றிருந்தனர்.

"வாங்க உள்ள வாங்க!" கோபாலன் அவர்களிடம் அன்பு காட்டி வரவேற்றான்.

"நீ உன் வேலையைப் பாருடா..." குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி, கோபாலனிடம் கோபித்துக்கொண்டார். "கோபாலன் மட்டும்தான் இங்க இருக்குறானா... இல்லை, மீனாக்ஷியும் இங்கதான் இருக்காளா?

"நீங்க இப்படியெல்லாம் கேக்குறது வருத்தமா இருக்கு. இந்த வீட்டில காரியஸ்தர் வேலை செய்ய யாருமில்லாததால என்னைக் கூப்பிட்டார்; வந்தேன். மீனாக்ஷி எதுக்காக இங்க வந்து தங்கணும்? பணவசதி குறைவா இருந்தாலும் அவளும் ஒரு நல்ல தறவாட்டைச் சேர்ந்தவதான்!"

"அதெல்லாம் போகட்டும். இவங்கள்லாம் யார்?" முற்றத்தில் ஆங்காங்கே நின்று கொண்டிருந்த இளைஞர்களைப் பார்த்தபடி குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி கேட்டார்.

"இவங்கள்லாம் தம்பி எஜமானைத் தேடி வந்திருக்கிறவங்க. இங்க இப்ப பழைய மாதிரியா இருக்கு நிலைமை? சில நாட்கள் எங்களால தூங்கவே முடியறதில்லை. ராத்திரி பகல்ன்கிற வித்தியாசமே இல்லாம தம்பியைத் தேடி வந்துட்டே இருக்காங்க." கோபாலன் பதிலளித்தான்.

குமாரன்தம்பி குளத்திலிருந்து கரைக்கு வந்தபோது மாலை நேரமாகி இருந்தது. அம்மாவையும் சித்தியையும் பார்த்தவன் வியப்படைந்தான்.



"நாங்க உன்கிட்டச் சில விஷயங்களைப் பத்திப் பேச வந்திருக்கிறோம். இவங்களைக் கொஞ்சம் ஒதுங்கி இருக்கச் சொல்" குஞ்ஞுக்குட்டித்தங்கச்சி மகனிடம் கட்டளையிட்டார்.

முற்றத்தில் இருந்தவர்கள் இடத்தைக் காலி செய்தனர். குமாரன்தம்பி தலைகுனிந்தபடி நின்றான்.

"கருடனும் மற்ற மூர்த்திகளும், பித்ருக்களும் நம்ம தறவாட்டு மேல கோபங்கொண்டிருக்கிறது பிரஸ்னத்தில தெரியுது. கொட்டாரத்தில் கருட பூஜையும் கிழக்குப்புறக் காவில் சர்ப்ப பூஜையையும் உடனடியா நடத்தணும். கொட்டாரத்தைப் பிரிச்சிட்டு அங்க ஒரு கோயில் கட்டணும். தறவாட்டுப் பீடம், உடைவாள், ஓலைச்சுவடிகளை அங்க பிரதிஷ்டை செய்யணும். நீயும் சேர்ந்து இதையெல்லாம் நடத்தணும் குமாரா. உன் மோசமான பிடிவாதத்தை விட்டுட்டுத் தறவாட்டைக் காப்பாத்து. பரிகார கர்மங்களை உடனடியா நடத்தலேன்னா தறவாட்டில உடனே ஒரு துர்மரணம் நிகழும்னு பிரஸ்னம் சொல்லுது" - குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி கூறினார்.

குமாரன்தம்பியின் முகம் உடனே மாறியது. "கொட்டாரத்துல கருட பூஜையை நடத்துறதா? சர்ப்பக்காவில பூஜையா? கொட்டாரத்தைப் பிரிச்சிட்டுக் கோயில் கட்டுறதா? இது எதுவும் நடக்காது! என் கைவசமுள்ள கொட்டாரத்துக் குள்ளோ, காவுக்குள்ளோ ஒருத்தனையும் நுழைய விடமாட்டேன். உயிர்மீது ஆசை உள்ள எவனும் அதுக்கு முயற்சிக்கவும் வேண்டாம்!"- குமாரன்தம்பி அலறினான்.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியின் தோளைப் பிடித்த மகேஸ்வரித் தங்கச்சி கூறினார். "நாம புறப்படலாம் அக்கா. எவ்வளவு ஆபத்து ஏற்பட்டாலும் இவன் திருந்தப் போறதில்லை.. நம்ம சந்ததியில வாரிசே இல்லாமலாயிடலையா? இவனோட மனைவி புதுப்புடவையோட வாசனை மாறுறதுக்கு முன்னாலேயே இறந்து போகலையா? இருந்தும் இவனோட ஆணவம் கொஞ்சமாவது குறைஞ்சிருக்கா? இவனைவிட நமக்கு தறவாடுதான் முக்கியம். இவனோட துர்த்தேவதையைவிட நமக்கு கருடன்தான் முக்கியம்!"

மகனிடம் விடைபெற்றுக் கொள்ளாமல், தங்கையின் கையைப் பிடித்தபடி குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி களீக்கல் வீட்டிற்குப் போனார்.

"குமாரன் என்ன சொல்றான் பெரியம்மா?" - சேகரன்தம்பி கேட்டான்.

"அவன் உருப்படமாட்டான் சேகரா... பிரஸ்னம் பார்த்து அவங்க சொன்ன பரிகாரங்களுக்கான வேலையை நாளைக்கே ஆரம்பிச்சுடு. கொட்டாரத்தில கருடபூஜை தொடங்கும்போது தெரியப்படுத்து. நாங்க வர்றோம்" குஞ்ஞுக்குட்டித் தங்கச்சி ஒரே மூச்சில் பேசிவிட்டுத் தங்கையுடன் கொச்சுபுத்தூர் வீட்டை நோக்கி நடந்தார்.

## 61

புத்தூர் வீட்டின் கிழக்குப்புற முற்றத்தில் உலாவிக் கொண்டிருந்த குமாரன்தம்பியின் இதயம் திகைப்பில் ஆழ்ந்திருந்தது. அடிக்கடி வடக்குப் பகுதியிலிருந்த களீக்கல் வீட்டைப் பார்த்தபடி பற்களை நறநறவென்று கடித்தான்.

"கோயில்ல ராத்திரி பூஜை முடிஞ்சிடுச்சு" - குமாரன்தம்பியை நெருங்கிவந்த கோபாலன் கூறினான்.

"அதுக்கு நான் என்ன செய்யணும்?" - குமாரன்தம்பி எரிச்சலுடன் கேட்டான்.

"நீங்க மத்தியானத்துலயும் சாப்பிடலை. ராத்திரியாவது சாப்பிட வாங்க."

"எனக்குப் பசிக்கலை. கொஞ்சம் பால் மட்டும் தா... அதுபோதும். நீங்க சாப்பிட்டுக்கங்க."

முற்றப்பகுதியில் அங்கங்கே நின்று கொண்டிருந்த சிப்பந்திகளைப் பார்த்த குமாரன்தம்பி கூறினான். "எல்லாரும்



இன்னிக்கு ராத்திரி இங்கயே இருங்க. ஒருவேளை ஒரு இடம் வரைக்கும் போகவேண்டியிருக்கும்."

திண்ணைக்கு வந்த குமாரன்தம்பி அங்கு கிடந்த சாய்வு நாற்காலியில் அமர்ந்தான். அவனது மனம் சிந்தனையில் ஆழ்ந்தது.

தான் இப்போது முற்றிலுமாகத் தனிமைப்படுத்தப் பட்டிருக்கிறோம். பெற்ற தாய்கூட மகனை வெறுத்து ஒதுக்கிவிட்டார். நேற்றுவரை விரோதம் பாராட்டி வந்த உறவினர்களுடன், இப்போது அம்மாவும் சித்தியும் கட்சி சேர்ந்து விட்டார்கள்.

இந்தத் தறவாட்டில் நிகழ்ந்துவிட்ட துயரமான விபத்துகளுக்குப் பரிகாரம் செய்வதற்காகத் தன்னைத் தவிர மற்றவர்கள் எல்லாரும் ஓரணியில் திரண்டு நிற்கின்றனர். தறவாட்டுக்கு என்ன நேர்ந்தாலும் சரி பரவாயில்லை... தனது பதவியையும் மாந்திரீக சக்தியையும் நிலை நிறுத்தவும் வலுப்படுத்திக் கொள்ளவுமான லட்சியத்துடன் தனியாளாக மறுபுறத்தில் நான். ஒரு போராட்டத்திற்கான ஆரம்பம்!

தறவாட்டுக் கொட்டாரத்தில் நாளை கருட பூஜை நடத்தப் போகிறார்களாம். அதன்பிறகு சர்ப்பக்காவில் சர்ப்பங்களுக்கான பலி! கொட்டாரத்தைப் பிரித்துவிட்டுக் கோயில் கட்டப் போகிறார்களாம்!

அது நடக்காது! தறவாட்டு மாந்திரீகனும், காரணவருமான நான் உயிருடன் இருக்கும்போது என் அனுமதி பெறாமல் கொட்டாரத்தில் பூஜை செய்யவோ, கோயில் கட்டவோ விடமாட்டேன். கருடபூஜை நடத்துவது கருடனை மகிழ்ச்சிப் படுத்துவதற்காகத்தானே இருக்கும்? தறவாட்டில் கருடனின் அனுக்கிரகம் அதிகரித்தால், தனதுநிலை மோசமாகிவிடும். வார்த்தாளீ சேவைக்கு ஒருவேளை அது ஒரு தடையாகவும் இருக்கக்கூடும்.

தான் கர்மங்கள் செய்யுமிடம் சர்ப்பக்காவு. அதன் மத்தியிலுள்ள மந்திரமண்டபம் தன் மந்திரவாதப் பிரயோகங் களுக்கான களம். தன் குருவின் சமாதியும் அங்கு உள்ளது.

பட்டத்திரியின் யக்ஷிக்காவிலிருந்து ஆவாஹம் செய்து கொண்டு வந்திருக்கிற வடயக்ஷிணியையும், தூமாவதியையும் ஸ்தாபித்து வைத்திருப்பதும் அங்குதான். அந்த இடத்தில் மற்றவர்கள் நுழைந்து பூஜை செய்வதா? அது கூடாது! தான் உயிருடன் இருப்பதுவரை அதற்கு யாரையும் அனுமதிக்க முடியாது! தனது நெஞ்சில் ஏறி மிதிக்காமல் எவனும் சர்ப்பக்காவுக்குள் நுழையக்கூடாது.

தறவாட்டின் மேன்மையைக் கருதி... அதற்காகப் பரிகாரம் செய்கிறோம் என்ற பெயரில் கருடனையும் மற்ற மூர்த்திகளையும், பித்ருக்களையும் மகிழ்ச்சியடையச் செய்து திவ்யசக்தி வாய்ந்தவனாகத் தன்னைக் காட்டிக்கொள்ள விரும்பும் சேகரனது லட்சியம் வெற்றி பெற்றுவிட்டால், அது தனது கௌரவத்தையும் பாதிக்கும்? தன்னுடைய பதவி அதனால் தரங்குறைந்தது போகும்? இப்போது கொட்டாரம் உள்ள இடத்தில் ஒரு கோயில் எழுந்தால் சேகரன்தானே அதன் நிர்வாகியாக விளங்குவான்? சுருக்கமாகச் சொன்னால், புத்தூர் தறவாட்டின் நாயகனாக அவன் உயர்ந்து விடுவான். தறவாட்டை அழித்த ஓர் உறுப்பினனாக, வெறும் ஒருதுர்மந்திரவாதியாகத் தான் தரம் தாழ்ந்துவிடுவோம் - ஒதுக்கப்படுவோம்.

பரிகாரக் கர்மங்கள் செய்கிறோம் என்ற பேரில் தன்னுடைய உபாசனா மூர்த்தியை அழிக்கவும் அவர்கள் முயலக்கூடும். துர்க்கா தேவியை அகற்றிவிடுவதும் அவர்களுக்குச் சாத்தியமாகலாம். புதுமனை தந்த்ரி போன்ற ஒருவர் உதவி செய்தால் அது சாத்தியமாகும். இப்போதைய நிலையில் புதுமனை தந்த்ரி சேகரனுக்கு உதவ வரமாட்டார் என்றும் கூற முடியாது. தன்னுடைய மந்திரவாதப் பிரயோகங்களால் அவர் அதிருப்தி கொண்டிருக்கிற நேரமும்கூட. துர்மந்திரவாதத்தை நிறுத்திக்கொள் என்று தன்னிடம் அவர் உபதேசம் செய்ய வந்தபோது, அவரிடம் மரியாதையுடன் நடந்துகொள்ளவில்லை என்கிற கோபமும் அவர் மனத்தில் இருக்கலாம். புதுமனை தந்த்ரி பூஜை செய்ய வருவார் என்றால் நிச்சயம் அது ஆபத்ததுதான்! அவருக்கு எல்லாவிதமான



தந்த்ரங்களும், மந்திரங்களும் தெரியும். எல்லாவற்றுக்கும் மேலாக ஸ்ரீ சக்ராதினிவாசினியான தேவி திரிபுர ஸுந்தரியின் உபாசகரும்கூட!

முதலில் பூஜையை ஆரம்பிப்பது கொட்டாரத்தில் என்று சொன்னார்கள். அப்படியானால் கருட பூஜை தான் முதலில் நடைபெறும் சடங்காக இருக்கும். அதற்குப் பிறகு சர்ப்பக்காவுக்கு வருவார்கள். பிறகு கோயில் கட்டுமானம். உடைவாளையும், பீடத்தையும், ஓலைச்சுவடியையும் கோயில் கருவறைக்குள் பிரதிஷ்டை செய்வது கடைசிக் கட்டச் சடங்காக இருக்கும்.

ஓலைச்சுவடிகள் சேகரனது கைக்குக் கிடைத்துவிட்டால் வேறொரு பின்விளைவும் நிகழச் சாத்தியமிருக்கிறது. அதாவது பித்ருக்களைத் தியானித்துக்கொண்டு கருடசேவை மற்றும் இதர உபாசனைகளையும் அவன் ஆரம்பிக்கக்கூடும். அவனது முயற்சி வெற்றி பெற்றுவிட்டால், அவன் புத்தூர் தறவாட்டின் உண்மையான மாந்திரீகனாகிவிடுவான். தறவாட்டின் மாந்திரீக ஸித்தியை மீட்டெடுத்த அசகாய சூரனாக மதிக்கப்படுவான். தன் தாய் உட்பட முனையவர்கள் அனைவரும் அதில் மகிழ்ச்சி அடைவார்கள். அங்கு அவமானத்தால் கூனிக்குறுக வேண்டியது நான் மட்டுமே.

முடியாது! அப்படியொரு நிலையைக் கற்பனை செய்து பார்க்கவே தன்னால் முடியவில்லை. தறவாட்டின் பெறற்கரிய சொத்தாக விளங்கும் மந்திர ஓலைச்சுவடிகள் தனது எதிரியான சேகரனது கைக்கு அகப்படக்கூடாது. சேகரனுக்கு மட்டுமல்ல; இந்தத் தறவாட்டைச் சேர்ந்த வேறு எவருக்குமே அது கிடைக்கக்கூடாது. அது பூஜைக்குரிய பொருளாக மாறிவிடவும் கூடாது!

பீடம், உடைவாள், ஓலைச்சுவடிகள் போன்றவை எல்லாம் கொட்டாரத்தின் பூஜையறைக்குள் இருந்தால்தானே அவற்றை எடுத்துப் பிரதிஷ்டை செய்வார்கள்? அதெல்லாம் கிடைக்காமலே போய்விட்டால்... அவர்களது திட்டமே தகர்ந்துவிடாதா? அவை கொட்டாரத்திலிருந்து மறைந்து விட்டால்... தான் வெற்றியடைந்து விடுவோம். அதற்கு என்ன வழியென்று தீவிரமாகச் சிந்திக்கவேண்டும்.

கொட்டாரத்தின் சாவி தன்னிடம் உள்ளது. ஆனால், கொட்டாரத்துக்குள் நுழைந்து அவற்றை எடுப்பதற்கு என்ன வழி? தறவாட்டு நிலவறைக்குள்ளும், கொட்டாரத்துக்குள்ளும் தான் நுழையக்கூடாது என்பது குருவின் கண்டிப்பான உத்தரவாயிற்றே!

இந்த வேலையைச் செய்ய வேறு யாரையும் அனுப்பி வைக்கவும் முடியாது. குடும்ப யக்ஷியும், கருடனும், ஹனுமானும், தேவியும், பித்ருக்களும் குடியிருக்கும் இடமாக நம்பப்படுகிற கொட்டாரத்துக்குள் நுழைய அன்னியர் யாரும் தயாராகவும் மாட்டார்கள். அது மட்டுமல்ல அது ஆபத்தானதும்கூட! வார்த்தாளிதேவி சக்தியே வடிவானவள் அல்லவா? வார்த்தாளியைத் தியானித்தபடி மாந்திரீகப்பிரம்புடன் நானே கொட்டாரத்துக்குள் நுழைந்தால் என்ன? வார்த்தாளி சேவகனை மற்ற மூர்த்திகள் நெருங்கித் தொல்லை தருமா என்ன? தன்னுடைய மந்திரப் பிரம்பு மட்டும் கையில் இருந்தால், எப்படிப்பட்ட மூர்த்தியின் தொல்லைகளிலிருந்தும் தப்பித்துவிட முடியுமே!

புதிய குரு ஒருவரின் சீடனாகி விட்டதால் புதுப்பிறவி எடுத்திருப்பவன் அல்லவா நான். அப்படித்தானே குருவும் கூறினார். இந்த நிலைமையில் நான் எதற்காகப் புத்தூர் தறவாட்டின் ஆராதனா மூர்த்திகளையும் பித்ருக்களையும் நினைத்துப் பயப்பட வேண்டும்?

மறுபடி மாந்திரீகப் பதவியேற்று புதிய வாழ்க்கை தொடங்கிய பிறகு பப்புமாமாவின் அசரீரியை நான் கேட்டதேயில்லை. என்னை எந்தவிதத்திலும் தொல்லைப்படுத்தியதுமில்லை; கருடன்கூட தொல்லைப்படுத்தியதில்லை.

"எஜமான்!" - என்கிற அழைப்பைக் கேட்டு குமாரன்தம்பி சிந்தனை வலையிலிருந்து விடுபட்டுவந்தான். வெள்ளி டம்ளரில் காய்ச்சிய பாலுடன் எதிரே நின்று கொண்டிருந்தான் கோபாலன்.

கோபாலனிடமிருந்து பாலை வாங்கிப் பருகிய குமாரன்தம்பி கேட்டான்: "கோபாலா, என்னோட கௌரவத்தைக் காப்பாத்திக்க என்ன செய்யலாம்?"



"எஜமான, நீங்க எதுக்காகப் பயப்படணும்? ஊரையே நடுங்க வைச்சுட்டிருந்த சூரக்காட்டுப் பட்டத்திரியை மண்ணைக் கௌவ வைக்கலையா நீங்க? கொட்டாரத்திற்குள்ளோ, காவிற்குள்ளோ ஒருத்தனையும் நாம நுழைய விடக்கூடாது. நாங்க எல்லாரும் உங்களுக்காக உயிரைக் கொடுக்கவும் தயாரா இருக்கோம்."

கோபாலனின் பேச்சைக் கேட்டுக் கொண்டே குட்டப்பமாரார் முற்றத்துக்கு வந்தார். அவர் குமாரன்தம்பியை நெருங்கி மிகவும் தாழ்ந்த குரலில் கூறினார். "புதுமனை தந்த்ரி நாளைக்கு கொட்டாரத்துல பூஜை செய்ய வரப்போறாராம். நாளைக்கே கொட்டாரத்தைப் பிரிக்கப் போறாங்களாம்."

"இதைச் சொன்னது யார்?" - குமாரன்தம்பி சாய்வு நாற்காலியிலிருந்து துள்ளியெழுந்தான்.

"ராத்திரி பூஜை முடிஞ்சு, கிழக்குப்புற சன்னிதியில நின்னுட்டிருந்தபோது களீக்கல் வீட்டுக் காரியஸ்தரைப் பார்த்தேன். அவர் புதுமனை இல்லத்துக்குப் போய்ட்டு வர்றதாச் சொல்லி, இந்த விவரத்தைதச் சொன்னார். நாளைக்குக் கொட்டாரத்துல கருடபூஜை. மறுநாள் சர்ப்பக்காவுல சடங்குகள். இரண்டு கர்மங்களையும் புதுமனை தந்த்ரி செய்யப் போறாராம்."

குட்டப்பமாரார் சொன்ன செய்தியைக் கேள்விப்பட்ட குமாரன்தம்பி அசைவற்றுப் போனான். மனத்தின் சிந்தனா சக்தி முற்றிலுமாக வடிந்து போய்விட்டதாக அவனுக்குத் தோன்றியது.

"எஜமான், நீங்க தைரியமா இருக்க வேண்டாமா? நீங்களே ஒரு பெரிய மந்திரவாதி? நாளைக்கு பூஜை நடக்காம இருக்க முதல்ல வழி கண்டுபிடியுங்க. நாங்க எல்லோரும் உங்களுக்குத் துணையா இல்லையா?" - குட்டப்பமாரார், குமாரன்தம்பிக்கு தைரியம் ஊட்டினார்.

"நாங்க என்ன செய்யணும்னு சொல்லுங்க. எதையும் செய்யத் தயாரா இருக்கோம்!" - முற்றத்திலிருந்த மற்ற சிப்பந்திகள் அவனுக்கு முன்பாக வந்து நின்று கூறினர்.

"சரி, நான் இதோ வந்துடுறேன். யாரும் தூங்கப்போகாம காத்திருங்க. நாம ஒரு இடம் வரைக்கும் போக வேண்டியிருக்கும்."

- எல்லாரையும் பார்த்துக் கூறிய குமாரன்தம்பி மந்திரப் பிரம்பையும் விளக்கையும் எடுத்துக் கொண்டு சர்ப்பக்காவை நோக்கி நடந்தான்.

மந்திர மண்டபத்திற்குள் நுழைய முயன்ற குமாரன்தம்பி ஒருகணம் திடுக்கிட்டான். மண்டபத்தின் மையத்தில் ஒரு நிலவிளக்கிலிருந்து எண்ணெயை நக்கிக் குடித்துக் கொண்டிருந்த ஒரு பூனை அவனுக்கு முன்னால் தாவிக் குதித்தது.

"அபசகுனம்!" - குமாரன்தம்பி முணுமுணுத்தான்.

மந்திரமண்டபத்தில் அமர்ந்து தியானத்தைத் தொடங்கினான். நள்ளிரவுவரை தியானம் தொடர்ந்தது.

வார்த்தாளீயின் நிழல்வடிவம் கண்ணுக்குத் தென்பட்டதும் குமாரன்தம்பி பிரார்த்தனை செய்தான். "சக்தி ஸ்வரூபிணி, என்னைக் காத்தருளுங்க. இந்த அக்னிப் பரீட்சையில நான் வெற்றி பெற உதவுங்க!"

நிழல் வடிவம் மறைந்ததும் அவன் மந்திரமண்டபத்திலிருந்து வெளியே வந்தான். குருவின் சமாதிக்கு முன்பாக நின்று கரகரத்த குரலில் கூறினான்: "கொட்டாரத்துக்குள்ள நுழையக் கூடாதுன்னு நீங்க சொன்னது நல்லாவே ஞாபகத்துல இருக்கு. ஆனால், நான் என்னைக் காப்பாத்திக்கிறதுக்காக அங்க போயே திரணும். அங்கிருந்து பீடம், உடைவாள், ஓலைச்சுவடிகள் உட்பட எல்லாத்தையும் எடுத்துட்டு வர்றதைத் தவிர வேறு எதுவும் செய்யப் போறதில்லை. குருவே அதுக்கு நீங்க என்னை ஆசீர்வதிக்கணும்!"

குஞ்ஞம்பு நாயரின் குரலில் ஓர் அசரீரி உயர்ந்தது: "வேண்டாம் குமாரா, உன் பிடிவாதம் நல்லதுக்கில்ல. நீ கொட்டாரத்திற்குப் போறது ஆபத்தான செயல்! மந்திரப்பிரம்பு உன் கைவசம் இருக்கும்வரை உன் உயிருக்கு ஆபத்து இருக்காதுங்கிறது உண்மைதான். இருந்தாலும் கருடனோட இருப்பிடத்திற்குப் போறது புத்திசாலித்தனமில்ல. சோதிச்சுப் பார்க்க முற்படாம மந்திரமண்டபத்திற்குள்ள உட்கார்ந்து வார்த்தாளீயைத் தியானம் செய்!"



குமாரன்தம்பிக்குத் துயரமும் கோபமும் ஒன்று சேர்ந்து வந்தது: "நீங்களும் பப்புமாமா மாதிரியே எல்லாத்துக்கும் முட்டுக்கட்டை போடுறீங்க! என் எதிர்காலமே ஆபத்திலிருக்கு குருவே. கொட்டாரத்தைப் பறிகொடுத்த பிறகு நான் எதுக்காக உயிர் வாழணும்? என் எதிரியான சேகரன்தம்பி மந்திர ஓலைச்சுவடிகளைக் கைப்பற்றக்கூடாது. எனக்கு என்ன வேணுமானாலும் ஆகட்டும். நான் இதோ கொட்டாரத்துக்குப் புறப்படுறேன்" - இரு கைகளையும் கூப்பி வணங்கிவிட்டு, வேகமாக வீட்டை நோக்கி நடந்தான்.

குட்டப்பமாராரைத் தவிர ஏனையவர்கள் நல்ல தூக்கத்தில் ஆழ்ந்திருந்தனர். குமாரன்தம்பி எல்லாரையும் எழுப்பினான்.

"நாம உடனடியாக கொட்டாரத்துக்குப் போகணும். நீங்க யாரும் எதுக்காகவும் பயப்பட வேண்டியதில்லை. எல்லோரும் படிப்புரைக்கு வெளியிலேயே நின்னுக்கங்க போதும். நான் மட்டும் உள்ளே நுழைஞ்சு சில பொருள்களை எடுத்துட்டுத் திரும்பிடுறேன்."

குமாரன்தம்பி மந்திரப்பிரம்பையும் கைவிளக்கையும் எடுத்துக்கொண்டு முன்னால் நடந்தான். மற்றவர்கள் பயந்து நடுங்கியபடி அவனைப் பின்தொடர்ந்தனர். உலர்ந்த இலைச் சருகுகள் சலசலத்தபோதுகூடச் சிலர் பயக்குரல் எழுப்பினர்.

கொட்டாரப் படிப்புரையின் முன்புறத்தை அடைந்த குமாரன்தம்பி ஒருதடவை திரும்பிப் பார்த்தான். தன்னுடன் வந்தவர்கள் சற்று தொலைவில் நிற்கின்றனர். அவனுக்குக் கோபம் தோன்றியது: "பயந்தாங்குளிகளே, நீங்க இந்தப் படிப்புரைகிட்ட வந்து நில்லுங்க. எனக்காக உயிரைக் கொடுக்கவும் தயாரா இருக்குறோம்னு சொன்னவங்கதான நீங்க? இப்படி வந்து நில்லுங்க!"

கோபாலனும் மற்றவர்களும் படிப்புரையை நெருங்கினர். அவர்கள் ஏற்கெனவே மிகவும் பயந்து போயிருந்தனர்..

வார்த்தாளீயைத் தியானித்த பிறகு படிப்புரையைத் திறந்த குமாரன்தம்பி உள்புறத்தில் நுழைந்தான். அவனது மனத்திலிருந்து பயம் சுத்தமாக விலகி விட்டிருந்தது.

மண்மறைந்த தறவாட்டுக் காரணவர்களது சமாதிகளின் முன்பாக இடம்வலம் பார்க்காமல் பூஜையறையை நோக்கி நடந்தான். அவனது நாவிலிருந்து வார்த்தாளீ மந்திரம் உதிர்ந்து கொண்டிருந்தது.

மந்திரப்பிரம்பை வீசியபடி குமாரன்தம்பி அறப்புரை எனப்படும் பூஜையறை வாசலை நெருங்கினான்!

## 62

குமாரன்தம்பி வாசற்படியில் விளக்கை வைத்தான். மந்திரப் பிரம்பை இடதுபுறக் கட்கத்தில் இடுக்கிக் கொண்டு மடியிலிருந்த சாவியை எடுத்து பூஜையறைக் கதவைத் திறந்தான்.

கிழக்குப்புறத்திலிருந்து சட்டென்று வீசிய காற்றால் விளக்கு அணைந்தது. திடுக்கிட்ட குமாரன்தம்பி, மந்திரப்பிரம்பைக் கையில் பிடித்தான். வார்த்தாளீயை மனமுருகித் தியானித்தான்.

அறை இருளில் மூழ்கியிருந்ததால் எதையும் தெளிவாகப் பார்க்க முடியவில்லை. மந்திரப்பிரம்பை முன்புறமாக நீட்டி வலதுகாலை மெதுவாக அறைக்குள் வைத்தவுடன் இறுக்கமாகப் பிடித்திருந்த பிரம்பு சட்டென்று மறைந்தது. அவன் மிரண்டான்!

அறைக்குள் நுழைந்த பிறகு பின்வாங்குவது புத்திசாலித்தனமல்லவென்று குமாரன்தம்பிக்குத் தோன்றியது. எவ்வளவு விரைவில் முடியுமோ, அவ்வளவு விரைவில் ஓலைச்சுவடிகளையும், உடைவாளையும், பீடத்தையும் தேடி எடுத்து வெளியேறித் தப்பித்துவிட வேண்டுமென்று அவன் மனம் பரபரப்புடன் தீர்மானித்தது.

ஓலைச்சுவடிகளைத் திரும்பக் கொண்டுவந்து வைப்பதற்காகக் கடந்த முறை வந்தபோது கேட்ட சிறகடி ஓசையோ, சங்கொலியோ



இன்று கேட்கவில்லை. அன்று கண்களுக்குத் தெரிந்த ஒளிப்பிழம்புகூட இன்று தெரியவில்லை. இதெல்லாம் அவனுக்குச் சற்று ஆறுதலாகவுமிருந்தன.

குமாரன்தம்பி தரையில் அமர்ந்து இரண்டு கைகளையும் தரையில் அலையவிட்டுப் பீடத்தின் இருப்பிடத்தை அறிந்து கொள்ள முயன்றான். பீடத்தின்மீது கைபட்ட பிறகே அவனுடைய மூச்சுக் காற்று சீரானது.

பீடத்தின் மேற்புறத்தில் கைகளால் துழாவினான். துணி மூட்டையில் கை பதிந்தது. பட்டுத்துணியில் முடிந்து வைத்துள்ள ஓலைச்சுவடிகளின் மீது தன் கை பதிந்துள்ளது என்று உணர்ந்தவுடன் அதை எடுத்து மடிமீது வைத்துக்கொண்டான். இனி அடுத்தது உடைவாள்... பிறகு காலியான பீடம்!

திடுமென்று சலங்கைகள் ஒலியெழுப்பின. அவன் இதை எதிர்பார்க்கவில்லை. குமாரன்தம்பிக்கு மூச்சிரைக்கத் தொடங்கியது.

அறைக்குள் கண்ணைக் கூசச் செய்யும் ஒளி பரவியது. அசைய முடியாதபடி சிலை போலான குமாரன்தம்பியின் உடம்பு இடைவிடாமல் நடுங்கிக் கொண்டிருந்தது.

கனமான சிவப்புப் பட்டுத் துணியாலான மார்புக் கச்சை கட்டியிருந்த அழகிய நடுவயதுப் பெண்மணி ஒருத்தி வலதுகையில் வாளை உயர்த்திப் பிடித்தபடி திடுமென்று வெளிப்பட்டதும் குமாரன்தம்பி நடுக்கத்தின் உச்சத்துக்கே போய்விட்டான்!

கொட்டாரத்தில் குடியிருக்கும் குடும்ப யக்ஷியைப் பற்றி நிறையக் கேள்விப்பட்டிருந்த குமாரன்தம்பி, கூப்பிய கரங்களுடன் இறைஞ்சும் குரலில் மன்னிப்பு கேட்டான்: "யக்ஷித்தாயே! என்னை மன்னித்தருளணும்!"

"குடும்பத்துரோகி! நீ இப்ப வார்த்தாளீயின் சேவகனில்லையா? அவளைக்கூப்பிட்டு வேண்டிக்க. அந்தத் துர்த்தேவதை உன்னைக் காப்பாத்தட்டும்" யக்ஷியத்தாய் ஆவேசத்துடன் ஆடியபடி உரத்த குரலில் பேசியது.

யக்ஷித்தாயிடமிருந்து எந்தவிதமான உதவியும் கிடைக்காது தென்பதைத் தெரிந்துகொண்ட குமாரன்தம்பி பரிசோதனை முயற்சியாக வார்த்தாளீயை மனத்தில் தியானித்தபடி, வார்த்தாளீ மந்திரம் ஜபித்தான். பயந்து நடுங்கியபடி நின்று கொண்டிருக்கும் வார்த்தாளீயின் வடிவம் அவனது மனக்கண்களுக்குத் தட்டுப்பட்டது. தனக்கு உதவமுடியாத நிலையிலுள்ள துர்த்தேவதையால் தன்னைக் காப்பாற்ற முடியாது என்பது அவனுக்குத் தீர்மானமாகத் தெரிந்தது.

'நீ ஒருபோதும் தறவாட்டு நிலவறைக்குள்ளேயோ, கொட்டாரத்துக்குள்ளேயோ நுழையக்கூடாது!' குருவின் உபதேசம் அவனது காதுகளில் இடியோசை போல் முழங்கியது. அவன் அதைக் செவிமடுக்காமல் போனதற்காக பச்சாதாபப்பட்டான்.

"என்ன, வார்த்தாளீ உன்னைக் கைவிட்டுடுச்சா?" யக்ஷித்தாய் கோபக் குரலில் கேட்டார்.

"என்னோட எல்லாத் தவறுகளையும் மன்னிச்சிடுங்க தாயே! நான் இதோ இந்த ஓலைச்சுவடிகளைக்கூட எடுத்த இடத்திலயே வைச்சிடுறேன்" - சொல்லியபடி தன் மடியில் கை வைத்தான்.

"தேவையில்லை! அதனால இனிமேல் யாருக்கும் எந்தவிதமான பயனும் கிடையாது. ஓலைச்சுவடிகளும், நீயும், நானும், இந்தக் கொட்டாரமும் எல்லாம் ஒட்டுமொத்தமா இன்னிக்கு ராத்திரியில அழிஞ்சு போகப் போறோம்!" யக்ஷித்தாய் ஆவேசத்துடன் பேசினார்.

குமாரன்தம்பிக்குத் தன் நெஞ்சு வெடித்துவிட்டது போலவும், தலை சுற்றுவதாகவும் தோன்றியது. எழுந்திருக்க முயன்ற அவனது முயற்சி வியர்த்தமானது. கால்கள் சோர்ந்து போயிருந்தன.

குரல் அடைத்துப் போன தொண்டையுடன், உடலின் இயக்கத்தை ஒட்டுமொத்தமாக இழந்துவிட்டவனாக, பீதியேறிய விழிகளுடன் அப்படியே உட்கார்ந்து விட்டான் குமாரன்தம்பி.



எப்படியும் உயிர் தப்பித்துவிட வேண்டுமென்ற சிந்தனை எழுந்தவுடன், கை கால்களை மிகுந்த சிரமத்துடன் ஒரளவுக்கு அசைக்க முடிந்தது. அவன் மெதுவாக வாசற்படியை நோக்கி ஊர்ந்தான்.

வாசலுக்கு வெளியே தலையை நீட்ட முடிந்ததும் இனி எப்படியும் தப்பித்து வெளியே விழுந்துவிடலாம் என்றும் நினைத்தான்.

இரண்டு உள்ளங்கைகளையும் வாசற்படியில் அழுத்திப் பதித்து திண்ணைப் பக்கமாக நகரத் தொடங்கியபோது, நெஞ்சைப் பிளக்கும் விதத்தில் சிறகடியோசை கேட்டது.

தனக்கு முன்னால்-மிகவும் நெருக்கத்தில் சிறகசைத்தபடி நிற்கும் கிருஷ்ணப்பருந்தைக் கண்டதும் அவன் கண்களை இறுக மூடிக்கொண்டான். ஓர் அலறலுடன் தலைகுப்புற மீண்டும் பூஜையறைக்குள்ளேயே மல்லாந்து விழுந்தான். அவனுக்கு நேராகப் பாய்ந்து வந்த கிருஷ்ணப்பருந்து அவனது நடுநெற்றியில் வலுவாகக் கொத்தியது.

உயிர் வேதனையுடன் அலறியழுது கொண்டிருந்த குமாரன் தம்பியின் முகத்திலும் மார்பிலுமாக கிருஷ்ணப்பருந்து கோபாவேசத்துடன் கொத்திக் குதறிக் கொண்டிருந்தது.

*"க்ஷிப ஓம் ஸ்வாஹா"*-கருடனின் அலகுத் தாக்குதலேற்று மரணத் தறுவாயை நெருங்கிய குமாரன்தம்பி கருட பஞ்சாக்ஷரீ மந்திரத்தை ஜபித்துக் கொண்டிருந்தான்.

மந்திர ஜபம் படிப்படியாக பலவீனமான முனகலாக மாறியது. இறுதியாக வெளிவந்த "அம்மா..." என்ற அழைப்புடன் அந்த முனகலும் முற்றுப் பெற்றது!

ரத்தத்தில் நனைந்து குளித்த குமாரன்தம்பியின் உடல் விரைவிலேயே அசைவற்றுப் போனது.

ஆவேசம் கொண்டு ஆடிக் கொண்டிருந்த யக்ஷித்தாயின் முகம் ரௌத்திராகாரமாக மாறியது. பீடத்திலிருந்து குதித்த யக்ஷித்தாய் பீடத்தை வலம் வந்தபடி பூமி அதிர ஆடிக் கொண்டிருந்தார்.

குமாரன்தம்பிக்கு ஏதோ ஆபத்து நேர்ந்துவிட்டதாக கோபாலனுக்கும் அவனது கூட்டாளிகளுக்கும் புரிந்தது. அழுகையும் அலறலும் மாறிமாறிக் கேட்டுக் கொண்டிருந்ததால் பயத்தில் ஏற்கெனவே நடைப்பிணம் போலாகியிருந்த அவர்கள் படிப்புரையிலேயே நின்று கொண்டிருந்தனர். எனவே கொட்டார முற்றத்திற்குச் செல்ல அவர்களில் எவருக்கும் தைரியம் ஏற்பட வில்லை.

"மாராரே! இப்ப எந்தவிதமான சத்தமும் கேட்கலையே. எஜமானுக்கு என்ன ஆகியிருக்குதோ... கடவுளுக்குத்தான் தெரியும். எவ்வளவு நேரமா நாம இங்கேயே நின்னுட்டிருக்கிறோம். என்ன ஆனாலும் சரி, உள்ள போய்ப் பார்த்துட வேண்டியதுதான்." கோபாலன் ஒரு முடிவுக்கு வந்தவனாக உட்புறம் காலெடுத்து வைத்தான்.

"நானும் வர்றேன். வேலாயுத ஸ்வாமி... நீதான் எங்களைக் காப்பாத்தணும்." என்றபடி குட்டப்பமாராரும் கோபாலனைப் பின்தொடர்ந்தார். அதன் பிறகு ஒவ்வொருவராக உள்ளே நுழைந்து கொட்டார முற்றத்தை அடைந்தனர்.

பூஜையறை வாசலை நோக்கி மிக மெதுவாக நடக்கத் தொடங்கிய கோபாலன் மற்றும் அவனது கூட்டாளிகளை சட்டென்று முன்புறமாகப் பாய்ந்துவந்த கிருஷ்ணப்பருந்து தாக்கத் தொடங்கியது. கோபாலனது தலையில் கருடனின் முதல் கொத்து விழுந்தது. அடுத்தது குட்டப்பமாராரின் முகத்தில். வலியால் துடித்த கோபாலனும், குட்டப்ப மாராரும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு வந்தவழியே ஓடத் தொடங்கினர். அதற்குள் மற்றவர்கள் இடம்பெயர்ந்து தப்பித்து விட்டிருந்தனர்.

"நாம களீக்கல் வீட்டுக்குப் போய் தகவல் சொல்லலாம்" கிழக்குத் திசை நோக்கி ஓடிக் கொண்டிருந்த கோபாலன் கூறினான்.

"அப்படியே செய்யலாம்" குட்டப்பமாராரும் அதை ஆமோதித்தார்.



அவர்கள் இருவரும் வேகமாகக் களீக்கல் வீட்டை அடைந்து, சேகரன்தம்பியைக் கூவி எழுப்பி எல்லா விவரத்தையும் தெரிவித்தார்கள்.

"இப்படிச் செஞ்சுட்டீங்களே கருடமூர்த்தி!" என்று அலறிய சேகரன்தம்பி, மற்ற குடும்ப உறுப்பினர்களை எழுப்பினான்.

கோபாலனும், குட்டப்பமாராரும் அங்கிருந்து கொச்சுபுத்தூர் வீட்டை நோக்கி ஓடினர்.

சேகரன்தம்பியும் காரியஸ்தரும் கொட்டாரத்தை நோக்கிப் பாய்ந்தனர். விழித்தெழுந்த உற்றார் உறவினர்களும் அவர்களைப் பின்தொடர்ந்தனர்.

பெருங்குளத்தை நெருங்கியபோது அவர்கள் கண்ட காட்சி - தறவாட்டுக் கொட்டாரம் தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது! அவர்கள் குளத்தின் வடக்குபுற ஓரமாகக் கொட்டாரத்தை நோக்கி ஓடினர்.

உயர்ந்து எழுந்த நெருப்புக் கொழுந்துகளின் வெப்பத்தைப் பொருட்படுத்தாமல் சேகரன்தம்பி படிப்புரையின் முன்புறம் சென்றான். நெருப்பின் வெப்பம் தாங்காமல் தயக்கத்துடன் விலகிய காரியஸ்தரைப் பார்த்து சேகன்தம்பி உரத்த குரலில் கூறினான். "நன்றிகெட்டவனே! தயங்காம என் கூட வா. உள்ளே அகப்பட்டிருக்கிற குமாரன்தம்பியைக் காப்பாத்த முடியுதான்னு பார்க்கலாம்!"

பயந்து நடுங்கிய காரியஸ்தன் அசையாமல் அப்படியே நின்றான்.

தியாக இயல்புகொண்ட மனம் தந்த தைரியத்துடன் படிப்புரைக்குள் நுழைந்த சேகரன்தம்பி திடுக்கிட்டான். அவனைத் தடுத்துக்கொண்டு சிறகுகளை விரித்து நின்று கொண்டிருந்தது கோபம் கொண்ட கிருஷ்ணப்பருந்து!.

'எது நடந்தாலும் சரி' என்று நினைத்தவனாக சேகரன் முன்புறம் காலெடுத்து வைக்க முயன்றபோது கிருஷ்ணப்பருந்து

சம்கார ருத்திரனைப் போல் அவனை நோக்கிப் பாய்ந்தது. சேகரன் தம்பி பின்புறமாக நகர்ந்தான்.

புத்தூர் தறவாட்டின் மாந்திரீகச் சேமிப்புக் கிடங்கும், ஆராதனா மூர்த்திகள் மற்றும் பித்ருக்களின் இருப்பிடமுமான கொட்டாரம் எரிந்து சாம்பலாகும் காட்சியை, கண்ணீர் சிந்தியபடி வேடிக்கை பார்க்க மட்டுமே சேகரன்தம்பி மற்றும் உறவினர்களால் முடிந்தது.

ஆகாயத்தை நோக்கி எழுந்த தீநாக்குகள் பிரபஞ்சத்தையே விழுங்க முற்படுவதுபோல் வேட்கையுடன் உயர்ந்தன.

அண்டை அயல் வீடுகளில் உறங்கிக் கொண்டிருந்தவர்களை எல்லாம் அக்னிபகவானின் சம்காரத்தாண்டவம் எழுப்பிவிட்டது. விழித்து எழுந்த ஊர் மக்கள் நெருங்க முடியாதபடி நெருப்பின் வெப்பம் அவ்வளவு கடுமையாக இருந்தது.

குஞ்ஞுக்குட்டித்தங்கச்சியும், மகேஸ்வரிதங்கச்சியும் கொச்சுராமனும் அலறியடித்தபடி ஓடி வருவதற்குள் கொட்டாரமே ஏறத்தாழ வெறும் கனல்கங்குக் கோட்டையாக மாறியிருந்தது. புத்தூர் தறவாட்டின் கடைசி மாந்திரீகனாக இருந்த குமாரன்தம்பியின் உடம்பும் கனல் கங்குகளுடன் கங்காகக் கலந்து விட்டிருந்தது.

நெஞ்சு வெடித்து விடுவது போல் அலறிப் புலம்பிக் கொண்டு கனிந்த நெருப்புக் குவியலுக்கிடையிலிருந்து மகனைத் தேடிக் கண்டுபிடிக்கும் வேட்கையுடன் பாய்ந்த குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் அக்னிப் பிரவேசத்தை உறவினர்கள் வலுவுடன் தடுத்தனர்.

"ஐயோ மகனே... குமாரா!" - நெஞ்சம் உருகிவழிவது போலிருந்தது அந்தக் குரலின் தோரணை.

கொட்டார முற்றத்தில் வட்டமிட்டுப் பறந்து கொண்டிருந்த கிருஷ்ணப்பருந்து, குஞ்ஞுக்குட்டித்தங்கச்சிக்கு ஆறுதலளிப்பது போல் அவளுக்கு முன்பாகப் பறந்து வந்தது.



"என் மகனை எதுக்காகக் கொன்ன கருட பகவானே?"- விசும்பி அழுது கொண்டு அவர் கேட்டார். பிறகு கைகளை உயர்த்தி, கருடனை வணங்கினார்.

குஞ்ஞுக்குட்டித் தங்கச்சியின் தலைக்கு நேர்மேலாக வட்டமிட்டுப் பறந்த பிறகு பக்ஷிராஜாவான கிருஷ்ணப்பருந்து மேற்புறமாக உயர்ந்தது... மறைந்தது...

**(மாந்திரீகக் காலகட்டமும் முடிவடைந்தது)**



---

*பின்குறிப்பு: தீப்பிடித்த கொட்டாரத்திலிருந்து மிகுந்த சிரமத்துடன் வெளியேறித் தப்பிக்கும் குமாரன்தம்பி, தனது சகோதரி மகனான கொச்சுராமனுக்கு மந்திரோபதேசம் செய்த பிறகு உயிர் விடுவதாக 'ஸ்ரீ கிருஷ்ணப் பருந்து' படத்தின் இறுதிக்கட்டக் காட்சி அமைக்கப்பட்டுள்ளது.*